பிள்ளையார் துணை.

தாயுமான சுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு

இஃது

கோட்டாறு.

சதாவதானம் செய்குத்தம்பிப்பாவலரவர்கள்

முன்னிலையில் பரிசோதிக்கப்பட்டது.

சுத்தப்




பதிப்பு

K. V. துரைசாமி முதலியாரவர்களால்

ஸ்ரீ சுப்பிரமணிய விலாசம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.

1923.

Tittle Page Printed by A. D Press, Madras



இலாஹி

குணங்குடி

மஸ்தான்சாகிபு அவர்கள்பேரில்

பகாவித்வான் திருத்தணிகை

சரவணப்பெருமாளைய ரவர்கள்பாடிய

# நான்மணிமாலை.



## காப்பு.

### நேரிசை வெண்பா.

எண்சீர்க் குணங்குடியா னென்னுங் குருமணிமேல்
வண்சீர்த் தமிழ்நான் மணிமாலை—பண்சீர்கொள்
கற்பனைசேர் பொற்பினகில் கைக்குப் பல்வகையாங்
கற்பனைதீர் சிற்பரன்றாள் காப்பு.

## நூல்.

### நேரிசை வெண்பா.

பொன்றாதி யாம்பொய்ப் பொருளினுற்புன்சகத்தை
மின்றென் றெள்ளா விரகிலிகே—னின்னே
குணங்குடியா னஞ்செய்த குறிவாளி கல்க
வணங்குடியா னஞ்செய் வழுத்து. (க)

## கட்டளைக் கலித்துறை.

வழுத்துந்தொழும்படையன்பமைந்தோர்தமைமாலிலருள்
பழுத்துங்குணங்குடியான்கரைகாண்டகுபண்புடைத்தாய்
முழுத்தும்பவககடலைக்கடப்பித்திசைமுற்றுறவே
பழுத்தும்கரைபெறவில்லாதவானந்தமாங்கடலே. (௨)

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கடல்சூழ் புவியி லுளத்திருளைக்
 கருணை யொளியி னாற்களைந்து
விடல்சூழ் பவரிற் குணங்குடியான்
 மிக்கோ னெனற்கோர் தடையுளதோ
மிடல்சூழ் புறத்தின் விழிமறைத்து
 மேவு மிருளை விரிகதிரா
லடல்சூழ் பொருள்கள் பலவுறினு
 மலரி யுபர்வாய்த் தோன்றுறுமே. (௩)

## நேரிசை யாசிரியப்பா.

தோன்றுபல் பாதகத் தொகுதியா னைந்தலை
யீன்று வளர்க்குமா வென்னுமிக் கலிதனிற்
காட்சியிற் புலப்படாக் கடவுளுண் டெனலு
மாட்சியி னவனையா மருவலுண் டெனலு
முடலமீ தன்றிவே றுயிருள தெனலுந்
துயிலுண வொழித்துத் தொடர்புல னடக்கிப்
பயிலு மனோலயம் பண்ணலுண் டெனலுங்

கண்டவர் யாரிவை கட்டுரை யாமெனக்
கொண்டரு நூலையுங் குருவையும் பழித்துத்
தவத்தொழில் சிறிதுந் தழுவாது கைவிட்
டவத்தொழின் முழுவது மஞ்சாது புரியுங்
கொடியவர் கெட்டுளங் குலைந்துடல் விதிர்ப்ப
வொடிவரு பத்தியி னுற்றவர் தமக்கெலாங்
கடவுளை யவனடி காண்டகு திறத்தினைச்
சடமுறு முயிரவன் றன்னின்வே றன்மையை
வியத்தகு மைம்புலன் வென்றுமன் னடக்குறு
நயத்தகு மியோகமெஞ் ஞானநல் லியல்பினை
யையந் திரிபற வருளினு னுள்ளங்
கையுறு நெல்லிக் கனியென வுணர்த்து
மிணங்கு மெய்ப் புகழொடு மிசைந்தான்
குணங்குடி யானெனக் குலவு மாதவனே. (௪)

### நேரிசை வெண்பா.

மாதவஞ்சேர் மேலோர் வழுத்துங் குணங்குடியான்
நீதவஞ்சேர் நம்மவித்தை தீர்க்குமெனக்—காதல்
விரைந்துபுகழ்ந் தோரிகழ்ந்தோர் மேவுவர்மெய்ப் போதம்
வரைந்து பிழைக்கும் வழி. (௫)

### கட்டளைக் கலித்துறை.

வழிசேர் குணங்குடி யானெனு மாரியன் மல்கருள்கூர்
விழிசேர் திருமுகத் திங்கள்கண் டார்க்கன்றி மேவலுண்டோ

பழிசேர் மனவிந்து காந்த முறுகுறும் பண்பினொடு
மொழிசே ரஞ்ஞான மெனுமிருணீங்கு முறைமையுமே.

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

முறைமுறைவந் தரசரெல்லாம் வணங்கச் சீர்சான்
முடிபுனைந்து படவிமுழு தாளும் பேறு
மறைதருமோர் வீட்டினுந்தே யவாவும் மேவி
யரைக்கருங்கோ சிகமொரீஇத்துக் கந்தை சூழ்ந்து
பொறையுறுநின் றிருவருள்பெற் றைய மேற்றுண்
புண்ணியரா லொருபொருளென் றெண்ணற் காமோ
குறைவறுநற் புகழ்பரம யோகி யென்னுங்
குணங்குடியா னேவிளங்கக் கூறு வாயே. (எ)

நேரிசை யாசிரியப்பா.

வாயினாற் பலநூல் வகைதெரிந் துரைத்துங்
காயமேல் வெண்பொடி கவினுறப் பூசியுஞ்
செய்யகல் லாடையைத் திகழ்ந்திட வுடுத்துந்
துய்ய சடைமுடி துலைதர முடித்துந்
தண்டுக மண்டலஞ் சால்புறத் தாங்கியு
மண்டல மிசைவிரி மான்றோலி னிருந்தும்
படர்புலச் சூறையிற் படுசிறு துரும்பென
விடர்கெழு மனத்தரா யிருக்கின்றனர் பலர்
நெளிதிரைக் கடல்சூழ் நெடும்பெரும் புவிமிசை
யளிவளர் குணங்குடி யானெனு மமல

சாற்றுமச் சாதனந் தானென் றிலாமலும்
போற்று முனதருள் பொருந்திய வொருசில
ரொருதன தியல்புணர் திருவினை யகற்றி
மூவா சைத்திற மேவாது விடுத்து
நாற்கதி நனுகுறு மேற்கதி விருப்பி
யைம்பொறிக் கெதிர்வற வெம்புல னடக்கி
யறுசம யங்களி னெறிநிலை தேறி
யெழுபிறப் பிகந்ததென் விழுமிய செருக்கிற்
பத்தியாற் படரெலா மொருவி
நித்திய நந்த நிலையரா யினரே. (அ)

நேரிசை வெண்பா.

ஆயுங்கா லன்பி னழியாத் துணையாகுங்
காயுங்கா லன்படர்ந்து காதவுடன்—மாயுங்கா
ணீதிக்கும் போயதனை நேராங் குணங்குடியான்
போதிக்கும் போதப் பொருள். (௯)

கட்டளைக் கலித்துறை.

பொருட்செல்வம் புல்லிய தென்றே விடுத்திந்தப் பூதலத்தி, னருட்செல்வ மெய்துங் குணங்குடி யானருளாதரித்தோர், தெருட்செல்வ நன்கெய்தி யைம்புலன் மாளச் செருத்தினியா, மிருட்செல்வ மல்லமெனவே மகிழ்வுற் றிருப்பர்களே. (௧0)

### எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கள்ளுண்டுங் கொலைபுரிந்துங் கபடஞ் செய்தும்
கணிகையர்தம் புணர்ப்பினுறு காமநோயா
லெள்ளுண்டுந் திரிகொடும்பா தகத்தோர் தாமு
மிணையில்குணங் குடியானே யிறைவா வுன்றன்
விள்ளுண்ட கமலவடி படுந்தூளொன்று
மேற்படப்பெற் றிடினவர்வெவ் வினைக ளெல்லாந்
தள்ளுண்டு சிறுசிலையொன் றெடுத்து வீசத்
தருநிரைபுட் குழாமெனவே பறந்து போமே. ()

### நேரிசை யாசிரியப்பா.

மேதகு நிலையினை மேவிவாழ் வித்தக
வோதக விருடனை யொழிக்கு மாமணியே
யன்பினர் மகிழ்கொள வருள்பொழி முகிலே
யின்பநன் குதவுறு மினியதெள் ளமுதே
துகளற வோங்கிய துறவினர்க் கரசே
திகழறந் தாங்குபு சேர்குணங் குடியாய்
நின்னை வணங்கினோர் நெஞ்சா லயந்தொறு
முன்னை யிருத்திவே றுறைகின் றனையா
லொருவனோ பலரோ வொருநீ
தெரிதரப் புகல்கநின் றிருவுள மகிழ்ந்தே. (கஉ)

### நேரிசை வெண்பா.

தேவருக்கு மெய்தரிய சிற்சுகத்தைத் தற்புகழ்ந்தோர்
யாவருக்கும் பாரிளெழி யாதெனிதி—னீவனயங்

தொப்பில் பெருந்தவத்தி னோங்கு குணங்குடியான்
செப்பும் வினையனைத்துந் தீர்ந்து. (கந)

கட்டளைக் கலித்துறை.

துதியும் பழியு மமுதமும் புற்கையுந் துப்புமப்பு
நிதியுஞ் சிலையுங் கலவையுஞ் சேறு நிகருறவே
வதியுந் திறத்திற் குணங்குடி யானருள் வாய்த்தவன்பாற்
பதியுங் கருத்துடையார்கள் கருத்துடைப் பார்கண்மெய்யே

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மெய்யுறுசீர்க் குணங்குடியா னெனும்பவனே யாரினில் விசிநீர் வைப்பி
னரியுறுபித் தொடுவாத மல்கியைய மேலிடினு நாடி நோக்கி
யுய்யுறுநன் னிலைபெறவோர் மாத்திரைதன் னுளமிரங்கி யுரைத்தல் செய்யும்
பொய்யுறுமிப் பவநோயை யொழித்திணையி லாதசுகம் பொருத்து மாறே. (கரு)

நேரிசை யாசிரியப்பா.

மாறுகொண் டென்மன மாகிய பரியை
வீறுகொண் டவாவெனு ம் வீரனிங் கொருவ
னழிக்கா றெனுங்கல் லணையிசை யார்த்தாங்
கிழுக்கா றுடைசின மெனுங்கலி னஞ்சேர்த்
தளியறு செருக்குமிக் காகிமே லிவர்ந்து

வளியெனும் வாதுவன் வாய்ந்துடன் ஞெடர்தரப்
பொறியெனுங் கொடுவழி புகுந்திடச் செய்தலு
நெறிபிறழ்ந் தப்பரி நீள் புலக் கான்புகுந்
தரிவையர் மயக்கெனு முளற்றினுள் வீழ்ந்துந்
தெரிபொன் னெனும்கனைத் தீமிதித் தழுங்கியும்
பகர்மண் ணெனுங்கொடும் பாறைதாக் குற்று
மிகுபெருந் துன்பொடு மெலிந்துழல் கின்றதா
லின்குணங் குடியா னெனுந்தவர்க் கரசே
நான்குமற் றதனை நீ நல்வழி திருப்பியே
யருளெனும் வாளினவ் வீரனைத் துமித்துக்
கருதுமக் கல்லனை யாதிகள் களைந்தொழித்
தென்வச மாக்குவை யெனின்யா
னின்வச மாகுவ னினதியல் புகழ்ந்தே. (கசு)

நேரிசை வெண்பா.

புகழ்ந்து குணங்குடியான் பொங்கிசையை நெஞ்சந்
திகழ்ந்துபுல வீர்பாடல் செய்யி—னிகழ்ந்து
மலத்திருக்கை மாற்றிநிலை மாறுகின் பெய்தி
நலத்திருக்கை நல்கு நயந்து (கள)

கட்டளைக் கலித்துறை.

நயமேவு கஞ்ச முகமுங் கருணை நயனமுஞ்சீர்
பயமேவு செய்பொ னுறம்பேனி யும்மெழிற் பாதுகைசேர்
சயமேவு தாளுந் தலைவிரி கோலமுஞ் சார்ந்தன்பரி
தயமேவு மென்றுங் குணங்குடி யானெனுஞ் சற்குருவே.

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

குருவா யடுத்தோர்க் கருள்சுரக்குங்
  கோதில் குணஞ்சேர் குணங்குடியா
னுருவா யருவா யுபயமுமா
  யொன்றாய்ப் பலவா யறிஞர் விழை
திருவாய் விளங்கும் பரநிலையைத்
  தெரிக்கு மௌனின்மற் றவன்பெருமை
யொருவா யுடையோ னும்புகழ்வே
  னோரா யிரம்வா யுறினொருங்கே. (௧௯)

## நேரிசை யாசிரியப்பா.

ஒருங்கிய மனத்தொடு மொருகாசு மிலனைக்
கருங்கடற் புவிமிசைக் காகன் மீதூர
வழுத்தி யன்புடை வத்திறக் கின்றவ
னெழிற்குணங் குடியா னெனுமருட் செல்வ
தன்னையு மிழப்ப தல்லா
லென்னை யவன்பெற லியம்பருள் சுரந்தே. (௨௦)

## நேரிசை வெண்பா.

சுரக்குமணற் கேணியினீர் தோண்டுந் தொறுமைந்
தாக்குங் குணங்குடியா னன்பர்க் — கிரக்கமொடு
மானந்தத் தேறல் வாப்புகல்வ தால்தோறு
மானந்தத் தேறல் சுரப்பாம். (௨௧)

கட்டளைக் கலித்துறை.

ஆர்ந்துணை நாடிற் குணங்குடி யானென் றழிந்தவன்பாற்
போந்துணை யோடன்பு செய்தவர் செய்தவர் பூதலத்திற்
சாந்துணை யுங்கை வருடிச்செவ் வாய்ச்சியர் தாட்கமலப்
பூந்துணை யூட லொழித்தாங்கு புல்லினர் புல்லினரே. ()

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

புல்லியு மல்லி சேர்ந்து பொலிவுறு மணத்த தாருந், தொல்லியல் வழுவாவண்மை தொடர்குணங் குடியானென்று, நல்லியன் ஞானமூர்த்தி நாமமுற் றிடுதலாலே, சொல்லிய வெனது சொல்லுந் தோன்றுறுஞ் சிறப்பினுற்றே. (உ௩)

நேரிசை யாசிரியப்பா.

உற்றுள நெகிழ்பிய நற்றிற வன்பொடுங்
குணங்குடி யானருட் கிணங்கிநே ரியார்க்கும்
பகைமையுங் கேண்மையும் புகனிலை யெனவென்
னெடுங்கா லந்தமை நீங்காது பழகிய
கொடுங்கேண் மாயையைக் கொல்பெரும் பகைவராய்க்
கதுவிய கேண்மையிற் கலப்பர்
புதிதென வெய்திய போதந் தனக்கே. (௨௪)

நேரிசை வெண்பா.

தனக்குத்தா னேநிகரான் தத்வத் தவனு
மினக்குத்தா னன்றியெவர்க் குண்டு—நினைக்குங்காற்

கூறுமணிசேர் குணங்குடியா னேவிமலா
தேறுதவ யோகமுயல் சீர். (உ௫)

கட்டளைக் கலித்துறை.

சீரை விரும்பினர்க் கின்றாமு லோபமெய் சேருநசை
போரை விரும்பினர்க் கின்று மனநிலை பூவையர்தம்
மோரை விரும்பினர்க் கின்றுங் குணங்குடியானிடஞ்செய்
நாரை விரும்பினர்க் கின்று முலகர் நவிலவமே. (உசு)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நவலுமிளை மையுமதனை யுறுமுடலு மதனையுள
நயந்து காக்கக்
குவிபொருளும் புனற்குமிழி போலநிலை யல்லவெனுங்
குணத்தை யோர்ந்து
புவிபுகழு மெஞ்ஞானக் குணங்குடியான் றிருவருளைப்
பொருந்தற் கெண்ணார்
தவலறசி ரகண்டபரி பூரணமாஞ் சிற்பரன்றாள்
சார்தலுண்டே. (உஎ)

நேரிசை யாசிரியப்பா.

உண்டு முடித்து முறுபொரு ளீட்டியு
மெண்டகு வாழ்நா ளியாவையுங் கழித்தே
யணங்குசெய் வினைமுய லசடருக் கறிவருங்
குணங்குடி யானருட் குரிசி லிசையிசை

நாவாய் நாவா யாகு
மேவாப் பவக்கட லொழிந்து கரைபெறற்கே. (உஅ)

நேரிசை வெண்பா.

பெறற்கரும்பே றென்றுளதோ பேருலகில் யார்க்குந்
தெறற்கருமா யைக்கழிவு செய்யும்—விறற்கிசைந்த
மன்னருளங் கொண்டு மதிக்குங் குணங்குடியான்
தன்னருளங் குற்றார் தமக்கு. (உ௯)

கட்டளைக் கலித்துறை.

குவலைய மெங்கு மொருசாண் வயிற்றின் குழிநிறைப்பக்
கவலை யடைந்திரைக் கேயுழல் வீர்பயன் கண்டதுண்டோ
நுவலைய நீக்குங் குணங்குடி யானரு ளோங்கிவிழித்
திவலைய றுவன்பிற் சேரினுண் டாங்கடைதீர் சிறப்பே. ()

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சிறக்கும் புகழு மடுத்தோங்குஞ் செறிதீ வினைகளெ லாம் விடுதலும், பறக்கும் விதனை யிருணீங்கும் பக்தி யுள த்தின் மேன்மேலும், பிறக்கு மதிதப் பெருவாழ்வு பெருகு முலகிற் பேதமில்லை, துறக்கு முறவோன் குணங்குடியான் சொல்லுநெறியைத் துன்னினர்க்கே.

நேரிசை யாசிரியப்பா.

துன்னுறு திரைக்கடல் சூழ்பெரும் புவிமிசை
பன்னுறு நிலைகெழு பலசம யங்களு

ளச்சம யத்தவ ரெவ்வா றுகருதினு
மச்சம யத்தவர்க் கவ்வா றிருந்தருள்
பலவடி வங்களும் பலநா மங்களு
நலமுற மருவிய நாயக னாகியு
முருவும் பெயருமொன் றுறாதவே றாகிச்
செருவளர் சமயா தீதமுற் றொளிருஞ்
சிற்பரம் பொருளினைத் தெரிக்கு
நற்குணங் குடியா னெனுநா யகனே. (கஉ)

நேரிசை வெண்பா.

நாயகனார் நல்லரவை நாடுங் குலமகள்போற்
றூயகமாந் தற்பரனைத் தாங்காண—நேயமுளங்
கொண்டோர்க் கலது குணங்குடியான் கண்ணருட்பே
றுண்டோவிப் பூதலத்தி னுள். (கங)

கட்டளைக் கலித்துறை.

உள்ளினுங் கண்மு னெழுதினுங் காதி னொருவர்சொலக்
கொள்ளினு நாவினிற் கூறினு மின்பங் கொளிக்குமுன்பேர்
கள்ளினு நெஞ்சை யழிக்கின்ற காமக் கரிசிலரைத்
தள்ளினுஞ் சூழுங் குணங்குடி யாயெனுந் தற்பரவே. (கச)

கலி விருத்தம்.

பரம யோகியைப் பற்றொன் றிலான்றனைக்
கரவி லாத கருணைக் கடலினைக்

குரவ னாதுங் குணங்குடி யான்றனைப்
பரவி னோர்க்குப் பவப்பிணி யில்லையே. (கரு)

நிலைமண்டில வாசிரியப்பா.

இல்லையோ வுளதோ விடையென மருண்டு
முல்லையி னரும்பே முறுவலென் றுரைத்துங்
கொங்கையைச் செம்பொனிற் குடமென வியந்துஞ்
செங்கையைக் காந்தட் செழுமல ரென்றும்
விழியைக் கூர்நெடு வேற்படை யென்று
மொழியை நறுஞ்சுவை முதிரமிழ் தென்று
மிதழினைக் கொவ்வையி னெழிற்கனி யென்று
நுதலினைப் பிள்ளைப் பிறையென நுவன்றும்
வனிதையர் மயக்கிடை மயங்கிவீழ்ந் தழுதுந்
துணிவுறு வோர்மனச் சோர்வினை யொழித்திட
மறைபுகன் ஞான வளமினி தருளுங்
குறைவரு நற்குணங் குடிகொண் டிருத்தலா
லுன்பெயர்க் காரணத் துறுபொரு ளுணர்ந்தனங்
கொன்பெறு புகழ்வளர் குணங்குடி யானே. (கசு)

நேரிசை வெண்பா.

யானென தென்னுஞ் செருக்கற் றியாவுமொரு
தானெனவே கொள்ளுந் தகையாகு—நானிலத்திற்
கூறுங் கருணைக் குணங்குடியான் சந்நிதியி
னேறுங் கருத்தோர் நிலை. (கஎ)

கட்டளைக் கலித்துறை.

நிலையுறு சத்துச்சித் தாநந்த மாக நிறைபொருளைக்
கலையுறு மாட்சியிற் றுறுற்றி யாரையும் காட்டவல்லோன்
புலையுறு மியாக்கை வருந்துற நோக்கும் புனிதர்புகழ்
தலையுறு சீர்கொள் குணங்குடி யானெனுஞ் சற்குணனே.

கலிவிருத்தம்.

குணங்குடி யானருள் கூடி னலத்தி
னிணங்கிய சிந்தைய ரேத மகற்றி
யணங்கறு மின்பி னமர்ந்துல கத்தோர்
வணங்கி வழுத்துறு வாண்பொடு வாழ்வார். (௩௯)

நிலமண்டில வாசிரியப்பா.

வார்தருங் கூந்தலார் வரிவிழிக் கணையு
மோர்தரு மதனவே ளெறிமலர்க் கணையு
மூறு செயப்பெறு தொளிர்திரு மேனியோய்
கூறுபல் புகழ்வளர் குணங்குடி யானே
இயலுறு மன்புகொண் டெய்தினோ ரியார்க்கும்
யாவரு மதிநிலை யருள்செய நின்று
மண்ணுல கந்தனில் வழங்குகின் றனைநீ
விண்ணுல கந்தனில் விளங்குபொன் னெனவே. (௪௦)

முற்றிற்று.

---

இஃது,

குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் மீது

மேற்படியார் மாணாக்கராகிய சிவயோகி

ஐயாசுவாமி முதலியாரவர்கள் பாடிய

# தோத்திரப்பா.

---

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்ணுறு நகத்தின் குணமழ லிக்குந்
 தன்மையா யிருந்துயோர் கடத்தி
னண்ணிய போத வழலினுற் கொதித்து
 நலிவுறு நியாயப்போ லுடலில்
பண்ணிய வான்மா பொருந்தி யிந்தியத்தாற்
 பன்மையாய் விளங்குவ தல்லா
லெண்ணிய பந்த மாதிய வுளவோ
 வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௧)

பதிதன துருவிற் களங்கமில் லாமல்
 வான்மிசை வயங்குறப் புவியின்
விதமுறு சாயை யாற்களங் குளதாய்
 விளங்குறுந் தகைமையேபோ லான்மா
சதிசெயு மனதால் விகற்பசங் கற்பத்
 தன்மைகொண் டியங்குவ தல்லர்
விதமகி தத்துட் சார்வன வுளவோ
 வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௨)

மன்னிய படிக நிட்களங் கமதாய்
 வயங்கினுஞ் சகசமாய்த் தோன்றுந்
தன்னிழற் சாயை யாற்கறுப் புளதாய்த்
 தயங்குறுந் தன்மைபோ லான்மா

துன்றுமா னவத்தி னுலபி மானச்
சுழலினின் றியங்குவ தல்லா
லின்னல்செய் தவித பேதம தனவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௮)

மாசிலா தொளிரும் பெருவெளி யாய
வானிடை நீனிற மதுதா
னேசுறு மித்தியா ரோபமாய்த் தோன்றி
யிலகுறு முறைமைபோ லான்மா
வாசுறு மவித்தியா மலசவி தத்தா
லவத்தையிற் றியங்குவ தல்லா
லீசனுய்ச் சிவ னுயிரன் றனவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௯)

வானிடை யொளியைப் பரப்புமோ பரிதி
மன்னிய சலத்தினுட் டோன்றி
லானதி னுருவ மச்சல மசையி
னசைவுறுஞ் செய்கைபோ லான்மா
கானலை நிகர்த்த புனலிடை யந்தக்
கரணமோ டிலங்குவ தல்லா
லீனமாந் தனுவா தியபல வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௰)

பகரும் புனறன் னிறம்வெளுப் புடைய
பான்மையோ டிருக்கினும் பார்க்கிற்
சகசமாய்க் கரிய நிறமுற விளங்குந்
தன்மைபோ னித்திய வான்மா
தகையுறு மாயா மயக்கொடு மியங்கித்
திரைமறந் துறங்குவ தல்லா

விகழுறு மமதை யகந்தைக ளுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௬)

அழிவுறும் பிருதி வேகமா யிருந்து
மசலமே முதலிய பலகல்
லெழிலுறு முருக்க டோன்றினி னிலங்கு
மியற்கைபோ னித்திய வான்மா
வொழிவுறு சாளு விதமுறு நாம
ரூபமோ வெறைகுவ தல்லா
விழிவுறுஞ் சிருட்டி யாதிய வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (எ)

வெள்ளைவா னத்தின் விளங்குவெண் மதிதன்
மேற்பரந் தோடுதன் முகிலென்
றுள்ளுறத் தெளியா தொளிர்மதி யோடு
தெனச் சொலு முவமைபோ லான்மா
கள்ளவஞ் ஞான மாதிய வவத்தை
களுக்குள்ளாய்க் கலங்குவ தல்லா
லெள்ளுறுங் கொடிய சஞ்சல முளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (அ)

எங்கணு மாகா யம்விபு வாகி
யிருந்துமண் ணாதிய பலவின்
சங்கமாய் மறைபட் டதினதி னுருவாய்த்
தடித்தொளிர் தன்மைபோ லான்மா
பொங்கிய தாதான் மியத்திசை யதனுட்
பொருந்தினி னிலங்குவ தல்லா
லிங்குள தங்கே யிலையென லாமோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௯)

சுடரில தியசெங் தீப்புகை யின்றிச்
சொலும்பிர காசமோ டிருந்து
மடருறும் விறகாற் புகையுள தாகி
யவிர்தரும் பான்மைபோ லான்மா
மடமையஞ் ஞான விருத்திபே தத்தான்
மாசடைந் திலங்குவ தல்லா
லிடர்பகை யுறவா தியதுய ருளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௧௦)

நிருதைவசய மாயை யயனுங்கரு வியினு
னிகழ்தரும் ப்ரபஞ்சதே காதி
நீந்துறு நாணு விதமுறு ரூப
நண்ணிய நாமமா திகளை
முந்துறக் கான னீரெனச் சிருட்டி
முதலிய தொழிற்பரப் பியது
னிந்திர சால மல்லவோ வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௧௧)

---

என்னகத் திருக்கு மெனக்குணீ புனக்கு
ளிருந்ததும் யானெனை மறந்தே
யென்னகத் திருக்கு மெனையன்றித் தேடி
யெங்கெங்கு மோடியா னிளைத்தே
னென்னகத் திருக்கு மெனையன்றி யாவு
மிலையிலை யிலையென வறிந்தே
னென்னகத் திருந்து மெனக்கொளித் ததுவென்
னியம்பிடாய் குணங்குடி வாழ்வே. (௧)

---

மாசிலா மணியே முனிவர்க ளிறையே
வள்ளலாய் வந்தகண் மணியே
தேசிக ருகத் திரண்டொரு வடிவெடுத்த
சித்தனே யொளிர் சிந்தா மணியே
ஈசனே தேசோ மயந்தந்தாட் கொண்ட
வென்னுயிர்க் குயிரதாந் துணையே
போசனே வாழி குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௪)

இகபர மிரண்டி னுயிரினுக் குயிரா
யியங்கிய வாசியா மலரை
முகர்ந்தக மகிழ்ந்து நாதகீ தங்கண்
முழங்கிய பேரின்ப வீட்டிற்
சுகமுறச் சும்மா விருக்கவா வெனவென்
றுயர்பவக் கடல்கடப் பித்தாய்
புகழ்பிர காசக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௫)

பெருகுமட் டாங்க யோகமெய்ஞ் ஞானப்
பேரின்பக் கடலமு தூட்டிக்
குருமணி யணிந்த மார்பிணி லணைத்துக்
கொண்டபின் முத்திதந் தவப்பாய்
மருவியென் றனக்கு ளிருந்தெனக் களித்த
வாரியாம் வந்திரு கலையின்
புரிமயச் சுடராங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௬)

மூலத்து ளெழுந்த நாடிமூன் றுடனே
முயங்கிய நாத வாயுவினுட்

சிலமா ரூக்கண் குவித்தக் கண்ணைத்
திறந்தொளிர் வாசியை நோக்கி
மேலுமே னடனச் சிலம்பொலி காண
விளக்கியெற் கின்னமு தளித்தாய்
போலுரு நடருங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௯)

கதிரில கியதுண் டாமணி விளக்கின்
கதிர்தரு மண்டப மதனுட்
குதிபுற விருத்தி யின்னமு தளித்துத்
துன்னுமேழ் பவத்தொடர் பகற்றித்
தீதும்புரு தென்னைத் தயவுதந் தாண்டாய்
சச்சிதா நந்தநற் பரமாம்
பொதுமையா மின்பக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௧0)

குறிகுண நீக்க வகண்டிதா காரங்
கொண்டொளி கனிந்தமு தொழுகிச்
செறிமணி நாத விளக்கினுல் விளக்குந்
திகழ்சமு முனையெனு மனைநின்
றென்றிநிலை கிறந்தி யென்னையாட் கொண்டாய்
சித்தனே நின்மலா னந்தப்
பொறிபொறித் துயருங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௧௧)

கண்ணிய சுவாச மெனும்பொரு ளதனை
காளுக்கு நாட்குறைந் திடவென்
றெண்ணியே கொள்ளைக் களவுசெய் கள்வ
ரென்றுநால் வரையுமே பிடித்துத்

இன்னுறும் வாசி நாவிலங் களித்துச்
சிக்கெனச் சிறையினி லடைத்தாய்
புண்ணிய னென்னுங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (எ)

உடலுயிர்க் குயிரா யுறைந்ததே பொருளென்
றுரையுவ மையுமிலா நிறையைத்
திடமுறக் காத லாமல கம்போற்
றெளிவுறத் தெளிந்தெனுட் காட்டிச்
சடமசித் தியம்பொய் பொய்யெனத் தேறுந்
தரமளித் தாயிரு வினையைப்
பொடிபொடி யாக்குங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (அ)

சுத்தவட் டாங்க யோகமே காட்டிச்
சுடரினைத் தலங்கிடக் கூட்டிச்
சித்தசாஞ் சல்ய மின்றியுண் ணூட்டித்
திகழ்தரத் தெளித்தரு ளூட்டி
வத்துதா னென்னு நிலையினிற் பூட்டி
வருமம தைகளற வோட்டும்
புத்திதந் தாண்டாய் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (க

எந்தனு லறியப் பமெம்பொரு ளியாவு
மெனக்கசித் தியமென விசைத்து
மந்திர வைம்பத் தோரெழுத் ததனின்
மருவியா னினைவையு மறக்கத்
மந்திர மாக வோர்மொழி மொழிந்தாய்
தற்பரா னந்தமெய் யோகம்

புர்த்தியி னொளிருங் குணங்குடி வாழும்
பூர்ண மௌனதே சிகனே. (௪0)

பிரிவிலா முகந்தர்ப் பணத்திரு கையினைப்
பெற்றுமோர் முகமெனு மதுபோற்
குறியிலாப் பரமே சிவனாய் விளங்கு
கொள்கையி திரண்டல வெனவென்
னறிவினை விளக்கி யகண்டமாய் விளங்கு
மந்நெறி நெறியென நிறுத்தாய்
பொறுமைசே ரின்பக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. (௪௧)

சணங்குடி நேய தந்தைதன் தாயார்
தன்மக்க ளொடுமனை வியினுற்
பணங்கொடு தேடும் பலக்கட லீர்த்திப்
பரவெளி யெனுமுப்பாழ் கடந்து
பிணங்கிடா திணங்கும் பின்னொடு முன்னிற்
பேரின்ப வீட்டினைக் காட்டுங்
குணங்குடி வாழு மௌனதே சிகவென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். (௪௨)

# கீர்த்தனம்.

---

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

அவனன்றி யோரணுவு மசையாதென்ப
தறியாயோ நெஞ்சமே.

அநுபல்லவி.

தவனின் றொளிருமறந் தாங்கி வளருமோன
தற்பர நித்யசிற் போதன்-மகி
ழற்புத மானவி நோதன்-என்று
செப்புங் குணங்குடி நாதன். (அவனன்றி)

சரணங்கள்.

ஈயெறும் பாதி தொடாமலெங்கோரமு
மேதுக்கில் வாக்கையை நாடி-யதில்
நேய மதாகவே நீயபி மானித்து
நின்றனை யேயிதந் தேடி-சுகிர்
நியஞ்சம் வெஞ்சொல் லெனும்பொய் புரைத்துத்
தியக்குறும் புன்னிதிக் கோடி-சற்றுக்
ஞாயதொன் றின்றிப் புலியிசை நின்றமு
வாசையற் றேய்த்துமெய் வாடி-புழல்
மாய மொழிந்திடக் கூடி-பரு
வீயுங் குணங்குடி நாதன். (அவனன்றி)

நன்மையக் குற்றுறுந் தின்மையக் குற்றுறு
நானென்று நின்றுகொள் ளாமல்-நாளும்
புன்மை நிறைந்திடும் வாசியில் மூழ்கிப்
புதைந்தனை யேதேதன் னாமல்-புகல்

இம்மை மறுமை யிரண்டற வொன்றான
தென்றதை யின்றேவின் னாமல்-இகம்
மன்னுந் தொழிற்செய நேர்த்தனையோ வெனெ
வாழ்விதென் றெண்ணியென் னாமல்-நின்ற
தன்னைக் கடிந்தனின் னாமல்-நின்ற
தென்றே குணக்குடி நாதன். (அவனன்றி)

௧. பொறியும் புலனைந்து பூதமும் பேதமும்
புகல்கர ணங்கடந் தோனே-மலஞ்
செறிபுஞ்சஞ் சலமென்னும் பொருளும் வினையிரண்டுஞ்
செய்யுந் தொழிலுமிடந் தோனே-நல்ல
நெறியும் பலசமயக் குறியு மாதாரத்தன்
னினையு கனவும்படர்ந் தோனே-யோகத்
தறியுங் குறியுந்தன் னிறையும் பரவெளியென்
றடருங் கடலில்நடந் தோனே-விட்டுப்
பிரியாத வருள்தொடர்ந் தோனே-எனக்
கறிவாங் குணங்குடி நாதன். (அவனன்றி)

முற்றிற்று.

---

மஸ்தான்சாகிபு அவர்கள்மீது

## வேங்கடராயப்பிள்ளைக்கவிராயரவர்கள்பாடிய

# தோத்திரப்பா.

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

எல்லா மறிந்து மனமிலையோ
  விரக்க மிலையோ வுன்னெஞ்சங்
கல்லா வுரைக்க வாயிலையோ
  காண வருத்தங் கண்ணிலையோ
பொல்லா ரெனினு மடிமையென்று
  புகுந்த வடியார் தமைக்காக்க
வல்லா யலவோ குணங்குடியாய்
  வாழு மருமதே மகமேதவே. (௧)

மாவே தனையி லடியார்கள்
  வருந்தப் பார்த்து மனமிரங்காக்
கோவே நினக்கு மெவர்கள் குணங்
  குடியா னெனவும் பெயர்கொடுத்தார்
பூவே மணமே யுன்றுமம்
  பொருந்தும் வகைநீ புரியாயே
னீவே றெனவு முலகமெலா
  நிந்தை கூற மிதுநிசமே (௨)

வேத னிலையோ வரியிலையோ
  வேணி யானு மிலையோ வோர்
நாத னிலையோ பலகோடி
  நாமம் படைத்த தேவர்களும்
போத விலையோ முறையிடிற்கேட்
  போரு மிலையோ பொருளிலையோ

நீதுமிலையோ குணங் குடியாய்
நீயுமிலையோ புகலாயோ. (௬)

தருண மறிந்துங் காவாய்நீ
தரணி மிசைநின் னடியார்க்குக்
கருணை புரியுங் குணங்குடியாங்
கடவு ளென்ப தழகேயோ
பெருகு மிலவு காத்தகிளி
பெறும்பே றலதென் பயன்கொளுவா
ரருமை யொடுநின் பதம்பரவி
யழுது கனியுந் தொண்டர்களே. (௭)

ஏச மனமும் வரவிலையே
யீயார் புகழ்பே சாதன்புகழ்
பேச மனமும வரவிலையே
பெருகு பசிக்கு மோய்விலையே
வாச மிலகு குணங்குடியாய்
வருத்த மிவையெல் லாமறக்கப்
பாச நமனும் வரவிலையே
பாவி யடியேன் பலவெதன்னே. (௮)

கல்லா ருறவும் பெரும்பசியுக்
கழிந்து போகும் வகையுரைத்து
யல்லா ருறவு நின்பதமு
நாயே னடையும் படிபுரிவா
யெல்லா ராலுமறிய வொண்ணு
விறைவா விந்த வேழையொடு
மல்லா டுவதென் குணங்குடியாய்
வாழு மமுதே மகதேவே. (௯)

அடியே னிக்கா லுரைத்தவண்ண
  மாக விதையு மெண்ணியிருந்
திடிலார் கதிசொல் குணங்குடியா
  யெல்லாங் கடவு ளறியாதோ
கொடியா ரிடத்திற் சென்றுமனங்
  கூசிக் கைகாலலைந் தலைந்து
மடியாப் பிணம்போன் மடிவதற்கோ
  வகுத்தா னெனைநான் முகத்தோனே. (௭)

செய்யும் வகையுந் தெரியவில்லை
  தேவர் மனமுந் தெரியவில்லை
வையு மடையர் தமையடுத்து
  வாழ்த்தித் துதித்துப் பற்காட்டிக்
கையு மேற்க மனமுமில்லை
  கருத்து நிலையா நிற்கவில்லை
பெய்யுங் கருணைக் குணங்குடியாய்
  பேதை யேற்கோர் வழியருளே. (௮)

சொந்த மில்லையோ பன்னாளுந்
  தொழுத தில்லையோ வடிமையெனும்
பந்த மில்லையோ பிள்ளைகளைப்
  படைத்த தில்லையோ வருந்துமவர்
சிந்தை யறிவுஞ் செயலில்லையோ
  தேவா வாழுங் குணங்குடியாய்
முந்த வினைகளைத் தடுக்க
  முதல்வா வேண்டுந் தருணமிதே. (௯)

பெரியோ ரெவரும் புகழ்ந்தேத்தும்
  பெரிய வுனையிப் பேதையனுந்

தெரியா வறிஞ னேதேதோ
திகைத்துக் கவியாற் சொன்னவெலாஞ்
சரியா யுரைக்குந் துதி யெனவே
தங்கு முனது மனங்கொண்டு
பரிவா யருளக் குணங்குடியாய்
பல்கா லுன்னைப் பணிவேனே. (௧௦)

நீயே யீன்ற தாய்தந்தை
நீயே குருவி னொடுதெய்வ
நீயே யடியார்க் குதவுபொரு
ணீயே சமயமறியும் வஸ்து
நீயே ஞான நெறிவிளக்க
நீயே விளங்குங் குணக்குன்ற
நீயே யெங்குங் குணங்குடியாய்
நிறைந்திவ் வடியைக் காப்பதுவே. (௧௧)

முற்றிற்று.

---

மஸ்தான் சாகிபு அவர்கள்மீது

கோவளம் அருணசல முதலியாரவர்கள் குமாரர்

# சபாபதி முதலியாரவர்கள் பாடிய பஞ்சரத்னம்.



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஏர்பூத்த நயமுகமு மருள்பூத்த விருவிழியு
மெழிற்செய் வாயும்
தார்பூத்த மணிமார்பு மடியாரைப் பரிந்தணைத்துத்
தாங்குங் கையு
நீர்பூத்த மலர்த்தாளுங் கண்டெளியேன் றொழுவதென்றோ
நிகழ்த்தல் வேண்டுஞ்
சீர்பூத்த சென்னையில்வாழ் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. (க)

வையமதி லெனக்கெனவந் திடும்பாழாங் கொடியவிருண்
மாயை நீங்கத்
துய்யநின தருளேக்கே விளக்கெனவந் தடுத்தினியுன்
றுணைத்தா ளல்காய்
மெய்யடியா ருளத்தின்முளைத் திடுகரும்பே மதுரமெல்லாம்
விளைந்த தேனே
செய்யமணிச் செழுஞ்சுடரே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. (உ)

பாவநெறிக் குடன்படுத்து மடமாதர் மயக்கில்விழும்
பதக னேனை
வாவெனநின் றிருகோக்கா லழைத்திடுத லெந்நாளோ
வழுத்தல் வேண்டு
மாவலுறும் பழவடியா ருள்ளுகின்ற பொருளனைத்து
மளிக்க நாளுக்

தேவதரு வாய்விளக்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. (௩)

பருதிதேர்ப் பாகனைவர் திருளனுக்கு மோகினை து
பதுமத் தாளைக்
கருதுமடி யவர்கள்குழாத் திருக்குமெனை யஞ்ஞானங்
கலப்ப துண்டோ
அருதிகளு முணர்வரிய பரம்பொருளே யேழுவகைத்
தோற்றத் திற்குந்
திருதியாய் நின்றளிக்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. (௪)

தொல்வினையாந் திரையெறியும் பவக்கடலிற் சுழலுகின்ற
துரும்ப னேற்குக்
கல்வியிலைத் தந்தரிய ஞானவழி காட்டலுன்றன்
கடமை யையா
பல்வளஞ்சேர் சென்னைநக ருறைவாழ்வே பேரின்பப்
பரமா னந்தச்
செல்வமே தவப்பேறே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. (௫)

முற்றிற்று.

மஸ்தான் சாகிபு அவர்கள்மீது

காயற்பட்டணம்.

# செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை

ஆலிம்புலவ ரவர்கள் பாடிய

# ஒருபாவொருபஃது.



பதினான்குசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அருவுருவ முருவுருவ மிருவுருவ முடனமையு
    மடனுலவை யெரிய முனுமேல்
அறைபுனலும் விரிமணனி மறைவெளியு மெனவிவைகள்
    அனுவினனு வினுமளவிலா
மருவுருவ மலைகடனு மெறும்புடவி படர்ககனு
    மதியினொடு கதிர்ப ரிதியும்
மண்ணியினிதி யுலகுமெரி நரகுமவண் முயலமரர்
    வகையுமிவை கணிபல னுறாஉம்
ஒருவுருவ மனுவுமெதிர் பகையுருவ கணமுமமை
    ஒருவனருள் பெருகு நபிகள்
உரையொழுகி வருமுதிய வறிஞரினு முயர்பதவி
    யொலிகளென நிலைமை புரிவீர்
வெருவுருவ முளமுடைய நமதடியர் துயரகல
    விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
    வினோதா புரந்த ருள்கவே. (௧)

காணாத நீர்கான லானகு மாறுய
    காலோக மாமா யையும்
காயாது பூவாது தானேக மாயோடு
    காலேற வாவா னதும்

காணாது கோணாது நானெய லாதேதெ
ஞவாணு வாகா ரமும்
நாடாத பாலோடி யூடாடு தீவேக
நாயோடு பேயா னதும்
தோணாது பாழாக மேலேகு மான்மாசு
ரூபாதி சாலோ கமெய்
சூழாத சாமீப சாரூப மாய்வாழி
தாய்தான மேல்மாழ் குவீர்
வீணான வீணாள ராகாம னோராக
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. (௨)

துதிமொழிக ளோயாது மனவுறுதி சாயாது
தொழுகைநிலை மாயா துசீர்
தொடர்நியம மாடாது விரதமுறை கோடாது
சுருதிநயம் வாடா துமேல்
குதிகொள் வினை காணாது கசடுபல பூணாது
கொடுமைவலி வேணா துவீண்
குல்வுநடை பாவாது பலபொருளின் மேவாது
கொலைகளவு தாவா துநேர்
அதிககுண மாயோக தவமுயலு மேலோர்க
ளருமையொடு மாறா தநும்
அடியிணைக ளேசூடி யினியபல பேறான
தணிபவர்க ளேகோ டியே
விதிமறையி னுலாளு மொருவனரு டானென
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. (௩)

மனுநீதி புணராத பெருமூடர் முதியோர்கள்
மரியாதை தெரியா தவர்
மதிவேறு மொழிவேறு பொருள்வேறு படுவோர்கள்
மலிகோர நிறைநா வினர்
சினமூறு மனமாய மறியார்கள் குறியாத
சிறியோர்கள் வெறியான் பவர்
திருமாது பகையாளர் மலர்மாது வசையாளர்
திறமாது மறமான் பவர்
துனிசேரு நடையாளர் பெரியோர்க ளடையாளர்
துயர்வாழு மிடையா ளர்கள்
தொழுதாலு மகலாத கெடுபோவ முடையார்கள்
கசுமேது பெறுவார் களோ
வினவாத வினையாவு மொருபோது மணுகாமல்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. (௮)
பேறான வன்புடைய தாய்தந்தை தந்துணைவர்
பேராசை தந்த மனையார்
பேறான மைந்தர்புடை சூழ்சால் பெருங்கிளைஞர்
பேரா நிறைந்த வுறவார்
ஆரா ரிருந்திடினு மாராரு வந்திடினும்
ஆதார மொன்று மிலையால்
ஆகாத வன்செயலி னாலே யெதிர்த்தவினை
யாடாத கன்றொ ழியமேற்
சாராது வெம்பவ மெலாமோட வெங்கணிலை
தாழாதி கம்ப ரமுநீர்
தாமாக நின்றருளி னாள்வீர்க ளென்றுமது
சார்பா யடைந்த வெளியேம்

வேராதி கொண்டமண மார்மா விரிந்தமலர்
விழிகருணை யானேக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. (௫)

சுற்றிப் பிடித்தகொடி யொத்துப் பெருத்தபல
சுற்றத்தர் மற்று ளர்களும
துக்கச் சுகித்துடை யுமிக்கத் தரிக்கநகை
சுட்டுத் தடுத்தி டுதலால்
பற்றித் தொடத்தொடு மு னெய்த்துப் பசப்புமெழில்
பச்சைக் கிளிகரு தலையாா
பட்சத் திடத்துயிர்த் திகைப்பச் செறுத்தறிவு
பட்டுப் புறப்ப டுதலால்
எற்றித் தவத்தினைமு றித்துக் கருத்தினை
யெடுத்துக் குலபப கைமைமேல்
எட்டிப் பிடிக்கமதி யற்றுப் பவத்தொழி
லிழைத்துப் பிழைத்து ழல்வரே
வெற்றிக் குணக்குரிசி லெத்திக்கு மெய்ப்பகிறை
விழிகருணை யானேக கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. (௬)

முன்பொன்றி னின்றுறுதி யின்சிந்தை விந்தையின்
மொழிந்தண்டு கின்ற முதியோர்
மூங்கும் பெருந்துறையி ருந்தங் கெழும்புகழ்
முகந்திங் கிதம்பொ ழியவே
அன்பொன்று கின்றபல னன்றன் றுவந்துமகிழ்
வங்கம் பெருந்த கையுளார்
அந்தந்த மன்பதைக ளும்பந்தமுங் குளிர்
அகங்கொண்டு வந்து தொழவே

என்பொன்று மின்பநிலை கண்கண் டிழிர்தருண
மெங்குங் கடிந்த ரசர்கள்
எம்பந்த மெம்பொருள்கள் நர்தஞ்ச மென்றடியி
னென்றுஞ் சரண்புகு தவே
மின்பொன் றுலங்குருண நன்கின் றருங்குரிசில்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னு ா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. (எ)

பாற்றேட்டைத் தேத்திரளை மாச்சோற்றைத் தீக்கனிகள்
பாற்சோற்றைத் தேட்ட மதபோல்
பார்த்தூட்டற் கேய்ப்பவறி வாற்றேக்கித் தேற்றநெறி
பாற்சேர்த்துக் காத்தி டுதலால்
காற்றூட்டக் கேத்திரமெய் மேற்போக்குக் கீழ்க்கழிவு
காற்பாச்சற் பூட்டி நவிற்
காப்பாக்கக் கோட்டைவெளி கூத்தாட்டுக் கோட்டைநனி
காப்பாற்றிக் காட்டு தலினால்
தோற்றூட்சிக் காக்கியது பார்ப்போர்க்குப் பார்க்கரிய
தோப்பாய்க்கத் தாத்த கையதாய்த்
தூர்த்தாக்கிற் பூர்தநனி காய்த்தாக்கத் தாற்குலவு
சூழ்ப்பேட்டைப் போக்கி டுதலால்
வேற்றூட்டத் தோற்றரவு சீத்தோட்டிப் போற்றிசெய
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. (அ)

வையமொரு கையினுற மெய்யியல்கள் பொய்யினுற
மையல்வலை பெய்யு மடவார்
வள்ளியிடை விள்ளுமுரை வெள்ளைவிழி துள்ளவரு
வள்ளமுறு கள்ளை விடலால்

பையமதி தொய்யவறி வுய்யவுணர் வையவெறி
    பையவிடு நைய தனினால்
பள்ளமிகு வெள்ளமிசை தள்ளவிழு முள்ளழிகொள்
    பள்ளையர் தமுள்ள நிலையாத்
துய்யமகள் செய்யமகள் மெய்யின்மகள் கையின்மகள்
    தொய்யிலணி வையமகளும்
துள்ளிமல ரள்ளியெதிர் கொள்ளுமது பள்ளியிடை
    துள்ளவிசை தெள்ளி யுறலால்
வெய்யவினை நையவருள் செய்யுமென வைதயநிறை
    விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
    வினோதா புரந்த ருள்கவே. (௯)
கண்ணுமதி யுண்ணினைவி னண்ணுமன வெண்ணமது
    கண்ணாடியி லொண்ணா பொழுதும்
கன்னன்மொழி யன்னநடை மின்னினிடை பொன்னனையர்
    கன்னிநல மன்னா பொழுதும்
ஒண்ணிதிக ளெண்ணாதொழில் பண்ணாபொழு தன்னமுத
    லுண்ணலொடு தின்னா பொழுதும்
உம்மையல திம்மையுள தெம்முலைவும் வெம்மையற
    வும்மருவல் பம்மு பொழுதும்
தன்மையொடு மென்மையொடு பெண்மையொடு மோண்
    தன்மையொடு திண்மை கொளலால் [மையழி
தன்மகிமை யின்மைபெற வன்மையற நின்மையொடு
    தன்மைபுரி சொன்மை யருள்வீர்
விண்ணுலகு மண்ணுலகு மெண்ணவரு மண்ணல்நிறை
    விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
    வினோதா புரந்த ருள்கவே. (௧௦)

வண்டனைச் சண்டனைக் கொடியனைக் கடியனை
    வாதாடு மொழிகேடனை
வஞ்சனைப் புஞ்சனைக் கோபியைப் பாபியை
    மாபாதகத் தொழிலனை
மிண்டனைக் கண்டனைக் கதியனைக் கொதியனை
    வீணனை வீணாளனை
வெஞ்சனைக் கொஞ்சனைக் கொலையனைப் புலையனை
    வேகாவருங் கண்ணனை
அண்டனைக் கண்டனைத் தண்டனைத் தொண்டனை
    யாகாத புன்செயலனை
ஆதியி னிடத்திரந் தன்பினொடு மென்பிழை
    யகன்றொழிய வருள்புரிகுவீர்
மிண்டலமு மண்டலமு மெண்டிசையு மண்டுபுகழ்
    விழிகருணை யாளோக் கிடயே
வேதா குணக்குடியி னாதா வருந்தவ
    விநோதா புரந்தருள்கவே. (௧௧)

இதுவுமப் புலவர்பாடிய,

# தோத்திரப்பா.

---

ஆதியொரு வன்கருணை யக்கட லிடைப்படிந்
தாவியுட லின்செ யலெலா
மமையுமுறை போனிறீஇ யெழுவகைத் தோற்றத்தி
னுமெழு பண்பி னியல்பே
நீதியொடு மொருமைப் படக்கண்டு முருவங்க
ணிலைபெறு தலைமா றிடா
நீடொளிவி னுதயநில னென்றுகொண் டும்பொருளை
நிச்சயித் தொன்று படவே
சோதியுள நினைவினு லைம்பூத வியல்பையுஞ்
சோரவிட் டும்பெறு குணந்
தோன்றலான் முழுமையு மாய்ந்தசுய வஸ்துவாய்த்
தூய்மைபெற நின்ற வொலியே
போதிய குணங்குடி குரிமைபூண் டியர்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (க)

குவிபுமுய ரறிவினூற் பலவாக நினைவினைக்
கும்பித்து வாயு வுடனே
குறிபெற நிறுத்தியுள் ளெழுநாத விசையினிற்
கூர்ந்துடலி னியல்பொ ழித்துச்
செவியொலி யொதுக்கிவிழி தெரியா தடக்கிவரு
தேகபரி சந்த னைத்துத்
தேற்றுறு வாசனைக ளோர்சுவையு மேற்றுறு
சிந்தையா கந்த முறவே

கவினிரவு பகலற்று நிற்குநிலை நின்றுயிர்
கலந்திடத் தபசு செய்நீர்
காளையம் பருவத்தி னுலகந் துறந்தவெகு
காரணம் விளைத்த வொலியே
புவிபுகழு நற்குணங் குடிகொண்ட பின்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (உ)
கருதரிய வஸ்துவாய் நின்றவொரு வன்கருணை
கனிதர வெழுந்த கடலிற்
கதிர்பல விரித்தமுத தாகிவரு நபிநாதர்
கதிபெற வளித்த நெறியிற்
பெரிதுதவு முறையெலாங் கண்டுகண் டுலகமனி
பிரசித்தி நிற்க வகையாய்ப்
பிசிவிலா தறிவொடு புகட்டுவித் திருமையது
பேற்றினை யெடுத்த ருள்செயு
மரியமன நிறையன்பு மாதரவு மோர்மையுமெய்
யணியுமுறு தித்த குதியு
மவரவர்க டஞ்சிந்தை தன்னிலே தோற்றவெளி
யாகுநடை கொண்ட முகிலே
பொருவரிய நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (ங)
வன்மைதரு மொழிவிட்டு மனவாஞ்சை மதிவிட்டும்
வார்மையொடு சீர்மை விட்டு
மருவுசுவை யிணைவிட்டு நல்லுடைக டொடர்விட்டு
மணமோங்கு பொருள்கள் விட்டும்

பன்மைதரு தொழில்விட்டு நன்மைகொளு முறைவிட்டும்
படரிருமை பாசம் விட்டும்
பற்றுடைய வினைவிட்டும் வித்தைகொளு முறைவிட்டும்
பண்ணிசையி னினைவும் விட்டு
மின்மையடு குணம்விட்டு மன்னெறிகண் மதம்விட்டு
மிருமைதரு வகைகள் விட்டு
மேற்குமுட வினைவிட்டு நோக்குவன பலவிட்டு
மேகநிலை விட்டி டாமற்
புன்மையடர் நற்குணங் குடிவிட்டி டாச்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டலர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (ச)

எங்கினு மிருந்துவரு வார்மனமு மேத்துத
லெடுத்துவரு வார்க டொழிலு
மிகவுதி மதித்துவரு வார்குணமு நன்மையி
னியைந்துவரு வார்க ணெறியு
மங்கமணி கோலமிக வேய்ந்துவரு வார்நிலையு
மண்டிவரு வார்க ளடையு
மறிவின்முறை கொண்டுவரு வார்திறமு மற்றுலக
மகலவரு வார்கள் விதமு
மிங்கித முடன்றெரிந் தந்த நிலைகளுக்
கிசைகின்ற துறைக ணோக்கி
பின்பத்தி னார்வமொடு கண்டித்து மேலேறி
மியல்போடு நிற்கு மறிவே
புங்கநிலை பொங்குநற் குடிகுணங் கொடுசென்னை
புரமீ தமர்ந்து கொண்டலர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (ரு)

சொல்லினா லறிவமுது பொருளினா னயமுமதி
    தொடர்பினா லுயர்ஞா னமுந்
துதியினா லொருமையெழு நினைவினா லிறுதியுந்
    துறவினா னனிவாழ்க் கையு
மல்லினாற் றனிமையும் பகலினாற் கவலலும்
    மருளினா லிகப ரமுமே
யன்பினாற் பேறுமடு துன்பினாற் சுகமுமற்
    றாவியால் யோக நிலையு
மல்லினாற் கொண்டோங்கு மாதவர்க் கொருமா
    மணிச்சுட ரெனத்தி கழ்வே
மகிமையொடு செய்தவப் புஞ்சமே யஞ்சுமன
    மருளற்ற தெளிவ ருளுவீர்
புல்லினாற் பெருகுசுக நற்குணங் குடிசென்னை
    புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
    புகழுமஸ் தான்சா கிபே. (க)
கோவைதரு சொற்றொடரி னாற்கவிதை யுஞ்சீர்மை
    கொண்டிடுமு னாஜாத் துநாட்
கொளுவார மோதிடுது வாவுமிறை யோனருள்
    குலாவிதிக் கும்ப லபலத்
தேவுக ளொடுங்கிவந் தடிதொழச் செயுமறைத்
    திருவாக்கி யத்தி கழுமே
சேருமடி யர்க்காக வற்பினாற் செய்துயித்
    தேசத்த ருக்த மிழினாற்
பாவகை யனந்தமு மியற்றிவளர் நல்வழி
    பயிற்றிமுறை யாலுல கெலாம்
படர்கீர்த்தி யறிவினொடு துறவமா யொன்றுபோற்
    பரிவுற் றெழுந்த வொலியே

பூவுலகி லுயர்குணங் குடிபெற்ற பின்சென்னை
    புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குவித யாற்றுமிறை யோன்றன்மை
    புகழுமஸ் தான்சா கிபே. (எ)
எத்தெந்தத் திசைதோறு முறுஞான யோகிக
    ளியைந்தபடி பணிந்து நெறியி
னியல்புநடை யொழுகுமதன் வகையுமிக விவரமா
    யெப்போது முற்ற றிந்து
சந்தத ருஞ்சிந்தை யானந்த வாரியிற்
    ருழ்ந்தவங் கினிது போற்றுந்
தக்கவர் செறிந்தவனு மந்தக் குடிக்குள்வளர்
    தருசெய்கு சாகிப் பேரா
வந்தந்த சமயமுற் றினுமுள்ள சூட்சிக
    ளனைத்துமொரு மகிம திக்க
வறிவா ளொதுக்கிவிட் டொருசார மும்பற்றி
    யடராது கண்டித்து மேற்
பொங்கென்று நற்குணக் குடிகொண்ட பின்சென்னை
    புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
    புகழுமஸ் தான்சா கிபே. (அ)
மகிழோங்க வுள்ளமறி வுகளோங்க நன்னிலையின்
    வழியோங்க மெழியு மோங்க
மறையோங்க வுண்மையது றையோங்க மாதவமெய்
    வகையோங்க மிகையு மோங்க
விகழோங்கு தீவினையி லிகழோங்கு முலககடை
    யெதிரோங் கிடாம லுடலி
னியல்போங்கு மைம்பொறிக ளயர்போங்க விட்டெறிதி
    யிகமோங்க மகமோங்கு வீர்

அகமோங்கு பாவிமன முகிழோங்கு பன்னிவினை
னடலோங்க விடமாறி னின்
றகமோங்க வெந்துயரி னகையோங்கி டக்குழறி
யழுதோங்கன் முறையாகுமோ
புகழோங்கு நற்குணங் குடியோங்க வுஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (க)

நலனுர்ந்த முகிலினிறை கடனினுங் காட்டினுயிர்
நனிதுன்று கிரிக டமினும்
நாள்செய்கதிர் மதியினுந் தாரகை கணத்தினும்
நகுமணிகொள் பொற் பதியினும்
வலனுர்ந்த மற்றுள்ள செல்வத்தி னும்பேற்றின்
வகையினும் பலபேத மாய்
வழிகின்ற வோரொளியை வெளிகின்ற வறிவது
வரம்பினுற் றடை படுத்திப்
பலனுர்ந்த செய்குசுல்த் தானப்துல் காதிர்லெப்
பையாலீ மென்ற புகழைப்
பல்லோர்க ளும்பித்தன் மஸ்தா னெனப்புவி
பயிற்சிகொளு மாநா தரே
புலனுர்ந்த நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொணடீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. (௧0)

ஷை புலவர் பாடிய

# வாயுறைவாழ்த்து.

நேரிசை யாசிரியப்பா.

கார்நனி விசும்புங் கதிரு மதியு
நீர்கனி கடலு நிலனு மலையு
ஐம்பெரும் பூதமு மவற்று ளேங்குந்
தம்பெருங் குணமுந் தழூஉஞ்சர மசரமுஞ்
சென்ற வாணையிற் சிதையா நிலையிலு
நின்ற முறையே நிகழ்தலி னாலு
மேறுமா றாகா வேறுவே றாக
மாறுகூ றாகா மன்னுரை யாலுஞ்
சாதியுந் தொழிலுந் தககன பண்பும்
பேதியா தியங்கும் பெறுமுறை யாலுங்
கோன்மையிற் பாகங் கொள்ளுங் கூட்டின்
பான்மையொன் றில்லா வல்லபத் தாலே
யொன்றே யனைத்தனையு முடையவுண் மைப்பொரு
ளொன்றே மறைவிலா தியங்குகின்றதை
விதிபடு திரைகளால் விளக்கா தாய்ந்துங்
கதிபடு மனத்தாற் கலங்கு மக்கா
ணோர்விழி முயல்வா னிலைத்த சிந்தையி
னோர்வழி முயல்வா னுணரு மக்காள்
பதையா திருக்கும் பண்புடைச் சான்றீ
ரிதையா சனஞ்சேர்த் திலங்கிய சான்றீர்
நற்கருத் துடையீர் நனியறி வுடையீ
ரற்கருத் தியம்புவ னினிதிற் கேண்மின்
பதியிற் சிறந்த பதியாம துரைப்
பதியிற் பிரபல மநேகம் படைத்தவ

ரருங்கலைக் கடலை யகமெனுங் கலத்தா
லொருங்களந் தறியா வுயர்கரை கண்டவ
ராலயக் கபாடத் தலைதா டிறக்க
மேலவர் துதிதரப் பாடிய வென்றிய
ரலைவா யுடமருண் டரித்தவ ரியினை
யுலைவாய்ப் பொய்யா தொருபுறம் பெய்யுந்
தங்கையைக் கண்டு தகாதென யாழொடு
சங்கித முயற்சியைத் தகர்த்துவிட் டெறிந்தவ
ருயர்நபி நயினா ரோதிய வொசிய்யத்
தியாற வெவர்க்கு மியற்றமிழ் செய்தவர்
நுவலரு மின்னா ஆறுத் தீனென்
றெவரு மெத்து மிருந்தவ மேலவா
பயனார் மரபிற் பலன்கொள வந்த
நயினார் முகம்மது சாகிபு நாத
ரருளிய சுல்த்தான் அகுமது சாகிபு
தருசேய் செய்கு மீரான் சாகிபு
செய்யுந் தவமு நேர்மையுந் திரண்டு
வையம் விளங்க வருமொரு மாதவ
ரில்லறத் துறவற மிருவகை யொழுங்கு
நல்லற மாக நடக்கு நடக்கையர்
மலையும் வனமு மறைபடு தலமும்
நிலையு முணர்வா னிட்டை யோகம்
வணக்கங் காட்சி வகைபல கொண்டு
முணக்கு முடலோ டொருமுகந் தொடர்ந்து
மிருபத் தைந்தாண் டிதுசஞ் சாரந்
தருபத் தியினார் தந்நிலை விளங்குங்
காரண வொலியாய்க் கமல கொண்டானிற்
பூரண மடைந்த புண்ணிய மூர்த்தி

நன்றிகால் செய்கு நவினூர் முகம்மது
வென்றிசா லரும்பயன் விளங்க வந்த
நற்குணங் குடிகொ ணயினூர் முகம்மது
இக்குணங் குடியி லிருந்தவக் குன்றாய்
நலம்பெற வுதித்த நன்மக வாஞேர்
தவம்பெறு முறைமையைச் சாற்றக் கேண்மின
சிறுபரு வத்தே தெளிதரு வேதத்
திருபய னெல்லா மோதி யுணர்ந்து
மரபி னிலக்கணத் தாவன வெவையு
மறுவறத் தேறு மதியின ராகி
யொப்பில் குணத்தி ஞேங்கிய சுல்த்தான்
அப்துல் காதிரி லெப்பை யாலீம்
எனப்பெயர் விளக்க மெழுந்து வருகையில்
வனப்புறூஉம் வாலை வயதுபதி னேழிற்
றந்தைதா டொழுது தருங்கரம் பற்றி
மூந்த வுபதேச மொழிநலம் பெற்றுத்
தன்னிலை திரியாத் தவத்திய லெடுத்து
மன்னிலை கொள்ளு மனத்தினே
தவத்தின தியல்புந் தாபத ரியல்பு
நலத்துறை யுணர்த்து நன்னூற் பலவுங்
கைதருங் கீழக் கரைதனில் வாழுஞ்
செய்கப்துல் காதிரி லெப்பை
யாலீ மிடத்தி லருளினோ டோதிச்
சாலவுந் தேறித் தாபத முறைகொண்
டருணபி கிசறத் தாயிரத் திருநூற்
றிருபதோ டிருநான் காண்டினி லுலக
முற்றுந் துறந்து முறைபல கடிந்து
பற்றற் றெவையும் பயன்பட வொழுகித்

தேங்கமழ் சோலைத் திரிசிர புரத்தி
லோங்கிய வறிவா னுயர்ந்த ஆலீம்
தன்னிலை யுணருந் தனமையுங் குணமு
முன்னிலை யியல்பு முழுதும் பகிர்ந்து
பூமியி லெவர்க்கும் பொருளா மௌலவி
சாம் சாகிபு தம்மைத் தொடர்ந்து
மாட்சிமை தருநெறி வகைநலந் துலங்கத்
தீட்சை பெற்றுச் சிறந்தன பெற்றுத்
தனிநிலை யொருமையைத் தாங்கி யிருவினைத்
துனியினை யொருவி மும்மலந் தொலைத்து
நாற்குணந் தெரிவுற் றைம்புல னடக்கி
யேற்கு முட்பகை யாறைய மெறிந்து
பாதக மேழையும் பசையறப் பறிந்து
மேதகு தவத்துறுப் பெட்டையு மேவி
யிரக மொன்பதி னெடுப்பன வெடுத்து
விர்தம் பத்தென விளங்கிய துறவே
பொருளாக் கொண்டு பொருந்தி வருகையில்
இருளாப் பகலா விதுவே நோக்கமாய்ப்
பகலெலா நோன்பு மிரவெலாந் தொழுகையு
மகலா நன்முறை யாகவுஞ் சிலநா
ணீர்நசை யூணசை நீங்கியு மாக்கைக்
கோர் நசையுங்கொடா தோர்ப்புந் தாங்கி
வாய்வா ளாமையா வருநாட் கிடையினிற்
போயொதுக் கொருங்கு புகுந்தொழிந் திருப்பச்
சிந்தையிற் றுணிந்து சிக்கந்த ரடங்கிய
மந்திர மருங்கின் மண்பல மொன்று
மறந்தாங்கி யூர்ப்புறத் தடுக்கல கத்துந்
திறந்தாங்கி யோரறு திங்களுந் தொண்டியின்

மாதுலவுடங்கிய வாழைத் தோப்பினு
மேதமொன் றணுகா தீரிரு திங்களு
மரைக்கா ணுழியி னமிழ்தா னென்பா
புரைக்காது கல்வத்தி யோகத் திருந்தன
ருள்ளிருந் தொருங்கு காணுங் காட்சியும்
வெள்ளிடை விரிந்து பரந்த காட்சியும்
தள்ளா தேகமாத் தன்னை யமிழ்த்தலின்
உள்ளா துணர்வினு மெய்ம்மை வினோதமே
காணுங் கருத்தரா மௌனகண் டிதரா
நாணும் பித்தர்போற் றன்னடை கொண்டு
கிளர்ந்தெழு சதுர கிரியினும் புருக்கி
வளர்ந்த மலையினு நாக மலையினும்
யானை மலையினு மிருங்குகை செறிந்த
வேனை மலையினு மிருளடை வனத்தும்
பல்விலங் காடிய பனமரப் பொதும்பு
நல்விலங் காடிய மொழிநதிக் கரையினு
மறிமட மசுறு பாகத் திருக்குஞ்
செறிமட யோகியர் சேகர நீத்துஞ்
சருகுங் கிழங்குந் தழையுங் குழையுங்
கருகும கனியுங் காயும் புசித்து
மாசன விகற்பத் தாகிய யோகமும்
போசன மறியாப் பொழுதொடு நேரமு
மேலாங் காலுங் கீழாந் தலையும்
பாலா முடலுமாப் பல்பட வணங்கியு
மொருபக லன்றிப் பல்பகல் விரதமும்
பலவிர வன்றி யோரிரா வொழிபு
யாக்கிய முனியித்தி னுண்டவர் பேர்க்கொரு
தேக்கரும் பாத்திகாச் சிறப்பிற் செய்தார்

நாடிய பேர்க்கரு ணையன நோட்டங்
கூடின பேர்க்குளக் கருணை நல்கியு
நினைத்த காரியம் நிறைவேறப் படுத்தியுந்
தனைத்தொடர் பவர்க்கா வனமுறை தொகுத்துஞ்
சிலபக லியாருந் தெரிய விருந்துஞ்
சிலபக லெறிந்துந் தெரியா திருந்தும்
பின்னர் தம்மிடம் பிடித்தகோன் புடனே
நன்னர் பயப்ப நயந்தலைக் தனரால்
கண்டகண் டிதமாய் நாளினைக் கணித்துங்
கொண்டகண் டிதமெய் யோகங் கொண்டுந்
துண்டிடு கண்டுந் தூய்பாற் சிறிதுங்
கொண்ட பொழுதுங் கொள்ளாது மிகுதியு
மொருவர்க்குங் காணு வொதுக்கமும் பதுக்கமு
மிருவர்க்கே காணு மேகமு மாகத்
தூங்காது தூங்கிச் சகத்தொடு தன்னிலை
நீங்கா திருந்த நிலைமையென் சொல்வேன்
பதையா திம்முறை பன்னிரண் டாண்டுஞ்
சிதையா திருந்த செய்கையென் சொல்வே
னரிதரி தம்ம வசுமொரு நிலைபட
வரிதரி தம்ம வருமையென் சொல்வேன்
பேரின்ப வெள்ளப் பெருக்கி லழுந்தியு
மாரின்ப மீறிய தானமென் றுதியிற்
றொடருயிர் காந்தத் தொடரமு மென்னப்
படர்தரு மாசைப் பற்றங் கிழுப்பத்
தழல்படு கரிய தழலா யினும்பெயர்
சுழல்பட லிலையாற் கழன்று லன்றி
யொன்று காவென் றுரைக்கு முறைபோல
வென்றுள் கடத்தை விடுத்து நீங்கி

யிருவகை யிறப்பு மிறந்தப்பு மப்பு
மொருவகை சுடரு மொளியும் போலக்
காரண மெவையுங் கலவ ததன்ற
பூரணத் தொடெரி பூரண மடைந்தா
ரேற்படு குறைமுடி வெய்த மாவயது
நாற்பது மேழு நிறைய நடந்ததே
யித்தகை தவத்தி னேறிய தாபர்
பத்தியிற் பயின்று பல்பல முயற்சி
கொண்டு வருநாட் டன்னிற் குமிழி
மண்டுமொ நந்த வெள்ள மல்கிப்
பொங்கி வழிந்து புறம்பொழி வதுபோ
லிங்கித நாவி னெழுந்தசில் கவிக
ளயம்பெறு மவற்றை நால்வரு முணர்ந்து
பயன்பெற வச்சிற் பதிப்பிக்க நாடி
முடையா னுடையதோர் சம்மதத் துணர்வி
னடையா னன்றித் தண்ணடை யின்றியு
மறையாக் கருத்துங் குறையா வறிவி
னிறையான் மாய்ந்த காய நிலைபைக்
குணங்குடி மஸ்தா னெனக்குறி யிட்டும்
பிணங்கா திணங்கா தொருபெயர் தரித்து
மிப்பெய ராற்பல புதுமை யியற்றியு
மப்பெய ரான்மனத் தெருணிலை யமைத்து
மளவிலாக் காரண மவரவர் காணக்
களவிலா மெய்ந்நிலைப் பயனது கனிந்து
மிவ்வண மேழாண் டாகவித் திசைதிரிந்
தவ்வண நிலையான் வடதிசைக் கடந்து
கண்டா ரெவருங் களிகூர்ந் துள்ளந்
தொண்டாய்த் தொழுதிடத் தோற்றுமா தவராய்ப்

பன்னு டவரும் பலன்பெறத் தரிசனந்
தன்னு துயர்தவந் தாங்குறு வினையராய்
மன்னுணர் வினுஞ்சில வதியுணர் வினுஞ்சில
தன்னுணர் வினுஞ்சில நடைபயில் கையராய்
நேர்மையி னுள்ள நேர்ந்தவ ரெவர்க்கு
மோர்மை புரியு முயர்தே சிகராய்ப்
பொன்னை மா நிதியைப் போற்றலிற் போற்றுஞ்
சென்னை மா நகரஞ் சிறப்பொடு புகுந்தார்
முன்னைய நினைவினும் புறவுணர் முளைத்துந்
தன்னய முறைபோற் றடைபடா தலவியுஞ்
சிலபகல் வெளிபடத் திருந்து மறைபடச்
சிலபக றடங்கியு மௌனமாய்த் திரிந்துஞ்
சுட்டிக் காட்டியு மெண்ணிற் றொகுத்து
மெட்டிக் காட்டியு மெழுதிக் காட்டியு
மியல்பின் வேண்டுவ வெவையும் விளக்கியும்
பயிலுஞ் சிலநாள் பலன்பெற யாருமே
பாவா லெப்பை யெனும்பிர பலவான்
காவாந் தோட்டத்திற் கதிநலம் பெறுவான்
மக்க ளுவந்து மனப்பொருத் தங்கொண்
டெக்காலும் புகழ்பெற வினிதி னக்கிய
தலத்தினைத் தைக்கா வாகத் தகைத்து
நலத்தொடு கல்வத்து நாடிப் புகுந்தா
ரயன மொருமூன்று மதனுட் டனித்துப்
பயனுறு மியோகப் பண்பி னிருந்தா
ராவ முதலா வூர்வன வடைபட்
டொரக ளுணரா துணர்வினி னின்ற
நிலையே புதுமை நிரம்ப விளக்கக்
கலையே கலையாக் கண்டொறு வெளிவர்

ஆங்கு முரிதி னுயர்வழி யவாது
தாங்குங் காதி ரியயாத் தன்னை
கண்ணேட்ட மிட்டரு டருகெனக் கனிந்து
வெண்ணேட்ட நன்மையே யியைந்த கருத்தின
ரவர்களுக்குரிய வன்புறு பத்தரி
லெவர்களு மதிப்ப விளங்கு சேர்மைய
ரிருபோது மவர்பெய ரேத்தி யேத்தி
யொருபோது மறவா வுறுதிச் சிந்தையர்
மருவளர் பூவன மல்க மல்கிய
திருவளர் செழுந்தடச் சீய மங்கலப்
பதிவளர் செல்வப் பதியரு ணசல
முதலியா ரினிய முயன்று கேட்ப
வுலக முற்றுந் துறந்த வுள்ளமு
முலக மனுவுந் துறவா வுள்ளமு
மொருவகை யானு மொன்ற ததுபோ
லிருவகைப் பட்ட விதய ரொயினும்
வரத்தின ரருணலம் வருவழி யென்றே
திரத்தினி ஞேர்ந்து ளுவந்து துணிந்தனன்
சொல்லு மதுவே பொருளு மதுவே
புல்லுந் தொகையும் புணர்ப்பு மதுவே
யன்றி யொன்று மமைத்தே னல்ல
னன்றி யொன்று நடைகொ ளடியி
னின்ற திடரினைப் பெயர்த்தலு நிரைபடச்
சென்ற வெழுத்தினைச் சேர்த்தலும் வழுவா
வழிபோன் மாறி நிறுத்தலும் வழக்க
மொழிபோற் பதித்தலு முற்றப் படுத்தலுங்
குறிப்பிற் றுறையுங் கோத்த வதிகாரமும்
பெறப்படச் செய்தலும் பின்முன் கவிகளை

மாலை புணர்க்க மாட்டலுங் குறைந்த
காலை நிலைக்கக் கட்டலும் வெறுத
பாலும் பழமுந் தேனும் பருகுதல்
போலுஞ் சேரப் பொருத்தலுந் திருத்தலும்
பார்ப்போர் பார்க்கப் பயன்படு முறையுஞ்
சேர்ப்போ ருள்ளஞ் சிறக்கு முறையுங்
கொண்டொழு கினனுற் களிகூர்ந் துயர்ந்தோர்
கண்டொழு குவதே கடனு மன்னே
குணங்குடி யாற்சொற் குணங்குடித் திடுமின்
மணங்குடி திருமனை வாழிவாழ்ந் திடுக
வறந்தாங்கி யார்சொ லறந்தாங் கிடுமின்
சிறந்தாங் குயர்பதம் வாழிசேர்ந் திடுக
வொருமை படுத்த லுண்டா முண்டா
மிருமைப் படுத்த லின்று மின்றும்
பொய்மைத் தொடர்வினை போகும் போகு
மெய்ம்மைத் தொடர்வினை மேவும் மேவும்
புறத்தும் வையாளி போடும் போடு
மறத்திரை யுள்ளு மாடும் மாடும்
விண்ணு மண்ணும் விரியும் விரியுஞ்
சென்னாந் திண்ணாந் திரியுந் திரியுந்
துவித மலவத் துவித மென்றே
யெவிதத் தானு மிதயந் தெளியுமே
தொட்டுந் தொடாதுஞ் சொற்றலை யுணர்ந்தாற்
கிட்டு மொருமை கிருபையி னறிக
வென்னிய லுணர்வா னிதய முளதே
லக்கிலை யுரைப்ப னருளீர் கேண்மி
னரும்பதி காய லறிவா ளரினுயர்
பெரும்பதி மானுப் பிள்ளையி லப்பை

யாலீ ழுதலிய வருண்மணி பலகலை
நாலி னணிமுறை நோற்றனு பவித்த
வேதாந் தக்கடன் மெய்ஞ்ஞா னப்பொரு
ளுதாந் தச்சுடர் நலமிகப் பொதிந்த
சித்த ராகு மன்றியுஞ் சீவன்
முத்தர் கபீபு முகம்மதி லப்பை
செய்தவத் துதித்த செல்வன் குணங்குடி
மெய்தவத் தினர்க்கு வித்தையிற் றேழன்
பயன்பெறு புராணமும் பலபிர பந்தமு
நயன்பெறப் புனையு காவல னெவர்க்கு
முண்மைப் பொருள்வழி யோம்புந் தேசிகன்
வண்மைக் கரத்துடை வள்ள லிறசூல்
செப்பிய வழிபுனை செய்கு
அப்துல் காதிரி லெப்பையா லீமே.

முற்றிற்று.

---

# தொகைச்சொல் விளக்கம்.

ஒருமை-ஒன்றுபடுந் தன்மையாதல், அது இறைபுணர்வு, இ
வினை-நல்வினை, தீவினை, மும்மலம்-ஆணவம், மாயை, காமிய
நாற்குணம்-அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, ஐம்புலம்-சுவை
ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், உட்பகையாறு-காமம், குரோதம், உலோ
பம், மோகம், மதம், மாற்சரியம், பாதகமேழு-அகங்காரம், உலோ
பம், காமம், பகை, போசனப்பிரியம், காய்தல், சோம்பல், தவத்
றுப்பெட்டு-ஊணசையின்மை, நீர் நசையின்மை, வெப்பம்பொறு
தல் தட்பம், பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரை
றுத்தல், இடையிட்டு மொழிதல், வாய்வாளாமை. இரதமொன்ப
சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை
சாந்தம், அற்புதம், பயம், விரதம், பத்துறுப்பினது துறவு-யா
கைக்கு மாவிக்கும் வேண்டிய பொருள்களில் விதித்தனகொள்
ல், விலக்கியன நீக்கிவிடுதல், இறைவன்பாற் பற்றுநிலைத்தல், மா
மருளின் மயக்கறுத்தல், அவனையே விசுவசித்தல், வேறுமியல்
களை யொதுக்குவித்தல், தன்னியல்பை நினைந்தெப்போதுஞ் ச
சலம்பநித்தல், தன்பிழை பொறுக்குந் தகைமைதேடல். அனை
வல்லபத்திற்குத் தன்னேலாமையை நோக்கி யிரங்கல்.

நேரிசை வெண்பா.

பெரியோர் கருத்தைப் பெயர்த்தறிய லாக
வுரியோ ரவைக்கு முரியோர்-பெரியோர்க்குச்
சொல்லும் பொருளுந் தொடரா திரண்டாகும்
புல்லும் பொழுதிற் பொருள்.

பிசுமில்லாஹிவொஹிபிஸ்தயீன்

குணங்குடி

# மஸ்தான்சாகிபு

## அவர்கள் பாடல்.

பிசுமில்லாகி அலாநியத்து சுல்த்தான்

அப்துல்காதிர் முகியித்தீன்

குருவணககம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இணங்குமெய்ஞ் ஞானப் பேரின்பக் கடலி
னின்னமு தெடுத்தெமக் களிப்போன்
பிணங்கிய கோச பாசமா மாயைப்
பின்னலைப் பேர்த்தெறிந் திடுவோன்
வணங்கிய தவத்தி னோர்க் கருள்புரிய
வள்ளலாய் வந்தமா தவத்தோன்
குணங்குடி வாழு முகியித்தி னெமன்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்.

வஸ்துதயத்திறனந்தம்.

ஆசிரியவிருத்தம்.

மருலியத் தானதாத் துல்கிபுரி யாவில்
மறைந்தகண் சுல்ம குபியாம்
மஸ்கூத்து அன்குல் கதீமுல் அமாவான
மவுஜூ தெனுஞ்சி ருபுலே

## ௬அ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

அகதியத் தூகதாதி வாசுதிய் யத்தான
ஆலம்அறு வாகா னதில்
ஆலம்மி தாலாகி ஆலம்அசி சாமான
ஆலம்இன் சாஞ னமின்
பகுதியத் நில்லா ஜலாமொடு ஜமாலும்
பதிகுல்க மாலு மாகி
பகுதுகபு லற்றலா கூத்தூஜப றாத்தில்
பகாவான குவியத் தினல்
நகுசியத் தற்றுமுன் ருளினிமுல் பெற்றடிமை
நானினைவு மற்றுய் வனே
நற்குணங் குடிகொண்ட பாத்தூஷா வானகுரு
நாதன் முகிபித் தீனே.

வஸ்துதய நிலத்தினைந்தம்.

பழுதானி யத்திலோ சுபு கானி யத்தெனப்
பகர்பரா பர மதனிலோ
பற்பல விதங்கொண்ட அகியானி யத்திலோ
பரிபூ ரணந்தன் னிலோ
அரிதான தாத்திலோ அல்பெனுஞ் சுகவாரி
யாகும்நுக் தாப தனிலோ
அகுலம்உ லாவான ஆலமலக் கூத்திலோ
ஆலம்அசு பல்தன் னிலோ
குறிகுணு நீதவட் டாங்கயோ கத்திலோ
கோடானு கோடி வறையாற்
கூறரிய சிவராச யோகத்தி லோவருட்
குறையாப் பெருங் கடலிலோ
நாலெிக ரருளாள னேநீ யிருப்பதிந்
நாயினேற் கருள் செய்குவாய்

நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (உ)

விளையாட்டி ளுனந்தம்.

அண்டகோ டிகளுமோர் பந்தெனக் கைக்குள்
ளடக்கிவிளை யாட வல்லீர்
அகிலமோ ரேழினையு மாடுங் கறங்குபோ
லாட்டிவிளை யாட வல்லீர்
மண்டலத் தண்டரை யழைத்தரு கிருத்தியே
வைத்துவிளை யாட வல்லீர்
மண்ணகமும் விண்ணகமு மனுவைத் துளைத்திதின்
மாட்டிவிளை யாட வல்லீர்
கண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்
கலக்கிவிளை யாட வல்லீர்
கருதரிய சித்தெலாம் வல்லநீ ரடிமையென்
கண்முன்வரு சித்தில்லையோ
நண்டளந் திடுநாழி யாவனோ தேவரீர்
நல்லடிக் காளாகியும்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௩)

தன்னியலினுனந்தம்.

ஐயோ வெனைப்போலு மாப்பெரும் பாவியிவ்
வகிலத்தி லெங்கு மில்லையோ
அநியாய மநியாய மென்பெரும் பாதகம
தார்பா லெடுத்தோ துவேன்
மையான கண்ணியர் வலைக்குள் ளகப்பட்ட
பாபாவி தீபா வியான்

மருளூபு சுபுகானி யானவுமை நாடாத
மடமைகுடி கொண்ட பாவி
பொய்யான வாழ்வதனை மெய்யாக நம்பியுன்
பொன்னடி மறந்த பாவி
பொல்லார்க ணேசமே யல்லாது நல்லோர்
புறக்கணித் திட்டபாவி
நையுமோர் பொய்யுலக ளுகியே யுமதடிமை
நாயினுங் கடையா வனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே.

மகிமையிளுநந்தம்.

மாதவர்க் கரசான மன்னர்க்கு மன்னுக
வந்தமக ராஜ னீயே
மண்டிசையும் விண்டிசையு மெண்டிசையு நின்றசை
வாசனும் போஜ னீயே [யும்
ஆதிநீ மருளுக்கு றருமானு நீயெனக்
கான மருபூபு னீயே
அக்கானி யத்திலே சொக்குறு சாதுதந்
தருள்செய்ய வந்த நீயே
வேதநீ வேதவே தாந்தநீ யெனையாளும்
வித்தகன் ருனு நீயே
மெஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ
விரிகதிர்ச் சுடரு நீயே
நாதனீ நவநாத சித்தனீ முத்தனீ
நாதாந்த மூர்த்தி நீயே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௭)

### வறுமையினானந்தம்.

மன்னிய தவத்தினர்க் கருடந்த தருவுநீ
மாதாபி தாவு நீயே
மட்டறு பவக்கட றலைக்குமொரு கவிழா
மரக்கலமு நீயல்லவோ
அங்கியம தானபிர பஞசமாம் பெருநெருப்
படக்கும பெரும் பாலமா
மன்புட னெனைப்பெற்ற வப்பனே யருடந்த
வாண்டவனு நீயல லவோ
என்னையுனை யன்றியினி யாள்வரொவ ரையனே
யெங்கையே யெம்பி ரானே
இகபர மிரண்டினுள சுகதுக்க மற்றியா
னீடேற வருள்பு ரியவே
நன்னிலைய மாகவென் முன்னிலையில் வந்துமெந்
நாளும்ரட் சித்தருள் வையே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வான குரு
நாதன் முகியித் தீனே. (௧)

### இரக்கத்தினானந்தம்.

கல்லுமொரு போதிற் கரைந்துருகு மேன்மனக்
கற்கரைவ திலையை யனே
கவலைகளை யிவளவென் றென்றனை யென்றற்
கணித்துமுடி கூடு திலையே
அல்லுபக லாகவென் னவகீர்த்தி யவகீர்த்தி
யம்மம்ம வென்சொல் லுகேன்
ஆறுலு மார்க்காக வடிமைகொண் டாயிந்த
வடியனே னுய்யும் வண்ணஞ்

சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுண்டியான்
சும்மா விருக்க வருள்வாய்
சுத்தபரி பூரணச் சுகவாரி தன்னிலோர்
சொட்டாகி னுந்தொட்ட பேர்
நல்லவர்க ளல்லவர்க ளல்லவர்க ளென்றைக்கு
நானுநல் லவனவனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௮)

பெருமையினுநந்தம்.

சொல்லான் முழக்கமிட் டோலமிடு வேதமுஞ்
சொன்னது டன்ன மின்னஞ்
சுருதிமுத லாகம புராணகலை யோதிய
"சுலோகங்க ளென்சொல் லுகேன்
பல்லாயி ரங்கோடி யண்டபகி ரண்டமுன்
பாதபங் கயமல் லவோ
பரிபூர ணானந்த மேயுனது முடியெனப்
பகர்வதும் பொய்யா குமோ
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தல்லாது
மற்றவர் தமக்கு முளதோ
வானவர் தினந்தினம் வந்துன் பதம்பணியு
மகிமைசொல வாயு முண்டோ
கல்லோர் தமக்கலா தெல்லார் தமக்குமுனை
நவிலுதற் கெளி தாகுமோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௯)

தன்னிலையி னாநந்தம்.

சித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை
நிலையமென் றிடுவ தல்லால
நிலையாத காயமென் றெண்ணவோர் கனவினு
நிசமாக யான நிகிலேன்
எத்தனை விதங்கண்டான் கற்கினுங் கேட்கினு
மென்மன திணங்கு திலையே
ஏதென் றெடுத்துரைப் போனெமக் கிறைவனே
யெங்கோ னெனும் பிரானே
மற்றவர்க ளெத்தனை யிருக்கினு மெனக்கொடிய
வல்வினை யகற்ற வசமோ
மலையிலக் கெனநம்பி னேனப்பி னேனென்று
வந்தெனுட் குடிகொள் வையே
நற்றவமு முத்தியுஞ் சித்தம்வைத் தருள்செய்ய
நாட்செல்லுமோ வறிகிலேன்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. (௩)

காரணத்தி னாநந்தம்.

கடலிற் கவிழ்ந்ததோர் கப்பலா லாத்துடன்
கடுகிவர வேய ழைத்தீர்
குடிகொண்டு கர்ப்பவறை யுள்ளிருக் கையிலுமைக்
கொலைசெய்ய வந்த முனியைக்
குதிகொண்டு வெளிசென்று இருதுண்டு கண்டுபின்
கூர்கர்ப்ப வறை புகுந்தீர்
பிடியிற் பிடித்துண்ட பிள்ளைசந் நியாசிகுடர்
பிறிவர வேய ழைத்தீர்

# மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

நீக்கமற வெங்கெங்கு நின்றுநிறை கின்றபொரு
ளேனிலென் முன்னிற்கவே
நிர்விஷய சுத்தமா சற்பர வெளியான
நிர்க்குணமென் முன்னிற்கவே
தாக்கிமா கோடிமறை வாக்கியம் பறையுமா
தத்துவமென் முன்னிற்கவே
தத்துவா திகளற்ற முத்திக்கு வித்தான
சற்குருவென் முன்னிற்கவே
போக்குவர வற்றபரி பூரணா னந்தமெப்
போதுமென் முன்னிற்கவே
புன்மைகுடி யானவடி யேனுமுமை நம்பினேன்
பொய்மைதீர்த் தாளுதற்கே
வாக்குமா றுதநாக் குள்ளநீர் பின்றொடர
வள்ளலிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௨

இகபரமி ரண்டொன்று வகையுண்டு வெளிகண்ட
வீசனென் முன்னிற்கவே
ஏகமா கியபரா பரமெனது முன்னிற்க
வெப்பொருளு முன்னிற்கவே
வகைதொகுத் தோலமிடு மறைகண்மூர சறைகின்ற
வள்ளலென் முன்னிற்கவே
வானாதி பூதமுந் தானாகி நின்றபெரு
மானெனது முன்னிற்கவே
அகமகிழ வந்தகுடி கொண்டகுரு நாதனடி
யாருமென் முன்னிற்கவே

அன்றுமின் றென்றுமடி யேனுமுமை நம்பினே
னண்டிவந் தாளுதற்கே
மகிழ்ந்துன்னு புன்னகைப் புள்ளநீர் பின்றொடா
வள்ளஷிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (ஸ)

நோக்குநோக்கொண்ணாத நோக்குநோக்காநின்ற
நோக்கெனது முன்னிற்கவே
நோக்கிப் புராதனப் பொருளான நுண்ணறிவி
னுட்டமென் முன்னிற்கவே
நீக்கமற வங்கிங் கெனாதெவங் கெங்குமொரு
நிறைவெனது முன்னிற்கவே
நேசித்த நெஞ்சமே குடிகொண்ட வான்கருணை
நேயமென் முன்னிற்கவே
போக்கொடு வரத்தொடு விகாரமது வாய்நின்ற
புநிதமென் முன்னிற்கவே
புல்லறிஞ னவடி யேனுமுமை நம்பினேன்
போதுமென வாளுதற்கே
வாக்குமன மொத்தமர புள்ள நீர் பின்றொடா
வள்ளஷிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௯)

எற்றுத மாயைதனை யெற்றுபே றெற்றுபே
ரின்பமென் முன்னிற்கவே
ஏகமா யொருகால மழியாத வொளியான
வெம்பிரான் முன்னிற்கவே

## ௯௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

புத்திக்கு மெட்டாத வட்டாங்க யோகமழை
பொழிவதென் முன்னிற்கவே
பூதமுத லைதமுட னேதுமதா வானவான்
பொருளென்று முன்னிற்கவே
குற்றமின் னற்குணக் குடியா னெனுங்குணங்
குன்றெனது முன்னிற்கவே
கொடுமைகுடி கொண்டவடி யேனுமுமை நம்பினே
குறைவுதீர்த் தாளுதற்கே [ன்
வற்று வருட்செல்வ முள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ளிறைகுணங் குடிவாழு மென்னிருக்கண்
மணியே முகியித்தீனே. (௫)

ஊரற்று நாமரூ பத்துடன் பற்றற்
றுயர்ந்ததென் முன்னிற்கவே
ஒன்றற் றிரண்டற்று வாக்கற்று மனமற்
றுதித்ததென் முன்னிற்கவே
கூறுகுண மற்றுமொளி யற்றும்வெளி தத்திக்
குதித்ததென் முன்னிற்கவே
குறியற்று மறிவற்று நிறைவுகுறை வற்றுங்
குலாவியதென் முன்னிற்கவே
ஈறுமுத லற்றுமின் றற்றுநா ளையுமற்
றிருப்பதென் முன்னிற்கவே
எதுமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
னின்பமுற் றாளுதற்கே
மாறிலா நற்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே

வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (சு)

தேடியே வந்தருட் டந்தடிமை கொண்டவென்
றேசிகன் முன்னிற்கவே
சிற்பர வெளிக்கொளி கொழிக்குமா கர்ப்பூர
தீபமென் முன்னிற்கவே
நாடரிய செஞ்சுடர் பரப்புகுரு நாதனெந்
நாளுமென் முன்னிற்கவே
நானுவி தங்கொண்ட வாசாம கோசரா
நந்தமென் முன்னிற்கவே
ஈடுசே டற்றசிற் சத்தியாமெம்பிரா
னென்னெதிரின் முன்னிற்கவே
ஏற்கைமுன் னிற்கவடி யேனுமுனை நம்பினே
னிங்குவந் தாளுதற்கே
வாடாத சமநிலைய முள்ளநீர் பின்றொடர
வள்ளலிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (எ)

அருளகண் டாகார வானந்த பூர்த்தியெனு
மாதார முன்னிற்கவே
ஆதிசொற்பிர காசவரு டேசா மயந்தந்த
வாதிக்க முன்னிற்கவே
குருநாத னகமெய்ப் பிரணவ சொரூபக்
கொழுந்தெனது முன்னிற்கவே
கூரிய சாலம்ப ரகிதமாகிய திவ்ய
குணசாந்த முன்னிற்கவே

நிருவிகா ரத்துடன் றளதனென நின்றெருநிர்
  நிராமயம் முன்னிற்கவே
நிலையமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
  னேயம்வைத் தாளுதற்கே
மருமலர் மணக்கோல முள்ளநீர் பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (அ

பலவுமா யொன்றுமா யேன்றுமாய் நின்றதற்
  பரமெனது முன்னிற்கவே
பரமான தெப்பொருளு மதுவாய் முளைத்துவிளை
  பயிரெனது முன்னிற்கவே
நிலைசரமொ டிகபரமு முயிரினுக்குயிராகி
  நின்றதென் முன்னிற்கவே
நேரிட்ட ஞானசூ ரியனு யுதித்தநன்
  னெறியெனது முன்னிற்கவே
அலையுலகு கானலி னீரெனத் தோன்றுமெய்
  யறிவெனது முன்னிற்கவே
அய்யனே யஞ்சியடி யேனுமுமை நம்பினே
  னுதரித் தாளுதற்கே
மலையிலக் கானகுறி யுள்ளநீர் பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (க

உடல்பொருளொ டாவியுங் கைபற்றி யெனையாளு
  முத்தமன் முன்னிற்கவே

ஊனுதி யுபிராகி யூனுயிர்க் குயிரான
வுண்மையென் முன்னிற்கவே
திடமாயை தொடரா தடர்ந்தேறு மெஞ்ஞான
தீரமென் முன்னிற்கவே
திவ்யகரு ணாகர முகம்மத ரெனும்மருட்
செல்வமென் முன்னிற்கவே
கொடியொடு கொழுகொம்ப தாகநீர் வந்துகுதி
கொண்டெனது முன்னிற்கவே
கொத்தடிமை யானவடி யேனுமுமை நம்பினேன்
கொண்டணைந் தாளுதற்கே
வடிவிலரு நடனவடி வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமணி ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௧0)

சதகம் - முதலாவது பதிக முற்றிற்று.

ஆக பாடல் - உ௪.

---

அப்பொருடானே யெப்பொருட்குணமு
மொப்பியு மொப்பா தாகிய வுண்மையைப்
பிரியாது தெரிசிக்கப் பிரியமா யெனக்குங்
கருணைகூர்ந் தருள்கெனக் கனிந்துநின் றிரத்தல்.

நித்தமாய் நன்னிருவி கற்பநிஷ் டாபரக
ணெற்றினே யிட்டபொருளே
நிச்சயவ கோசரத் தாதார பேதமிலை
நின்றுநிறை கின்ற பொருளே
முத்திக்கு வித்தாய் முளைத்துவிளை பொருளெயருண்
மொய்த்தகூட ருற்ற பொருளே

மும்மண்டலங்களுங் கொண்டமூலாதார
மோனவடிவான பொருளை
புத்திக்கு மெட்டாத புத்திக்குணின்றிலகு
போக்குவரவற்ற பொருளை
போதவருள் புரியவடியேனுமுமை நம்பினேன்
புனிதமுடனுருதற்கே
மத்தமத யானைநிகருள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (க)

பெத்தமொடு முத்தியு மகிழ்ச்சியு மிகழ்ச்சியும்
பின்னுமுன்னுங் கெட்டதைப்
பெரிதுசிறி தருவுருவோ டதுவிதென் பதுவும்
பிறப்பிறப்புங் கெட்டதை
சிந்தித்த லோடுவந் தித்தலும் பொய்மையொடு
நிசமென்ப துங்கெட்டதை
நீநானெ னலுமொன் றிரண்டெனலு நீதமோ
டநீதமெனலுங் கெட்டதை
அந்திபகல் போக்குடன் வரவுமன வாக்கொடுங்
கங்கென்பதுங் கெட்டதை
அறியாம லறியவடி யேனுமுமை நம்பினே
னறிவுதந் தாளுதற்கே
வந்தடிமை கொள்ளமன முள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (உ)

மூத்தைநவ மணியையொளி பத்திபா யும்மணியை
மோனமணி ஞான மணியை

மொய்த்தகதிர்மாசிலா மணியைவர்ணாதியா
  மூவுலகு மானமணியை
சித்திமணியைச்சித்தி தருமுத்திமணியையென்
  சிந்தைகுடி கொண்டமணியை
திவ்யகுருமணியா யிழைத்தசிங்காசனச்
  சிகரத்தி னுச்சிமணியை
பத்தர்கட்கெய்த்தாரூ டாமணியையிறைபார்த்த
  பரமார்த்த வகனமணியை
பணிபூண்டுபோர்க்கவடி யேனுமுமைநம்பினேன்
  பணிபூட்டி யாளுதற்கே
வைத்ததீபத்திளிக ருள்ளநீர் பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௩)

காராறெனப்பே ரருட்கடலினீருண்டு
  கவிகின்ற கருணைமுகிலை
க்கனவட்டப்பெரு வெளிக்குமப்பானின்று
  காலூன்று கின்றமுகிலை
தாராதவருடந்த குருமௌனமுகிலையென்
  றுயிற்சிறந்த முகிலை
சண்டமாருதமென்ன வருள்பொழியுமுகிலைச்
  சராசரங் கொண்டமுகிலை
பாராதிபஞ்சவன் னப்பகுதியாகப்
  பரந்துவரு டித்தமுகிலை
பரவிவருடிக்கவடி யேனுமுமைநம்பினேன்
  பருவம்வந் தாளுதற்கே

வாராநெறிக்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (ச)

தத்தியேகங்கறப் பெருகிவருமானந்த
சமரசப் பெருவாரியை
சார்ந்தன் பரிதயங் களிக்கவேபொங்கிவரு
சந்ததச் சுகவாரியை
சுற்றிக்கவிந்துகொண் டெங்குமொருமிக்கவே
சூழ்கருணை நிறைவாரியை
சொற்பிரகாசந்தரு சுயஞ்சோதியாய்நின்ற
சோமசுந்தர வாரியை
எத்தனைவிதங்கொண்டு சொல்லினுஞ் சொல்லொணு
வினியபூரண வாரியை
எப்பமிடவூட்டவடியேனுமுமைநம்பினே
னெட்டிவந் தாளுதற்கே
மத்திபத்தீபநடு வுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (ரு)

அன்புப்பெருக்கைநல் லறிவுப்பெருக்கைமெய்ஞ்
ஞானமிர்தப் பெருக்கை
அணையற்றபோராசை வெள்ளப்பெருக்கையறி
வாகாரவான் பெருக்கை
இன்பப்பெருக்கையருள்பொங்கும்பெருக்கைவெளி
யெங்கெங்கு மொளிபெருக்கை

ஏகப்பெருக்கையனு போகப்பெருக்கைநல்
    லினியசெந் தேன்பெருக்கை
தென்புப்பெருக்கைவெகு டம்பப்பெருக்கைமா
    திவ்யமதுரப் பெருக்கை
சேரப்புகட்டவடி யேனுமுமைநம்பினேன்
    சித்தம்வைத் தாளுதற்கே
வன்புப்பெருக்குவடி வுள்ளநீர்பின்றொடர
    வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித்தீனே. (சு)

கண்டபொருளத்தனையு மாகிநின் றவைகளுங்
    காணாத காரணத்தை
கருதரியசித்தாய்வி சித்தமாய்நின் றிலங்
    காநின்ற காரணத்தை
அண்டகோடிகளையுந் தன்னுள்வைத் தணுவினுக்
    கணுவான காரணத்தை
அறியாமலென்றெய்வ முன்றெய்வமென்பார்க்கு
    மவ்வகைக் காரணத்தை
யெண்டிசைவிளக்கின்ற வித்தாயிருந்துமோ
    ரிடமற்ற காரணத்தை
எய்திக்களிக்கவடி யேனுமுமைநம்பினே
    னெதிர்காட்டி யாளுதற்கே
மண்டலமும்விண்டலமு முள்ளநீர்பின்றொடர
    வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித்தீனே. (எ)

நிலையமுடனெங்கணுங் கோத்தநிலகுலையா து
நின்றதேசோ மயத்தை
நெற்றிவிழியூடுநிலை நின்றோருளந்தனி
னொளிர்ந்ததே சோமயத்தை
தொலையாதிலங்குதுரி யாதீதமானவத்
துவிதமே சோமயத்தை
தொந்தங்கடிந்தவர்க ளுந்திக்குள்வண்டாய்த்
துவண்டதே சோமயத்தை
சலியாதவயிராக்ய நிரனையனுப்புறச்
சார்ந்ததே சோமயத்தை
சரமுனெற்கருளவடி யேனுமுமைநம்பினேன்
சனுதிவந் தாளுதற்கே
மலிகருணைமிக்கவனு வுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (அ)

எல்லைநிலைசொல்லரிய வல்லமையொடெங்கணு
மிருந்தஞா னோதயத்தை
எப்பொருளுமெப்பொழுது மெவ்விடமுமவ்வடி
விளங்குஞா னோதயத்தை
அல்லிலும்பகலினு மன்பர்மனவில்லினி
லடைந்தஞா னோதயத்தை
அழிபாய்ப்பதிக்குவந் தாள்குணங்குடியா
ரணைந்தஞா னோதயத்தை
தொல்லையறுநல்லறிஞர் சொல்லும்வழிசெல்லின்வெ
தோற்றுஞா னோதயத்தை

தொழுதெழாப்பாவியடி யேனுமுமைநம்பினேன்
றொண்டுகொண் டாளுதற்கே
வல்லபஞ்சொல்லவர் துள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௯)

தொலையாதவன்கருணை குடிகொண்டிருந்ததே
சோமயா நந்தகுருவை
சொந்தமுடனென்றனையும் வந்தடிமைகொண்டே
சுகந்தந்த மௌனகுருவை
நிலையாதமாயைநிலை குலையநிலைகுலையாத
நெறிதந்த ஞானகுருவை
நித்தியாநந்தசுக முற்றுமகுழுதென்ற
நிட்டைநே ரிட்டகுருவை
சலியாதணைத்துமுத் தந்தரவெனைப்பெற்ற
தந்தையாய் வந்தகுருவை
தழுவவறியாதவடி யேனுமுமைநம்பினேன்
றயைபுரிந் தாளுதற்கே
மலைகள்பொடிபடுநடையு முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தினே. (௧௦)

ஆக பாடல் கூச.

---

பன்மையாய்விரிந்த பல்பொருளெலாமதன்
றன்மையாயிருந்த தகுதியைவிளக்கு

## ௭௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

அருளொளிவிளக்கினை யருள்கவென்றுசான்
றெருளொளிபதமலர் சிந்தைசெய்திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

எங்குமருள்விரிவாகி யங்கிங்கெனாதாகி
யென்றன் பிராணனுமாகி
எண்ணரியவண்டபகி ரண்டங்களாகிநின்
றிகபர மிரண்டுமாகி
பொங்கிவழிகொண்டுபல் கடமெலாம்பெருகுபரி
பூரணா னந்தமாகி
புனிதமெய்ஞ்ஞானவா னந்தமழைமாரியைப்
பொழிகருணை முகிலுமாகி
கங்குல்பகலில்லிரவி மதியாகியெங்குமொரு
கங்கற்றகங்கையாகி
கனியுமொளிபுரியவடி யேனுமுமைநம்பினேன்
கருணைவைத் தாளுதற்கே
மங்காததிங்களொளி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதணங் குடிவாழுமென்னிருக்கண்
மணியே முகியித்தீனே. (க)

ஊனாகியூனிலுயி ராகியெவ்வுலகுமா
யொன்று மிரண்டுமாகி
உள்ளாகிவெளியாகி யொளியாகியிருளாகி
யூருடன் பேருமாகி
கானாகிமலையாகி வளைகடலுமாகிமலை
கானக விலங்குமாகி
கங்குல்பகலாகிமதி யாகிரவியாகிவெளி
கண்டபொரு ளவையுமாகி

நானாகி நீயாகி யவனாகியவளாகி
நாதமொடு பூதமாகி
நாடுமொளிபுரியவடி யேனுமுமைநம்பினே
னன்மைசெய் தாளுதற்கே
வாரோநுமடிபணித லுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௨)

அந்தரமுதன்முன்பினொடு பக்கநடுவாகிநின்
றவைகளற் றதுவுமாகி
அருவாகியுருவாகி யருவுருவமற்றவறி
வாகார மோனமாகி
தந்தைதாயாகியரு டந்தகுருவாகியென்
றன்னுயிர்க் குயிருமாகி
தாயிற்சிறந்தவந் நேயச்சிறப்பாய்ச்
சதானந்த ஞானமாகிச்
சிந்தைசெய வந்ததிற மாகியெனையாட்கொண்ட
தேசிகன் றானுமாகி
தெளியுமொளிபுரியவடி யேனுமுமைநம்பினேன்
சித்திதந் தாளுதற்கே
வந்திருந்தருளுதயை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௩)

பாராகியெப்பொருளு மாகியப்பார்தனிற்
பஞ்சவன் னங்களாகி

பற்பலவிதங்கொண்ட விந்துநாதத்துட்
பதிந்துழலை பருவமாகி
வேரோடியோகபூமிக்குள்வளர்ந்தருள்
விளைந்தொழுகு தருவுமாகி
விண்ணாகி மண்ணாகி யெண்ணாகிவெகுவாகி
விரிவாகி மறைவுமாகி
தூராதிதூரத்தி னுந்தூரமாகியதி
சூழ்ச்சிச் சமீபமாகி
தோற்றுமொளிபுரியவடி யேனுமுனைநம்பினேன்
றுரிதமுட னுதற்கே
வாராருமருண்மாரி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௧)

பார்த்ததிக்கெங்குமொரு வெளியாகியென்பரா
பரப்பிரம வெளியுமாகி
பற்றுமனவெளியாகி மனவெளிகடந்தமுப்
பாழான வெளியுமாகி
கூர்த்தவறிவத்தனையு மேற்றபடிகொள்ளையே
கொண்டகடு வெளியுமாகி
கோடானகோடிபல வண்டபகிரண்டமுங்
கொண்டபெரு வெளியுமாகி
சேர்த்தநிலைகுலையுண்டு போகாதுநிலையுண்ட
சிற்சத்தி வெளியுமாகி
செறியுமொளிபுரியவடி யேனுமுனைநம்பினேன்
தெளிவுதந் தாளுதற்கே

வார்த்தைதப்பாதநா வுள்ளநீர்பின்றொடரா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

நடையுடனிடையாகி நன்னுமிருவினையாகி
நடைபடிக டானுமாகி
நடுவேவளைமுளைத்தநீ நானெனலுமாகிவந
நாட்டங்க டானுமாகி
தடையாகிவைத்ததடை யற்றவிடையாகிநற்
றாரணைக டானுமாகி
தலைமையொடுநிலைமையும் வலுமைகளுமாகியெச்
சங்கதைக டானுமாகி
இடையாகிநடுவாகி நன்மைதீமையுமாகி
யேகமுதலெல்லையுமாகி
இலகுமொளிபுரியவடி யேனுமுமைநம்பினே
னிதமுரைத் தாளுதற்கே
படமடெனவடிநடன முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௭)

மாயைமுதலாகியுயி ராகியற்புதமான
மன்னுயிர்க் குயிருமாகி
வாருமிருவினையாகி வினைதனக்கீடாகி
வாழ்பா ழுடம்புமாகி
தூயறிவுகலையாகி நிலையாகிநிலையாத
தொந்தங்க டாமுமாகி

துறவாகிமூவாசை யுறவாகிமறைவாகி
சோதிப்பிரகாசமாகி
ஆயுமறைமுடிவாகி யடியாகிநடுவாகி
ஆச்சரிய கூத்துமாகி
ஆடுமொளிபுரியவடி யேனுமுனைநம்பினே
னன்புகூர்ந் தாளுதற்கே
வாயூறுதேனின்மொழி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௭)

கண்ணுளகண்ணேயெ னன்னமேயென்றழுவர்
கண்டகண் காட்சியாகி
கவலைதுடிகொண்டுதட் டழியார்கனன்மனக்
கண்ணுட்டி நானுமாகி
மண்ணுனவஞ்சநெஞ் சத்தினர்க்கேற்றுது
மறைவுதரு புதையலாகி
மதபேதமோதிமதி கெட்டவர்க்கெட்டாத
வான்கருணை வெள்ளமாகி
எண்ணுதவெண்ணமென் ணுரெடுத்துண் ணுபே
ரின்பப் பெருக்குமாகி
எய்துமொளிபுரியவடி யேனுமுனைநம்பினே
னின்புதந் தாளுதற்கே
வண்ணத்திருக்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௮)

வேதவேதாந்தமேல் வீடாகிநட்டநடு
வீட்டின் விளக்குமாகி
வித்தகனிருக்குநன் மணிமாடமாகியொளி
விரிகதிர்ச் சுடருமாகி
நாதகீதம்பல முழக்கமிட்டோலமிடு
நாதநா தாந்தமாகி
நற்குணங்குடியா னெனைப்பேரெனக்கருளு
ஞானதிரு நாமமாகி
ஆதிமுதலந்தமுந் தானாகிவிரிவா
யகண்டிதா காரமாகி
அவிருமொளிபுரியவடி யேனுமுமைநம்பினே
னறிவுதந் தாளுதற்கே
மாதூயபாதமல ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

கங்குல்பகலற்றவரு டங்குமெங்கெங்குநிறை
காரணங் கடவுளாகி
கங்கறப்பொங்குகரு ணைக்கடலுமாகியென்
காதலா மலகமாகி
சிங்கத்தையொத்துவினை தன்னைச்செயங்கொண்ட
தேசிகன் றானுமாகி
தேனுதீரக்குணங் குடிவாழ்க்கையெற்குதவு
திவ்யகுண மேருவாகி
எங்கேயிருக்கினும் மங்குவந்துதவிதரு
மெங்கண்மகுடமுமாகி

இயையுமொளிபுரியவடி யேனுமுமைநம்பினே
னெளிதில்வந் தாளுதற்கே
மங்கலசவுந்தரிய முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬0

ஆக பாடல் ௬௬.

---

அருள்கூர்ந்தகாட்சியாகிய வுண்மையும்
பொருள்கூர்ந்துகாண்போன் வேறெனப்பொருந்தா
தோன்றுமுறைமை யோதுகவிவவிடை
யின்றூகவருள்கவென் றிரங்கியிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாரீரோவென்னையென் னன்னையேயென்முகம்
பார்த்தருள் பழுத்திடீரோ
பாவிகன்னெஞ்சவஞ் சஞ்சித்தவந்துமது
பாதத்தி ழுத்திடீரோ
வாரீரோவென்னெதிரில் வந்தெனக்கொருமுத்தம்
வாய்கொண் டளித்திடீரோ
சேரீரோவென்னையுஞ் சேர்ந்தோர்க்குமுமதருட்
டேறற் றெளித்திடீரோ
சிந்தைநொந்திடையுமடி யேனுமுமைநம்பினேன்
சித்தம்வைத் தாளுதற்கே
வாரோமெனச்சொன்ன துள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (

எங்கடகுடிக்கரச ரேயுமதுபாதமேற்
　கெய்தாத தென்னகுறையோ
என்றெய்வமுன்றெய்வ கென்குறையோவல்ல
　திடிசாப மானகுறையோ
பங்குகூறிட்டகுறையோ பாவிவாழ்மனது
　பக்தியில் லாதகுறையோ
பகலையிருளென்றகுறை யோவிண்படர்ந்தரப்
　படுநீலமான குறையோ
அங்குமிங்குங்கெட் டலைந்தகுறையோதேடி
　யலையாதிருந்த குறையோ
அறியாமலிடையுமடி யேனுமுமைநம்பினே
　னணைவுதந் தாளுதற்கே
வங்கமாயன்பாழி யுள்ளநீர்பின்றொடா
　வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　மணியே முகியித்தீனே. (௨)

கல்லிலோமண்ணிலோ விண்ணிலோவடிமையிரு
　கண்ணிலோ கண்ணீரிலோ
கரையிலோகடலிலோ வுடலிலோவுயிரிலோ
　கதியான பூமிதனிலோ
இல்லிலோபகலிலோ நல்லதயவில்லிலோ
　அறிவிலோ வுருமீதிலோ
அறிவிலோவழியொரு மறையிலோமறைகண்முத
　லாகமபு ராணத்திலோ
செல்வமிகுதுரைராச னேதேவரீர்க்குநிலை
　திவ்வியகுணங்குடியிலோ

## ௮௬ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

தெரியாமலிடையுமடி யேனுமுமைநம்பினேன்
சேர்ந்தணைந் தாளுதற்கே
மல்லிகைமலர்க்கந்த முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௧

ஓயாதோவென்கவலை யுள்ளுருகியானந்த
முள்ளுளே பாய்ந்திடாதோ
ஒழியாதோவிழிமாயை யழியாதோபாழாசை
யூழ்வினைக ளோய்ந்திடாதோ
தீயாதோவன்கருவி காயாதோகரணங்க
டீவினைக டீர்ந்திடாதோ
தேறாதோபாழ்மனஞ் சாராதோபேரறிவு
திவ்யகுணம் வாய்ந்திடாதோ
பேயாதோவருண்மாரி வாயாதோவான்கருணை
பேரின்ப நேர்ந்திடாதோ
பெருகநின்றிடையுமடி யேனுமுமைநம்பினேன்
பிரியமுடனாளுதற்கே
வாயிற்சிறந்தமொழி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே.

நாடுமோமுத்திவழி கூடுமோநெற்றிவிழி
நல்லறிவு பந்தாடுமோ
நற்குணங்குடிமீது வீடுதரவென்றனையு
நாதனருளுந் தேடுமோ

ஆடுமோவட்டமா சித்தியும்புத்தியு
மந்தவழியைச் சாடுமோ
ஆபாரத்தையும் போடுமோசித்தமா
நந்தநடனம் மாடுமோ
மாடகூடங்களெனு மனையாட்டிதருமாசை
மாட்டேனென விட்டோடுமோ
மனமுறிந்திடையுமடி யேனுமுனைநம்பினேன்
வந்தனைந் தாளுதற்கே
வாடாமவர்க்குநிக ருள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமநணிறைதுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

ஆசாபசாசவலை யுள்ளகப்படுவனோ
வல்லது வெளிப்படுவனோ
அகிலவாழ்வென்றிடு மளற்றில்வீழ்ந்திடுவனோ
வப்புற நடந்திடுவனோ
கர்சாசைகொண்டுகதி கெட்டுநின்றிடுவனோ
கதியாசை கொண்டிடுவனோ
கரையற்றகப்பலென் னக்கலங்கிடுவனோ
கரையேறி நின்றிடுவனோ
ஈசனடிசெல்லா திருந்துசென்றிடுவனோ
வீசனடி சென்றிடுவனோ
எங்கியிகவிடையுமடி யேனுமுமைநம்பினே
னேக்கமற வாளுதற்கே
மாசிலாமணிமாலை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே

## ௮௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தினே.

புதல்வரெனுமுதலைகள் பிடித்துக்கடித்துப்
புசிக்கக் கொடுத்துழல்வனே
பொல்லாதகாமக் கடற்புலாலென்னுமோர்
பூவைகைப்பட் டுழல்வனே
கதகதென்றெரியும் பணத்தீமிதித்தெனது
கால்கொப்புளித் துழல்வனே
கட்டுபட்டாடைகளெனுநமன்கைவலைக்
கட்டுண்டுநின் றுழல்வனே
சதசதென்றழுகுதூர்க் கந்தசாக்கடையான
சமுசாரமதி னுழல்வனே
சத்தளித்திடையுமடி யேனுழைமைநம்பினேன்
சற்றுவந் தாளுதற்கே
மதலைபோற்கொஞ்சுகுண முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண
மணியே முகியித்தீனே

வண்டாய்ப்பறந்தெழுந் திடுவனேசிற்றின்ப
வாரியில் விழுந்திடுவனே
மண்ணுனகாமக் குரோதமுண்டிடுவனே
மாயைதனை வென்றிடுவனே
பெண்டாசையென்றபேய் கொண்டுசெத்திடுவனே
பேரின்ப முற்றிடுவனே
பிறற்றுருத்தியிற் பிரியமுற்றிடுவனே
பிரியங்க ளற்றிடுவனே

கண்டுளங்கிடுநாழி யாவனோதுறைவினிறை
நாளுழி தாளுவனோ
நாளெலாமிடையுமடி யேனுமுமைநம்பினே
னன்மைகூர்ந் தாளுதற்கே
மண்டுபேரின்பவொளி யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைதணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௮

என்னகமிருக்கநா னென்வசப்படுவனோ
வென்னமோசப் படுவனோ
இரவுபகலற்றவ னுபூதிதனி லுறைவனோ
விதமகிதமதி லுறைவனோ
தன்னைமதியாதமதி கேடுகெட்டிடுவனோ
தன்னையு மதித்திடுவனோ
தாராளமாகவரு ணையமுண்டிடுவனோ
தட்டுமருள் கொண்டிடுவனோ
என்னதான்செய்வதினி யென்றுமேங்கிடுவனோ
வேகாந்த மோங்கிடுவனோ
இப்படிக்கிடையுமடி யேனுமுமைநம்பினே
னிஷ்டம்வைத் தாளுதற்கே
மன்னுதவமுந்திகிலை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௯

சொநுமன்னரசர்கைக் கோலாவனோபாவி
சூருடர்கைக் கோலாவனோ

கூலாயிலாகயில் லல்லாகுவென்பனே
  குடிகெட்ட நிலையுண்பனே
வேலையதுவாய்முகம் மதுறகூலென்பனே
  வேலையிதுதா னென்பனே
வேதவேதாந்தமெய்ஞ் ஞானவீடடைவனே
  வெறுவெளியி னின்றிடுவனே
ஆலாவிருக்ஷமென மேலாவனேவுதி
  ரதன்சருகு போலாவனே
ஆறுமிடையுமடி யேனுமுமைநம்பினே
  னாதரித் தாளுதற்கே
மாலார்க்குவாலாய முள்ளநீர் பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமநணிறைகுணங் குடிவாழுமென்னிநசண்
  மணியே முகிபித்தினே. (௧௰)

ஆக பாடல் - ௱௰.

---

ஒன்றுஞ்சமாதி யோகமிம்முறையா
மென்றருள்பிரானே யிவற்றியல்பெல்லா
மெவற்றானுமசையா திசையப்படுத்தித்
தவத்தலையருள்கெனச் சரண்புகுந்திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாயுமீராறுகலை பாயாதுபக்குவம்
  பண்ணிவைப் பதுசமாதி
பழவினையிறக்கவுஞ் சுழுமுனைதிறக்கவும்
  பழகிவருவது சமாதி
ஓயாதிகருவிகர ணாதியோய்ந்தொழியவிழி
  யொளிகொழிப் பதுசமாதி

ஒன்றிரண்டென் றுமன முற்றுமுள றுதலைவிட்
டொன்றுபடு வதுசமாதி
ஈவெறும்பாதிக டமக்குடல்குழைந் துமு
னின்புருவது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநப்பினே
னிதுவேவளை யாளுதற்கே
வாயுவினுமதிவேக முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தினே. (௧)

நாவினுனிதனைமடித் தந்நாளமேமாட்டிநிலை
நாட்டிவைப்பது சமாதி
நாவிரண்டெட்டுமெட் டெட்டாகியழியுமுன்
னுலாக்குவது சமாதி
ஓவியம்போலிருந் துள்ளுருமயிர்தங்க
ளொழுகவுண் பதுசமாதி
உச்சிவெளிசென் றுமொளி கண்டுமிருவிழியையு
முட்குவிப் பதுசமாதி
ஏவலொடுவிலகலெனு மிருவினையுமற்றசை
விலாதிருப்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேவளை யாளுதற்கே
மாவேகமனவேக முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தினே. (௨)

இதயங்களித்துவரு வகையுங்கொளுத்திவெளி
யேறிவிடுவது சமாதி
எட்டியெட்டாப்பொருளை யெட்டிப்பிடிக்கவடி
யெட்டிவைப் பதுசமாதி
பதியினதிபதியவைத் ததிகதியோதிப்
பதம்பணிகுவது சமாதி
பரிபூரணந்தனில் வருகாரணந்தனைப்
பார்த்துமகிழ்வது சமாதி
ஏதுவந்துநேரினும் மாறினுமிரண்டுமொன்
றென்றிருப்பது சமாதி
என்றருள்பிரானையடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மதயானைபோற்றீர முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௨)

வோரற்றசுத்தபரி பூரணப்பேரின்ப
வீடுபுகுவது சமாதி
விரிகருணை தந்ததரு நாதனடியார்களென
வேடமணிவது சமாதி
போராடுமையற் குதக்கைக்கடந்தப்
புறததினிற் பதுசமாதி
புகன்மறைப்பொருளைமற வாக்கடனமக்கென்று
புந்திமகிழ்வது சமாதி
ஈராறுகால்களையு மெட்டுக்கயிற்று
மிறுக்கியறிவது சமாதி

என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மார்பணியுமுத்தார முள்ளநீர் பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. (௪)

சாதிபேதத்தையும் மாதர்போகத்தையுந்
தள்ளிநிற்பது சமாதி
சந்ததமுமொளிருமருண் ஞானவருடேசிகன்
தன்னையறிவது சமாதி
தீதிலருள்கொண்டே சோமயத்துண்மனஞ்
சேர்ந்திருப்பது சமாதி
செத்தசவமதுபோ லிருந்துசெபதபமுஞ்
செயத்தனிப்பது சமாதி
ஏதுமதுவானகுரு நாதனிருபாதமதி
லிச்சைவைப்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மாதவர்களுக்குதவி யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௫)

நிதியாசையற்றுதுற வதியாசையுற்றுநன்
னிட்டைபுரிவது சமாதி
நிலையாதுகாயமென் றெண்ணமொன்றெண்றென்று
நிச்சயிப்பது சமாதி

வதியுஞ்சவ்வாதுசந் தனமும்மொன்றென் றுமனம்
வைத்துநிகழ்வது சமாதி
வாராதவாராது வருவனவும்வருமென்று
வாட்டமொழிவது சமாதி
இதமகிதமற்றமதி பெற்றிதயமுத்திநிலே
யேற்றுநிற்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மதுரவின்பப்பெருக் குள்ளநீர்பின்ருெடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௯)

எல்லையுமறந்துபல தொல்லையுமிறந்தேதா
னிடத்திருப்பது சமாதி
எனதியானென்பதை யிடம்பொருளோடேவன்முத
லீடழிப்பது சமாதி
அல்லுபகலாகவெல்லும் மளவுநல்லறிஞ
ரடிபணிகுவது சமாதி
ஆகமத்தின்படிச் சாதிக்கமுதலெவையு
மற்றிருப்பது சமாதி
இல்லாளுமைந்தருஞ் சுற்றமுஞ்சுற்றமா
யில்லையென்பது சமாதி
என்றருள்பிரானே யடியேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மல்லாடலும்பொறுமை யுள்ளநீர்பின்ருெடர
வள்ளலிறசூல் வருகவே

வளரும்மரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (எ)

சலனசஞ்சலம்து தொலைத்தருண்மலைப்புடையில்
சார்ந்திருப்பது சமாதி
சர்வபரிபூரண வகண்டிதாகாரமே
சாட்சியென்பது சமாதி
நிலையம்விட்டலையாது நீவாததீபமென
நிலையினிற்பது சமாதி
நெற்றிவிழிரண்டையு மொத்துநடுகொண்டொளிவி
னேரில்வைப்பது சமாதி
இலகுஞ்சதாகால நிட்டைபல்குந்துறவி
லெய்திநிற்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுனைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மலைபோற்பெரும்பெருமை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (அ)

ஆரிருந்தென்னவார் போயென்னவென்றுமன
மற்றிருப்பது சமாதி
ஆராலுமறியாத சூதானவெளிசென்
றடைந்தது போவதுசமாதி
வீரசூரங்கள்முத லதிகப்பிரசங்கமு
மெலியமெலிவது சமாதி
வேதவேதாந்தமும் விட்டுநாதாந்தநடு
வீடுசெல்வது சமாதி

ஏறுமயிர்ப்பால மேறுமனமேயேறு
மேறுமென்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
வாரிபோல்வான் கருணை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (க)

ஆழியெனவருள்பெருகு மாசையுற்றழுதழு
தகங்களிப்பது சமாதி
அதிசுகம்பெருவாரி யயிர்தமுண்டுண்டுதகை
யாறிநிற்பது சமாதி
பாழினிலையற்றுமுப் பாழினிலைபெற்றுப்
பதைப்பொழிப்பது சமாதி
பலகோடியண்டபகி ரண்டமூர்தன்னுளே
பார்த்திருப்பது சமாதி
ஏழுபுவனத்தையுஞ் சுற்றியுஞ்சுற்று
திருப்பிப்பது சமாதி
என்றருள்பிரானேயடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே
வாழிமகமூதினரு ளுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னி கண்
மணியே முகியித்தீனே. (௧0)

ஆக பாடல் ருசு.

காந்தழுமையமுங் கலந்தெனக்கலந்து
காய்ந்தவுலகத்தை மாயாதாகப்
போந்திடைமுளைக்கும் புதுமைகளெல்லாந்
தேய்ந்தறவருள்கெனச் சிந்தித்திரத்தல்.

## ஆசிரிய விருத்தம்.

குவலயக்கவலைதரு மிடுமடையனைகளைக்
கோத்துத் திரிந்தவம்பன்
கோட்டியுங்கேட்டையுஞ் சேட்டையுங்கூட்டியொரு
கோட்டையாய்க் கட்டுவம்பன்
தவிராதகாயகற் பங்கொள்கிறேனினிச்
சாவனோவென்றவம்பன்
சந்யாசமென்றம்பாய் வேடந்தரித்தவர்க
டம்மையிகழ் சொன்னவம்பன்
செபமாலைக்கொண்டு வாய்முணுமுணுத்துமுப
தேசிநா னென்றவம்பன்
தீதெலாந்திரவடி யேனுமுமைநம்பினேன்
றீரவந் தாளுதற்கே
மௌனமெனுமோனவடி வுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (க)

நெறியற்றவம்பனல் லறிவற்றவம்பனெதிர்
நிகரற்ற கொடியவம்பன்
நிறையற்றவம்பன்வான் முறையற்றவம்பன்பன்
னெஞ்சனஞ் சாதவம்பன்
குறியற்றவம்பனொரு சரியற்றவம்பன்
குணக்கேட னவம்பன்

கொடியரிற்சகசண்டி யானவம்பன்கசட்டு
கொலைபாவி யானவம்பன்
உறவற்றவம்பன்மிகு வெறிபெற்றவம்பனே
ரூர்க்குமா சாதவம்பன்
உமதுபதமறியவடி யேனுமுமைநம்பினே
னுளமகிழ்ந் தாளுதற்கே
மறுசவலையுறினுமுற வுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமநுணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகிழ்த்தீனே. (உ)

கல்லாதவம்பனறி வில்லாதவம்பனொரு
காசும் பெறுதவம்பன்
கடுவாயினுங்கொடிய வம்பன்வெருட்டிக்
கடிக்குநா யானவம்பன்
பொல்லாதவம்பனுற வில்லாதவம்பன்
பொறுமையே கொண்டவம்பன்
புன்மைகுடிகொண்டகெச பொக்கிஷிகள்சறுதாறு
போதுமுன் னேறுவம்பன்
மல்லாடுவம்பனகை பல்லாடுவம்பனிடு
மடையர்நடை யுடையவம்பன்
வம்பெலாமகலவடி யேனுமுமைநம்பினேன்
மரபுதந் தாளுதற்கே
வல்லாண்மையில்லாமை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமநுணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகிழ்த்தீனே. (ங)

அதிகப்பிரசங்கமே குடிகொண்டவம்பனன்
பணுவுமில் லாதவம்பன்
அச்சமில்லாதவம் பன்றிட்டுதிட்டேர
வனியாயக் காரவம்பன்
கெதிகெட்டுருட்டுவம் பன்றிருட்டெருமைக்
கிடாவினு முறட்டுவம்பன்
கெண்டர்க்குவண்டர்க்கு மிண்டவம்பன்சண்டை
கெக்கரிக் கொட்டுவம்பன்
விதிகெட்டவம்பனிலே பதிவிட்டலைந்தலை
விரிகோல மானவம்பன்
விடமெலாமொழியவடி யேனுமுனைநம்பினேன்
விரைவில்வந் தாளுதற்கே
வதலால்விடாமலெலை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௪)

சத்தியாயிரஞ்செய்த வம்பநல்விதமகித
சகசமறி யாதவம்பன்
தந்தைதாய்தன்மனைதை நேர்வித்தவம்பன்
றாரதாரங் கெட்டவம்பன்
பதினுயிரந்தாஞ் சொல்லினுஞ்செவியுட்
படாதபிடி வாதவம்பன்
பாரவான்முதலான பேருமென்பேரையும்
பகரப் பயந்தவம்பன்
திதிதேடுசிவச் சலங்கள்பட்சங்களே
நேசித்த தோஷிவம்பன்

நொடெலாம்வளருமடி யேனுமுமைநம்பினே
னேயம்வைத் தாளுதற்கே
மதிதனிலுமதிகவொளி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

என்சாணுடம்புமொரு போனமழியாதென்ற
வெண்ணமொழி யாதவம்பன்
ஏதுவந்தாலுமோ ரணுவிற்குமிகரென்
றிடும்பைகள் பேசுவம்பன்
கண்சாடைகண்டுவில காதவம்பன்காசு
காசுகா சென்றவம்பன்
கல்லுமொருபோதேனு முருதுமுருகாக்கருங்
கனனெஞ்ச னாவம்பன்
பெண்சாதிபெண்சாதி பெண்சாதியென்றே
பிதற்றுபேய் கொண்டவம்பன்
பேயாட்டொழிக்கவடி யேனுமுமைநம்பினேன்
பிரியமுட னாளுதற்கே
வண்சீருமெண்சீரு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௭)

அஞ்சாதவத்தொழி யனைப்புரியும்வம்பன்
வதிகாரி யானவம்பன்
ஆதரிக்காநின்ற பேர்களைத்தானே
படுத்துக் கெடுத்தவம்பன்

பஞ்சபாதகமும் முதலான தீதகம்
பயமறச் செய்தவம்பன்
பட்சம்வைத்தோர்தமக் கிச்சைமிகவோதிப்
பணம்பறிக் கின்றவம்பன்
நஞ்செலாமொன்றாய்த் திரண்டுருவெடுத்தகெடு
நாசச் சரீரவம்பன்
நாயினுக்கொடியவடி யேனுழைமைநம்பினே
னாட்டம்வைத் தாளுதற்கே
வஞ்சனமனுக்குநஞ் சுள்ளனீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணக் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (எ)

தையலர்களாசையெனு மையலில்விடாய்கொண்டு
தாகித் தலைந்தவம்பன்
சாகாவரம்பெற்ற தேகத்தனென்று
தலைகெட்டு நின்றவம்பன்
மெய்யாகவையகத் தானெனக்கிடென்று
வீண்மதம் பேசும்வம்பன்
வெறிகொண்டநாய்போலும்வள்ளுவள்ளென்றறியா
மேலும்விழு கின்றவம்பன்
செய்யாதசெய்கையேசெய்தவம்பன்பொய்த்த
சிற்றின்ப முற்றவம்பன்
தீயும்பயந்தவடி யேனுழைமைநம்பினேன்
சித்தம்வைத் தாளுதற்கே
வையமுழுதுக்குமணி வுள்ளனீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே

வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே மூகியித்தீனே. (௮)

கேடாங்கூடித் திரண்டிருக்கொண்டுகுடி
கேடுட லெடுத்தவம்பன்
கெட்டபேர்கண்டபேர் காதுகண்ணோவெடுக்
கின்றவடி யுண்டவம்பன்
நாடெலாமிவனையு நாடலாமோவென்று
நகையாட லுண்டவம்பன்
நாபோறுமாடுபோ லோடியோடித்தின்று
நாவுருசி கண்டவம்பன்
மேடுமூட்டத்தருத் திக்குட்பருக்கைமிக
வெட்டியே வீசவம்பன்
மெற்றவம்புற்றவடி யேனுமூமைநம்பினேன்
மேன்மைதந் தாளுதற்கே
மாடம்பஜம்பநடை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே மூகியித்தீனே. (௯)

தாயாதிமுதலன்னை சுற்றங்கடம்மையுஞ்
சாராவடித்த வம்பன்
தானதருமங்களுக் கினதருமங்களோ
காட்டிக் கெடுத்தவம்பன்
பேயாப்பிடித்துவெறி நாயாய்க்கடித்துப்
பிடாரிபோ லலையுவம்பன்
பிருகாரனென்னும்பல தேசங்கள்கூறிவிலே
பேசித் திரிந்தவம்பன்

தூயமகுமூ தாநபி பாதமலரைச்சென்னி
  சூட்டறிவின் மோட்டுவம்பன்
துறவெய்தலெய்தவடி யேனுமுமைநம்பினேன்
  சொன்னபடி யாளுதற்கே
மாயோகசித்திநெறி யுள்ளநீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௧0)

ஆக பாடல் - எ௪.

---

பொருளிற்குவேறாப் போந்தானென்னு
மருளேயுளத்தை மறைக்கும்பவத்
தியங்காதலவா தெங்குமில்லாது
வயங்காதகற்றுக வள்ளலென்றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

வேதாந்தசாரமே சாரமென்றறியாது
  வீணே யுடலைந்தபாவி
மேன்மேலுமெய்ஞ்ஞான வின்பமணுகாதபாழ்
  மெய்யைமெய் யென்றபாவி
சோதிப்பிரகாசச் சுயஞ்சோதியனுகத்
  தொழுந்துறைக ளற்றபாவி
சுகநிட்டைபாராத விழியெனுமுகத்திலிரு
  தொள்ளையொ டிருந்தபாவி
கோதிலுமதடிபணி கிலாதசிரசென்றகற்
  குன்றைச் சுமந்தபாவி
கொடியமாபாவியடி யேனுமுமைநம்பினேன்
  குடியிருந் தாளுதற்கே

மாதவவபேதகிலை யுள்ளநீர்பின்றோடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தினே. (௧)

மட்டிகளினுங்கெட்ட கட்டிவால்வெட்டிபேய்
மட்டைரட் டிந்தபாவி
வஞ்சநமனுக்குவா ரிக்கொடுத்திடவுடலை
வளமாய் வளர்த்தபாவி
சட்டிவைத்துச்சட்டி வாங்கும்பெருந்தொப்பை
சற்றும்வடி யாதபாவி
சண்டாளருக்குமா சண்டாளருக்குமா
சண்டாள னானபாவி
பொட்டைவிபுலீசுவைக் குட்பட்டபாவியொரு
போக்குநீக் கற்றபாவி
போதாதபாவியடி யேனுமுமைநம்பினேன்
பொய்ம்மைதீர்த் தாளுதற்கே
வட்டமதிவெட்குமுக முள்ளநீர்பின்றோடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௨)

நாசச்சரீரத்தை நானெனக்குளறு
நாசம் பிடித்தபாவி
நானாவிதங்கட்கு மேலாதபாவியா
னற்றவமு மற்றபாவி
கூசாதபாவியாய் பேசாதபாவிமா
கோபம் படைத்தபாவி

கொலைபாவிகொலைபாவி கொலைபாவிகோடானு
  கோடிகொலை செய்தபாவி
வேசியர்களாசைவினை யகலாதபாவித்தீ
  வினையுமகலாதபாவி
வீணனபாவியடி யேனுமுமைநம்பினேன்
  மெய்ம்மைதந் தாளுதற்கே
வாசாமகோசரந் துள்ளநீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௫)

பிரியாதபேரின்ப வனுபூதியாசைப்
  பிறப்புமறி யாதபாவி
பிரபஞ்ச வுறவைநெஞ் சம்மஞ்சி னோர்கடம்
  பின்சென் றிடாதபாவி
அருமையாயறிகுறிக ளத்தனையுமெத்திநல்
  லறிகுறிக ளற்றபாவி
அந்தகாரத்தையே புந்தியுட்கொண்டுவெறு
  மஞ்ஞானி யானபாவி
நரசென்மமாகியு நற்குணங்களவிலு
  நாடியறி யாதபாவி
கலமற்றபாவியடி யேனுமுமைநம்பினே
  னன்புதந் தாளுதற்கே
வருகவல்லையேகவழி யுள்ளநீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௬)

தேகாதியகிலப்பிர பஞ்சமதுபொய்யென்று
  தேர்ந்தறிவி லாதபாவி
தீபாவிதீபாவி தீபாவிதீபாவி
  திவ்வியகுண மற்றபாவி
மாகலைகுடிகொண்ட பாவிவம்பாகவே
  வாதாடு கின்றபாவி
மாயப்பசாசுகொண் டலைபாவிவீணாக
  வாழ்நா ளழித்தபாவி
ஆகாதபாவியா னாகாதபாவியா
  னார்க்குமா காதபாவி
அளவற்றபாவியடி யேனுமுனைநம்பினே
  னுண்டனைத் தாளுதற்கே
வாகுவழியேகவொளி யுள்ளோரின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௫)

மெய்யானபொய்யுடலை மெய்யென்றுமெய்யான
  மெய்யறிவு கெட்டபாவி
மெய்யானமெய்யேதூ மறியாதபொய்யான
  மெய்யைப் படைத்தபாவி
பொய்யானதையலரை யையோவணைக்கசுக
  போகமோ கித்தபாவி
பொய்யானபுலையான கொலையானமலையான
  பொய்த்தமொழி சற்றபாவி
வையாதவையாசை யானதீயானமா
  மாயைகுடி கொண்டபாவி

மாகெடும்பாவியடி யேனுமுமை நம்பினேன்
வந்திருந் தாளுதற்கே
மையவிழிமையவொளி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறகுல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தினே. (௬)

பசுபாசவாசவினை யென்றவெறிகொண்டலை
பாசாசாடு கின்றபாவி
பால்பழங்கற்கண்டு சர்க்கரைகண்மொக்கியும்
பட்டமர மானபாவி
விசனமொடுதுக்கமே குடிகொண்டபாவிபொய்
வேடந் தரித்தபாவி
வித்தகன்றிருவடி தனைத்தொழுதுதொழுதழுது
மெய்யருளுறுதபாவி
நிசமாகவசைபேசு வார்கள்வாய்தன்னிலே
நிதமா யிருந்தபாவி
நிலையற்றபாவியடி யேனுமுமைநம்பினே
னேயம்வைத் தாளுதற்கே
வசியமனவாசிவச முள்ளநீர்பின்டொடர
வள்ளலிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தினே. (௭)

இதமகிதமென்றவினை யுங்கொண்டலைந்துசிற்
றின்பவேம் புண்டபாவி
எண்சாணுடம்புமெவறு நஞ்சானபாவியா
ரின்பமணை யாதபாவி

பதமற்றபாவிபக் கிறுகறுதலைமொட்டைப்
  பரதேசி யானபாவி
பாவிப்பிணங்களைப் பாடித்துதித்துப்
  பணம்பறிக் கின்றபாவி
சதிகெடும்பாமூர்க்கு மதிகெடும்பாவிபொய்ச்
  சத்தியஞ் செய்தபாவி
சர்ப்பநிகர் பாவியடி யேனுமுமைநம்பினேன்
  சாறிவந் தாளுதற்கே
மதினமுதலும்வாச முள்ளநீர்பின்றொடா
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைநணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே மூகியித்தினே. (அ

கைக்குள்வெண்ணெயைவைத்து நெய்க்கழுதபாவி
  கற்றுமறி வற்றபாவி [க
கற்பகவிருக்ஷத்தி னடியிலேகாஞ்சிரங்
  காய்தேடி கின்றபாவி
கொக்குப்பிடிக்கநாய்க் குத்தெரியுமோவென
  கொள்ளைகூடி கொண்டபாவி
குருடர்களியானையைக் கண்டகதைபோலசற்
  குருவையறி யாதபாவி
சர்க்கரைகரும்புகற் கண்டமுதிருக்கக்
  கசங்குடிக் கின்றபாவி
தலைகெட்டபாவியடி யேனுமுமைநம்பினேன்
  றயையைவைத் தாளுதற்கே
மக்கநக்ருக்குமண முள்ளநீர்பின்றொடா
  வள்ளலிறசூல் வருகவே

வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே புகியித்திமேன. (௯)

குறத்திக்குலக்கொழுந் தானமகுழுதுநபி
கொள்கையறி யாதபாவி
கொறடாத்தனைக்கொண்டு மாட்டினுமறிஞர்பின்
கூடிநட வாதபாவி
அரிசிவலையுலையறியு மோவென்றகதைபோல
வகலிற் படைத்தபாவி
ஆருக்குவைத்தகூ ழாகினுஞ்சரிகாணி
லள்ளியடை கின்றபாவி
விரிதருந்தொப்பையை விருப்பொடுவளர்க்கமேன்
மேலுமலை கின்றபாவி
விதியற்றபாவியடி யேனுமுமைநம்பினேன்
வேளையீ தாளுதற்கே
வரிசைநபிவரிசைமிக வுள்ளீர் பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் திமேன. (௧௦)

ஆக பாடல் ௮௬.

---

இதற்கு முன்சொன்ன விடையூ றிரண்டினாற்
பதைப்பற் றிராத பாவியுள் ளத்தினுக்
கென்செய்வ னேனென் றிடைக்கிடைந் தழுவதை
யின்செய்கை யாலொழித் திடுகவென் றிரத்தல்.

## ஆசிரிய விருத்தம்.

கனமாயைவினையென்ற சனியன்பிடித்துக்
கலங்கித் தவித்தழுவனே

காலூன்றிமழைபொழிய வுங்கருணைமுகிலினங்
கவியவில்லையென் றழுவனே
அனியாயமனியாய யனியாயமென்கொடுமை
யனியாயமென் றழுவனே
ஆனாலுமென்போலு மொருபாவியகிலமதி
லாருளாரென் றழுவனே
இனியாள்வரெவரைய னேயையனேயென்ன
வேங்கித்தவித் தழுவனே
இங்கென்னசெய்வனடி யேனுமுமைநம்பினே
னிஷ்டம்வைத் தாளுதற்கே
மனமாயைபற்றமன முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (க

தந்தைதாய்முதலான பந்தங்களென்றனைச்
சதிசெய்வதற் கழுவனே
சாதிவரைதள்ளியே சஞ்சரிக்காமெய்த்
தவக்குறைதனக் கழுவனே
புந்திமகிழுண்டுண் டுடுத்துசிற்றின்பவனு
போகந்தனக் கழுவனே
புனிதஞானத்தையப் பெருவெள்ளமென்றுதான்
பொங்குமோவென் றழுவனே
எந்தவிதமாயினு மிணங்கவில்லையென்மன
மிணங்கவில்லையென் றழுவனே
என்செய்வனேழையடி யேனுமுமைநம்பினே
னிதுவேளை யாளுதற்கே

வந்துகுதிகொள்ளுநடை யுள்ளநீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௨)

மாயாதவோயா விகாரத்திலுலெனது
  மனதுநொந்தே யழுவனே
வஞ்சப்பிரபஞ்சத்தை நெஞ்சத்திருத்தியே
  மதிகெட்டு நின்றழுவனே
தீயனிவனென்றேசு கின்றவர்நகைக்கின்ற
  தீவினைதனக் கழுவனே
சீராயேயோவென் றடித்துத்துரத்துஞ்
  சிரிப்பினைப்பட் டழுவனே
நாயினுங்கடைகெட்ட நாயினுங்கடைகெட்ட
  நாய்போலலைந் தழுவனே
நானென்னசெய்வனடி யேனுழமைநம்பினே
  னன்மைகூர்ந் தாளுதற்கே
வர்யாதமாயைசா வுள்ளநீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௩)

பூசக்கயிற்றுவலை வீசிப்பிடிக்கின்ற
  பாவையர்க் கேயழுவனே
பத்தியொடுதந்தைதாய் தந்துமோசஞ்செய்த
  பலவினைதனக் கழுவனே
ஆசைப்பெருக்கைப் பெருக்கப்பெருக்குமழும்
  பாளருக்கே யழுவனே

அம்மம்மவென்சொல்லு கேனகிலவாழ்வென்று
மக்கினிகள்சுட் டழுவனே
பிசேறுபிறற் றுருத்திசதமென்றதைப்
பேணுதற்கே யழுவனே
பேயனென்செய்வனடி யேனுமுமைநம்பினேன்
பிழைபொறுத் தாளுதற்கே
மாசிலுபதேசமிலை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௪

எமனைப்பழித்தமட வாரல்குலென்றபா
ழிடிகிணறு வீழ்ந்தழுவனே
இருகொங்கையென்றதேன் கொட்டிமண்டைக்கேற
பெரியுதேயென் றழுவனே
நிமையாவிழிக்கணை தொடுத்துத்துளைக்கவென்
னெஞ்சந்துடித் தழுவனே
நெகிழுங்குழன்மயிர்க் கண்ணிபிற்சிக்கியதை
நீக்கமுடியா தழுவனே
தமியனெனென்செய்வ னென்செய்வனென்றுபிர
லாபித்துநின் றழுவனே
தந்தையேசொந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
மமதையில்லாச்சுகுண முள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௫

ஆனந்தமான பர மானந்தமாகா
தவத்தைதையை நினைந்தழுவனே
அகிலமுதலான பா ழாசைமாளாதவதி
யாயந்தனக் கழுவனே
ஈனப்பெருங்காய மெண்ணதென்பதிலறு
வேக்காந்தனக் கழுவனே
ஏனதாகியுட்பொருளை வந்துகைக்கொள்வதினி
யென்றெண்ணிநின் றழுவனே
கானலைநிகர்த்தமெய் மெய்யென்றபொய்தனைக்
கருதாவெறிகொண் டழுவனே
கண்மியென்செய்வனடி யேனுமுமைநம்பினேன்
கரையேற்றி யாளுதற்கே
வானதிபூதமதி னுள்ளநீர்பின்றொடர
வள்ளவிறகூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருக்கண்
மணியே முகியித்தீனே. (௯)

கட்டிப்பிடிக்கினுங் கைக்கடங்காமனங்
கனிவதிலையென் றழுவனே
கருவிகரணம்பாய்ந்து வருகண்டுகண்கலக்
கண்கொண்டுநின் றழுவனே
வெட்டவெளிதன்னிலே விட்டடங்காரமெனை
மேலிட்டதற் கழுவனே
மெய்யாகநானெனலு நானெனக்குளறும்
வெட்கந்தனக் கழுவனே
எட்டிரண்டறியாத மூடனையிருவினைக்
கிடாகிநின் றழுவனே

என்னதான்செய்வனடியேனுமுமைநம்பினேன்
 னிஷ்டம்வைத் தாளுதற்கே
மட்டுஞநிஷ்டைநடு வுள்ளாநீர்பின்றொடரா
 வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித்தினே. (எ

நீராழமாகவென் னெஞ்சநுகிநன்னிலையி
 னிற்கவில்லையென் றழுவனே
நிஷ்டைக்குமெட்டாத பேரொளிதியானத்தி
 னேர்படலிலென் றழுவனே
காராவநந்தங்கள் போலநள்கவிந்திடக்
 காண்கிலேனென் றழுவனே
கடவுளைத்தேடியிரு கண்ணீர்ததும்புக்
 கரஞ்சென்னிவைத் தழுவனே
மாரிபோற்பேரின்ப மழைபொழியவில்லையென்று
 வாய்விட்டிரைந் தழுவனே
மனநைந்திடைந்தவடியேனுமுமைநம்பினேன்
 வாழ்வுதந் தாளுதற்கே
வாராதிராதவர முள்ளநீர்பின்றொடர
 வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
 மணியே முகியித்தீனே.

கட்டழகிதன்னையென் கண்ணிலுங்காண்கிலேன்
 காண்கிலேனென் றழுவனே
கண்மாரிவிண்மாரி போற்பொழியவழுவனே
 கைதலையில்வைத் தழுவனே

கொட்டாவிவிட்டுவிட் டேங்கியேங்கிக்கொண்டு
புந்தியுட்கார்ந் தழுவனே
குட்டிச்சுவர்களிற் போயிருந்தையையோ
கோவென்றிறைந் தழுவனே
எட்டாதகொம்பினி லிருக்கின்றதேதேனை
யிறங்கிடாதென் றழுவனே
ஏதென்றுசொல்வனடி யேனுமுமைநம்பினேனென்
னிச்சையுட ளுதற்கே
வட்டமிடுமுகில்கவிகை யுள்ளநீர்பின்ஞெடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமநணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியேமுகியித்தீனே. (௧)

என்னசெய்யப்போகிறேனென்றுபாவிதா
னிரவுபகலா யழுவனே
ஏமசாமம்மென் றிலாதுநம்பித்தேம்பி
யெழிழுச்செறிந் தழுவனே
கன்னலமுதேதேனி கற்கண்டுசர்க்கரை
கட்டியேயென் றழுவனே
கண்ணுட்டியானவென் கண்மணியையென்றுதான்
காண்பேனோவென் றழுவனே
அன்னையாயமருமுதுபதநம்பியு
நாளுமிகநொந் தழுவனே
ஐந்தழுதுநொந்தவடி யேனுமுமைநம்பினே
னன்புகொண் டாளுதற்கே
மன்னுமதிதனினுமொளி யுள்ளநீர்பின்ஞெடா
வள்ளலிறசூல் வருகவே

வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகிபித்திரேனே. (௧0)

ஆக பாடல் - ௧௪.

இறந்தொழிதற்கே யியக்கிய துண்மையின்
மறைந்தொழி யாது மாறா யிருப்ப
தொன்றுவ தென்றே யொன்ற றேன்றும
னின்றிடேற் கருள்கென நின்றழு திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

ஞானகுருநாதனற் பதமிதந்தொழுதழுது
நாடுவதுமெக் காலமோ
நான்மறைதனக்குமெட் டாதநாலாம்படியி
ஞனேறலெக் காலமோ
ஊனேனுடிருந்தவுற வுற்றமுறவுற்றுவீ
டும்புகுவதெக் காலமோ
ஒப்புவமைசெப்பரிய கர்ப்பூரதீபமென
வொன்றுவ தெக்காலமோ
தானேயெனப்பெற்ற மானேவருந்தியரு
டருவதினியெக் காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
வானமெல்லாமகிமை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறகூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண
மணியே முகியித்திரேனே. (௧

வேடிக்கையும்பகட் டும்பிலுக்குஞ்சொகுசும்
விட்டொழிவ தெக்காலமோ

வீணிரக்கங்களூமூனுறக்கங்களும்
வேரறுவ தெக்காலமோ
தாடிமீசைகணரைத் துறந்தவமிலாருறவு
சையென்ப தெக்காலமோ
சண்டைநின்றிடுவதும் மண்டையிண்டுடைவதுஞ்
சள்ளென்ப தெக்காலமோ
சாடாதுசமநிலையி னின்னுசமரசமீது
சாடீர்வ தெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாகுதற்கே
வாடிக்கையாய்க்கருணை யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறகுல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தினே. (உ)

சொல்லரியசகவாரி யமிழ்ந்தாண்டொடுங்கித்
துடிப்பொழிவ தெக்காலமோ
அந்தரச்சோதிமணி மாலையணிமார்பனைத்
தொழுவதினி யெக்காலமோ
நல்லநடனம்புரிந் தாடுகருணாகர
னடம்புவ தெக்காலமோ
நாடிவலுவாகப் பிடித்திழுத்தென்றனையு
நடியென்ப தெக்காலமோ
சல்லிக்குணங்கெட்ட புல்லர்களைவிட்டுத்
தனிப்பதினி யெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாகுதற்கே

வல்லிருளைவெல்லுமொளி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௫

நயமேயுறைந்தறிவின் மயமேநிறைந்தபொரு
ளணைவ தெக்காலமோ
நல்லறிஞர்யின்சாடி யில்லுறவுபிஞ்சோட
நாள்வருவ தெக்காலமோ
பயமேகுறைந்தவிரு தயமேசெறிந்தவினை
பாழாவ தெக்காலமோ
பாடைதனிலேறுமு னொளித்தோடிவோடியுட்
பதிபுகுவ தெக்காலமோ
தயவுதந்தெனையாண்ட தேவரீர்பாதமலர்
தனையணைவ தெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுனைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
மயிலாடல்போனடன முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

ஈனந்தரும்புகழ்க் கூடானதேகவுற
மேகுவது மெக்காலமோ
இன்றுளோர்நாளைக் கிருப்பதுபொய்யென்ப
தெய்துவது மெக்காலமோ [யொன்
யானையோட்டகமேறு முடலும்லொடலொட்டை
றறிவதினி யெக்காலமோ

ஆனந்தமானபொரு ளானந்தமாயடிமை
யாவதினி யெக்காலமோ
தானானே தானானே தானானேயென்றுநான்
றானாவ தெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தானுதற்கே
வாளினுங்கருணைவா னுள்ளநீர்பின்றொடர
வள்ளல்பிறகூல் வருகவே
வளருமரு ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௯)

கடன்மடைதிறந்தசெ தன வருண்மடைதிறந்தடிமை
கண்குளிர்வ தெக்காலமோ
கங்கற்றபேரின்ப வெள்ளத்தின்மூழ்கியென்
கலிதீர்வ தெக்காலமோ
உடல்துறையசெக்குருகி விழிநீருமாறாக
வூறுவது மெக்காலமோ
உள்ளுளேபற்றியெரி யுந்தியமர்க்கனழ
முட்குளிர்வ தெக்காலமோ
சடைவனேமிடைகொண்டு மிடைவனேதேவரீர்
தாம்வருவ தெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ யானுதற்கே
வடுவேதமற்றவடி வுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறகூல் வருகவே
வளருமரு ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௰)

ஈனமின் ஞானே தயத்தையென் கண்கண்
டிருப்பதினி யெக்காலமோ
ஏறுதமேட்டுக்கு முத்துலையினீரிறைத்
திளையாத தெக்காலமோ
கோணாகுருநாத னும்மடிமைநெஞ்சினிற்
குடிகொள்வ தெக்காலமோ
குறைவற்றதேசோ மயச்செல்வம்வந்துகுதி
கொள்வதுவு மெக்காலமோ
தானேமகிழ்ச்சிபெற் றோனேயென் றன்னைநீர்
தழுவுவது மெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
வானோர்வணங்குநெறி யுள்ளநீர்பின்றொடா
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௭)

இலைசருகுகந்தமூ லங்களாலென்கும்பி
யெரியொழிவ தெக்காலமோ
என்பெலாநெக்குருகி நிற்குநிலைசொக்கினின்
றின்புறுவ தெக்காலமோ
உலையிட்டமெழுகெனப் பாழானகன்னெஞ்ச
முருகுவது மெக்காலமோ
ஓடியலைசிந்தையு மாடியகறங்குபோ
லுழலாத தெக்காலமோ
சலியாதுகான்மலை கடனமீதுறைந்தருட்
டனையணைவ தெக்காலமோ

சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
வலியமலைதன்னைநிக ருள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (அ)

ஏதமில்லாதகுரு வடிசென்னிமீதெடுத்
தேந்துவது மெக்காலமோ
ஏழையடியேனறிவிலாமலுளறுந்தமிழ்க்
கிரங்குவது மெக்காலமோ
தீதுமதபேதங்க ளற்றுமேயெங்குமிது
செல்வது மெக்காலமோ
சிறியார்மணற்சோற்றை நிகரிதென்றறிஞர்பிழை
செப்பாத தெக்காலமோ
சாதிவரையற்றதரு நாதனேமுத்திநிலை
தருவதினி யெக்காலமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
வாதசமயக்கடற் புள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (கூ)

மக்கநகராளும் முகம்மதிறசூல்பாதம்
வருவதினி யெக்காலமோ
வந்தெனதுசிந்தைதுதி கொண்டுமகிழுண்டடிமை
வாழ்வதுவு மெக்காலமோ

எக்காலமெக்கால மெக்காலமெக்கால
மென்றழுவ தெக்காலமோ
எக்காலமென்னைநீயே தேவரீர்கூட்டவந்
தெனையாள்வ தெக்காலமோ
தக்கநிலைதன்மீது சொர்க்கமனநிற்குவிறு
சாதருள்வ தெக்காலமோ
சாவப்பிறந்தவடியேனுமுமைநம்பினேன்
சமயமீ தாளுதற்கே
வக்கீல்கள்பலகோடி யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைதணங் குடிவாழு மென்னிருகண்
மணியே புகியித்தீனே. (௪௦)

ஆக பாடல் ௪௦௪.

அளவிடற்கரிய வரியனகாட்சி
வுளபலசமுகத்தி னேடுநின்மகிமையைப்
பலகோடிசீடர் பலரிலொருகோடி
நிலனுறமடியனு கேர்பெறவருள்கென
முன்னிலைக்குரு வாகிமுகியித்தீன்
றன்னிலைகோகித் தாழ்ந்துவந்திரத்தல்.

ஆசிரிய விருத்தம்

ஏகறப்பில்ஆல மீனருட்காளான
வேலைபங்காளர்கோடி
எங்கள்மருபூபின்க ளொருகோடிஆரிபி
னென்பரெண்ணியசோடி
சேருவொலிமார்கண்முறை முறையாகவிறுசாது
தேடிவருவார்கள்கோடி
திவ்யகுணநிலயவுள மாக்கஎதிர்கொண்டுதீன்
தீனென்றுவருவர்கோடி

தேகமழியாதநற் பாகம்படைத்தமா
  சித்தர்களனந்தகோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
  றீட்சைதந் தாளுதற்கே
மாகோடிசீடர்கண முள்ளநீர்பின்றொடா
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ளிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே (க)

அருள்பொழியுஞானவா னந்தநடனம்புரிந்
  தாடிவருவார்கள்கோடி
அஷ்டாங்கயோகநிஷ் டாலுபோகியர்களே
  யளவற்றகோடிகோடி
நரர்தொழுந்தவராஜ சிங்கங்கள்கோடியெந்
  நாளுமுள்ளோர்கள்கோடி
நாசச்சரீரத்தை நேசித்தபாசத்தை
  நாசமாக்கினவர்கோடி
சிரம்விரித்தவர்கோடி கரம்விரித்தவர்கோடி
  சினமறுத்தவர்கோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
  றீட்சைதந் தாளுதற்கே
மருவுற்றமணிமகுட முள்ளநீர்பின்றொடா
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ளிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (உ)

கதியாசைகொண்டதிக துதிபேசிநின்றெதிர்
  கைகூப்பிநிற்பர்கோடி

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கனிவாய்திறந்தருள் பொழிந்திடாரோவென்று
கண்மாரிபொழிவர்கோடி
பதியாசைமுத்தியிப் பாழாசையற்றுமுப்
பாழேழத்திறேனார்கள்கோடி
பத்திவைராகமொடு முத்திவழிசென்றநிச
பத்தர்கோடானுகோடி
சிதைவற்றசிந்தையர்க ளோவனந்தங்கோடி
சின்மயானந்தர்கோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
தீட்சைதந் தாளுதற்கே
மதிகோடிபோற்பிரபை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௩)

நடனமிடுவாசிதனி லேறிவருவார்கோடி
நாடாளுமன்னர்கோடி
நாதாந்தமூர்த்தியர்கள் கோடிநன்மவுனகுரு
நாதாக்கள்கோடிகோடி
திடஞானவைராக்கிய வான்கள்பலகோடிநற்
றிவ்வியகுணவான்கள்கோடி
சிந்தையறநீக் குகிற மிக்கவொருமிக்குநிலை
சென்றநிலையோர்கள்கோடி
செடிகாடுதனிலுறைந் திலைசருகுபக்ஷணஞ்
செய்தலைந்தோர்கள்கோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
தீட்சைதந் தாளுதற்கே

மடலவிழ்மலர்ப்பாத முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல், வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (ச)

நாசமாமோசதன் பங்கடருசம்பத்தை
நழுவவிட்டவர்கள்கோடி
நாரியென் னுந்தூண்டி லின்மச்சமாகாத
நடனவல்லாசர்கோடி
ஆசைக்கடன்மீதி லோடியக்கரைகாணு
மக்கரைக்காரர்கோடி
அவ்வருதுமிவ்வருகு மெவ்வருகுமுந்திவந்
தாடியருவார்கள்கோடி
தேசோமயானந்த ஜெயவீரவாண்பிளைச்
சிங்கங்கள்கோடிகோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
றீட்சைதந் தாளுதற்கே
வாசமெலைவயினும்வாச முள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைதுணங் குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித்தீனே. (ரு)

பொன்னாசைபெண்ணாசை மண்ணாசைமண்ணன
பூரணாநந்தர்கோடி
புவிராஜர்கோடிமெய்த் தவராஜர்கோடிநற்
புனிதர்கவிராஜர்கோடி
மென்னிமுட்டக்கண்ட மட்டுமருள்வாரியில்
வீழ்ந்தழுழ்குவர்கள்கோடி

வேதவேதாந்திகளு மொருகோடிமெய்ஞ்ஞான
வீடடைந்தோர்கள்கோடி
சின்னவெனையொத்தவே ழைகளநந்தங்கோடி
சின்னவெளிலேழைகோடி
தேவரீர்சீடாடி யேனுமேழைநம்பினேன்
தீட்சைதந் தாளுதற்கே
வன்னமணிமலர்மாலை யுள்ளநீர்பின்றொடர
வள்ளவிறசூல் வருகவே
வளருமரு ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௬)

அண்டகோடிகளுமோ ரணுவைத்துளைத்தங்கி
லடக்கவல்லவர்கள்கோடி
அறமியற்றினர்கோடி சாமுயற்றுநற்றேகாடி
யாளானபேர்கள்கோடி
தொண்டர்சிலகோடியுய ரண்டர்பலகோடிநற்
றுறவோரநந்தகோடி
சோதிகண்டுச்சிவெளி சென்றபானப்பெரிய
தொண்டுகண்டோர்கள்கோடி
செண்டென்னவ லமேழையுமெடுத்தாடிச்
சிரித்துவருவார்கள்கோடி
தேவரீர்சீடாடி யேனுமேழைநம்பினேன்
தீட்சைதந் தாளுதற்கே
வண்டுலவுமலர்மாலை யுள்ளநீர்பின்றொடர
வள்ளவிறசூல் வருகவே
வளருமரு ணிறைதுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (௭)

சாசுவதவாநந்த ஞானபதயோகநிலை
சார்ந்தநிறையோர்கள்கோடி
சர்வபரிபூரணப் பெரியபொருளைத்தொழுஞ்
சகசநிஷ்டையர்கள்கோடி
நாசிநுனிமீதுநட னம்புரிதல்கண்டுபுன்
னகைகொண்டுவருவர்கோடி
நாதமுங்கீதமும் வேதமும்மோதிநின்
னடனமிடுவார்கள்கோடி
தேசுறும்பரவெளியை மனவெளியினுட்கொண்ட
தேசிகாநந்தகோடி
தேவரீர்சீடரடி யேனுமெமைநம்பினேன்
தீட்சைதந் தாளுதற்கே
வாசகநிறைந்தநிறை யுள்ளநீர்பின்றொடர
வள்ளலிறசூல் வருகவே
வளருமருணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. (அ)

புவனன்றியோரணுவு மசையாதென்றறிந்
தசைவற்றிருப்பர்கோடி
அகிலாண்டகோடிகளனைத்துங்கணத்தில்விளை
யாடிவருவார்கள்கோடி
அநாதசித்தியும் முத்தியும்மெத்திசையு
நற்றவம்செய்வர்கோடி
நாதனேயுமதுபா தாரவிந்தங்களே
நாடினேனென்பர்கோடி
சிவஞானவருணையர் கோடானகோடியுப
தேசிகாநந்தகோடி

தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
  தீட்சைதந் தாளுதற்கே
மவுனகமனக் குளிகை யுள்ளீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித்தீனே. (௯)

முகில்கவிபுநயினார் முகம்மதிறசூலென்ற
  முத்தொளியிதென்பர்கோடி.
மோனகுருவானசுல்த் தானப்துல்காதிர்
  முகியித்தீனென்பர்கோடி
மகுபூபுசுபுகானி யென்றபேர்வாழிமேல்
  வாழியென்பார்கள்கோடி
வாக்காலும்வாசகத் தாலுமுமைவாழ்த்துவார்
  வாழியென்பார்கள்கோடி.
ஜெகஜ்ஜோதியானதிற் பரன்வாழிஜெயஜெயா
  ஜெயஜெயாவென்பர்கோடி
தேவரீர்சீடரடி யேனுமுமைநம்பினேன்
  தீட்சைதந் தாளுதற்கே
வகுதாதையாளும்வாழ் வுள்ளீர்பின்றொடர
  வள்ளலிறசூல் வருககே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
  மணியே முகியித் தீனே. (௧௦)

முகியித்தீனாண்டவர் சதக முற்றுப்பெற்றது.

ஆக பாடல் ௧௧௨.

---

# முகியித்தீனாண்டவர்மீது

பாடிய கொச்சகக்கலிப்பா.



அழுக்கைத்துடைத்தணைத் தணைத்துமடிமீதுவைத்தும்
புழுக்கைக்குணமெனக்குப் போவதில்லையாகையினால்
தழைக்குங்குணக்குடிக்கென் றந்தையேவந்திடுவேன்
பழிக்காமலேழைமுகம் பாருமுகியித்தீனே. (க)

பட்டதுவும்கெட்ட துவும் பாய்மூடைந்துவித்ததுவும்
வெட்டவெளியாய் விடுந்துமின்னம்பாருமையா
கொட்டமெல்லாம்விட்டுக் குணங்குடிகொள்ளாவினர்
இட்டமெனைவிட்டொழிவ தில்லைமுகியித்தீனே. (உ)

மட்டுறவாஞ்சாறிருந்த நம்பிகொலைசெய்துமென்னை
நட்டாண்டியாக்கியும்விட் டொழிவதில்லைபாருமையா
கட்டர்வென்கூடக் குணங்குடிக்குவாரவரை
நட்டாமல்வினைவிட் டோட்டுமுகியித்தீனே. (ங)

மேலாங்குணங்குடியில் மெய்ஞ்ஞானவீடுசென்று
லாம்படியேறி நாளொளித்திருப்பனையா
லீயமாகவங்கே மவுனமலரணைமேல்
லாயெனையணைய வாருமுகியித்தீனே. (ச)

ஆக பாடல் ககஅ.



# அகத்தீசர் சதகம்.

குருவணக்கம்.

அவற்றுண்முறைவழி யருந்தவம்யோகம்
எவற்றினுமுந்திய தியல்புடையாசான்
நன்னயக்கருணை நனிசுரன்பால்
இன்னயமந்திர மியைதலாதலினால்
திருவருள்பெறுவான் சிந்தித்துமெய்ம்மைக்
குருவருள்வேண்டிக் குறையிரந்தயர்ந்தது.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

குணங்குடியார்நற் குணங்குடியோங்கக்
கொடுகொடென் றடிக்கடிகுணங்குங்
குணங்குடியார்தூர்க் குணங்குடியோங்கக்
குணமெலாந் திரண்டருள்பரப்பிக்
குணங்குடியேறிக் குறைவறநிறைந்து
குணக்கடலான மெய்ஞ்ஞானக்
குணங்குடிவாழு மகத்தீசனுமென்
குருபதஞ்சிரத்தின்மேற் கொள்வாம்.

---

முதலாவது

## குருவருணிலை.

மனத்தைத் தழுவித் தற்காத்துச் சீராட்டிச்
செல்வப்பால்கொடுத்துப் படுக்கவைக்க வரவேண்டும்.

தாயனையவின்பந் தனைத்தந்துதந்துகை
தழுவிநின் றருள்புரியவுந்
தந்தைதாயுந்தானு மாகவுமிருந்தெனைத்
தற்காத்தருள்புரியவுஞ்

சேயுன்றிரங்கியணை காலிபின்கன்றெனச்
சீராடவருள்புரியவுஞ்
செங்கீரையாடுசிறு மதலைபோற்கொஞ்சிநான்
செல்வமிடவருள்புரியவும்
பாயுமடைகால்கண்டு கரைபுரளவருமதிப்
பால்கொடுத்தருள்புரியவும்
பக்குவத்தோடுமவு னத்தொட்டிலுக்குட்
படுக்கைவைத்தருள்புரியவும்
வாயுவைக்கட்டவுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே.
மவுனதேசிகநாதனே. (க)

மனமிடையாமலெண்ணு மற் பனைத்திடாதுபார்த்து
மனமுவந்து வருவிக்கவரவேண்டும்.

எந்தலையிலிட்டவிதி யென்னமோவென்னநா
னிடையாமலருள்புரியவும்
என்செய்தேனென்றடிமை யெண்ணுதவெண்ணங்க
ளெண்ணுமலருள்புரியவும்
பந்தமதிலிட்டவெழு கென்னநெஞ்சுருகிப்
படைத்திடாதருள்புரியவும
பாவியாகாதெனைக் கருணைநயனங்கொண்டு
பார்த்துநல்லருள்புரியவும்
மந்திரங்கொண்டுமாங் காய்விழாதாதலான்
மனமுவந்தருள்புரியவும்
மாரியினுமின்கருணை மாரியனுமாறுது.
வருவிக்கவருள்புரியவும்

## ககஉ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

வந்துபணிவார்க்குதவு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (உ)

மனந்தானாகச் சகாவென்ற நாடோறு நகைத்திடாது
தொழும்புகொண்டதுரையே வரவேண்டும்.

தாயாயுமென்றந்தை தானாயுநின்றநீ
தானாகவருள்புரியவும்
தாபந்தமெல்லா மறிந்தநீநிஷ்டைச்
சகாவென்றவருள்புரியவும்
காயடியனுய்யும் பொருட்டாகரட்சித்து
நாடோறுமருள்புரியவும்
நச்சுநச்சென்றனைய ரற்றுமுனென்றனை
நகைத்திடாதருள்புரியவும்
தூயனேமாயனே நேயனேதாயனே
தொழும்புகொண் டருள்புரியவுந்
தோலாவழக்கனிவ னென்றுசொல்லாமலென்
றுரையேயுனருள்புரியவும்
வாய்மொழிமறக்குமுன் றவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாதுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ங)

மனமிடையா தின்பமுறைந்திட ஓய்ந்திடாது
குன்றுகுகை யருளவரவேண்டும்.

என்றடிமையாளாவ தென்றெணியெணிக்கருத்
திடையாமலருள்புரியவும்

இரவுபகலாயிடை யறுதுருகிநாடிமல
லின்பமுற வருள்புரியவும்
உன்றிருப்பொன்னடியு மென்றன்சிரத்தே
யுறைந்திடற் கருள்புரியவும்
ஓடாமலோடியா னுலகைவலம்வந்துகா
லோய்ந்திடாதருள்புரியவும்
குன்றங்கடோறுமலை யாது குகையுள்ளாற்
குன்றொன்றை யருள்புரியவுங்
குருமூர்த்தமாயிருந் துபதேசமோதியக்
குகையுள்வைத்த ருள்புரியவும்
மன்றுணின்றுநடமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௪)

மனத்தில் மார்க்கவகை வாழ்த்துச் சுடர்சூக்ஷிமமளித்து
அகமுவந் தாதரித்தருள வரவேண்டும்.

வகையொன்றுமறிகிலே னிறைவனே சன்மார்க்க
வகையொன்றவருள்புரியவும்
வாழிமேல்வாழியென வாக்குக்கொடுத்தெனையும்
வாழ்வித்தனருள்புரியவும்
ஜகசுகாதீதச் சுயஞ்சோதியாயெழுஞ்
சுடரிடற்கருள்புரியவுஞ்
சும்மாவிருக்கவுஞ் சொல்லாதசூக்ஷமாதி
சூக்ஷமமெமற்கருள்புரியவும்
அகமகிழ்ந்திடவும்வஞ் சகமகன்றிடவின்
னகமுவந்தருள்புரியவும்

அஞ்சாதடாவென்று நெஞ்சோடணைத்தெனைத்
தாதரித்தருள்புரியவும்
மகிழாமகிழ்ச்சியொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனத்தினியற்கை யெந்நாளும்வாய்த்திட மாறுமற்
போதமெனப் பொங்க வரவேண்டும்.

·ஈசனேயன்பாக்கு நேசனேநின் கருணை
யியற்கையோடருள் புரியவும்
எம்பிரானேயெமக் கிறைவனேநின் கருணை
· யெந்நாளுமருள்புரியவும்
வாசனேஞானோப தேசனேநின்கருணை
வாய்த்திடற்கருள்புரியவும்
வாகனேயோகனே யேகனேநின்கருணை
மாறுமலருள் புரியவும்
போஜனேபோஜமக ராஜனேநின்கருணை
போதமெனவருள்புரியவும்
பூரணானந்தமே சொந்தமாய்நின்கருணை
பொங்கநின் றருள்புரியவும்
மாசங்கடோறுமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

மனம் முன்னின்று முத்தமிடத் தேசோன்மய சின்மயம்
அடிமைகொண்டாடி நின்றருள வரவேண்டும்.

முத்துநவரத்தினமே முழுவயிரமலையேயென்
முன்னின்றுனருள்புரியவும்
முச்சுடர்பரப்புசெம் பொற்கமலவடியைநான்
முத்தமிடவருள்புரியவுஞ்
சித்தனேசித்தர்தொழு முத்தனேகாதிலுப
தேசமெற்கருள்புரியவுந்
தெக்ஷணாமூர்த்தமே பக்ஷம்வைத்திக்கணஞ்
சின்மயம்மருள்புரியவும்
அத்தனேயப்பனே யையனேயுய்யவெனை
யடிமைகொண்டருள்புரியவும்
ஆனந்தமானபர மானந்தநிருநடன
மாடிநின்றருள்புரியவும்
வைத்தகருணைக்குரிய தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

மனத்தை யிரட்சித்துத் தினந்தினங் கடாக்ஷித்துக்
கதித்து தூக்கித்தொழுதிட வரவேண்டும்.

திக்கற்றபாவியைப் பக்கத்தில்வைத்துரட்
சித்துநல்லருள்புரியவுந்
திருவுளமிரங்கிநின் றிருவடியளித்துத்
தினந்தினம்மருள்புரியவுங்
கைக்குள்வளர்நெல்லிக் கனிக்குநிகராகக்
கடாக்ஷித்தனருள்புரியவுங்

கருகூ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கன்மந்தொலைந்தே கடத்தேற்றிவைத்துநற்
கதிதந்தனை தருள்புரியவுந்
துக்கக்கடல்கடந் தக்கரைப்படவெனைத்
தூக்கிவிட்டருள்புரியவுந்
துன்பங்களெல்லாந் தொலைத்தடிமையுன்பதந்
தொழுதிடற்கருள்புரியவும்
வைக்குமனம்வைத்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (அ)

மனங்கைகாட்டித் தருந்த சதானந்த வறிவொன்று
அறிந்திட வரவேண்டும்.

காகமாய்நின்றுகத றிக்கதறியழுமெனைக்
கையணைத்தருள்புரியவுங்
கண்பிடுகண்கலக் கந்தீரவுங்கருணை
காட்டிநின்றருள்புரியவுந்
தாய்கைக்குழந்தையென நீகைக்குள்வைத்துத்
தகுந்தநல்லருள்புரியவுஞ்
சத்தமுகிலெனவின்ப மாமழைசொரிந்திடு
சதானந்த மருள்புரியவும்
ஆகமபுராணங்க ளாலுமறிதற்கரிய
வறிவொன்றினருள்புரியவும்
அளகேசனேதுளவ வணிமார்பனேயுனை
யறிந்திடற்கருள்புரியவும்
வாகனேயேகனே தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯)

மனக்கலிதீர்த்துக் கவிகையிட வாட்கொண்டறிந்து
முறவாக மூர்த்திகரமருள வரவேண்டும்.

கன்னலின்னமுதெனவு மின்பங்கொடுத்தெனது
கலிதீர்த்தினருள்புரியவும்
காலூன்றிமழைபொழியு முகிலினமெனக்கருணை
கவிகையிடவருள் புரியவும்
அன்னையேயன்னையே நபியினைநுதரித்
தாட்கொண்டினருள்புரியவும்
ஆருமெனையாதரிப் பாரிலைப்பாரினி
லதுவறிந்தருள்புரியவும்
முன்னைசொன்னதனை மன்னவர்கண்மன்னனே
முறைசாகவருள்புரியவும்
முப்பத்துமுக்கோடி தேவர்க்குமுதல்வனே
மூர்த்திகரமருள்புரியவும்
வன்னிநிறமென்னமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧௦)

ஆக பாடல் ௧௨௮.

---

இரண்டாவது

# தவநிலை.

---

இதனுலெழுந்த வெவ்வகைவணக்கமும்
அதனுலாகிய வக்கமெத்திரமுமே

## கஅ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

அமைதருதவநிலை யணிபெறவருள்கெனச்
சமைதரவிரந்து தாழ்ந்துநின்றுயர்த்தது.

மனம்போதித்துப் போதமெனக்கறந்து கைக்கொடுத்துப்
பந்தாடப் பரப்பிவரவேண்டும்.

பொல்லாதகாயமல் லாடாதநல்லறிவு
போதித்தனருள் புரியவும்
பொங்குமருண்மெய்ஞ்ஞானவனுபோகநிலையெலாம்
போதமெனவருள்புரியவும்
கல்லாலினின்பால் பசிக்குப்புசிக்கக்
கறந்துதந்தருள்புரியவும்
கற்பவர்த்தேடியலை யாதபடிகற்பமூறை
கைகொடுத்தருள்புரியவும்
பல்லாயிரங்கோடி யண்டமுங்கைக்குளே
பந்தாடவருள்புரியவும்
பட்டப்பகற்போல வெட்டவெளியாயொளி
பரப்பிநின்றருள்புரியவும்
வல்லபஞ்சொல்லரிய தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுன்தேசிகநாதனே. (க)

மனமுப்பாழின் முச்சுடர்சேவிக்கத் திறம்படத்
தத்துவஞ் சலியாமலருளவரவேண்டும்.

முத்தர்பணிசெய்யவுஞ் சற்றேனுமுய்யவு
முப்பாழினருள் புரியவும்
மூச்சைப்பிடிக்கவுங் காய்ச்சற்றபொன்னுன்
முச்சுடரினருள்புரியவுஞ்

சித்துச்சடங்களைத் தெரிசித்துநிற்கவுஞ்
சேவிக்கவருள்புரியவுஞ்
திருவருளிரங்கவுங் குருவடிவணங்கித்
திறப்படற்கருள்புரியவுந்
தத்துவக்களைகளைப் பற்றறக்களையுமோர்
தத்துவமருள்புரியவுஞ்
சலியாமலுன்னடிமை கேட்டதெல்லாமனஞ்
சலியாமலருள்புரியவும்
மத்தமதமூற்றமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்திசனே
மவுனதேசிகநாதனே. (௨)

மனச்சித்திதர்து சித்தம்வைத்துப் பறந்தோடப்பண்ணி
கடனப்ட நழுவிடாதருள வரவேண்டும்.

தேவரீர்திருவடிக் காளாகவட்டமா
சித்திதந்தருள்புரியவுஞ்
சித்தர்சணமெல்லா மெனக்கருளிரங்கவுஞ்
சித்தம்வைத்தருள்புரியவும்
பாவியடியேன்செய்த பாவங்களெல்லாம்
பறந்தோடவருள்புரியவும்
பக்குவமறிந்தெனைப் பக்குவவிசேடனாய்ப்
பண்ணிவைத்தருள்புரியவும்
நாவிட்டுரைக்கொணாச் சோதிநயனத்தூடு
நடனமிடவருள்புரியவும்
நப்பினேனையனே நட்டாற்றிலென்னைக்கை
நழுவிடாதருள்புரியவும்

மாவேகமாகமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯)

இயல்பிருந்து மெலிந்து மெய்ஞ்ஞானஞ் சிற்சுகஞ் சாகாது
செற்றிட வரவேண்டும்.

இயல்புகெட்டேனுதி போனனலைந்திடா
தியல்பென்றவருள்புரியவும்
இலைசருகுபக்ஷணம் பண்ணியேகாந்தமோ
டிருந்திடற்கருள்புரியவும்
வெயிலூடுறைந்தெனது தேகமென்பென்பாய்
மெலிந்திடற்கருள்புரியவும்
மெய்த்தவசுமுட்டவும் பொய்த்தவசையோட்டவு
மெய்ஞ்ஞானவருள்புரியவும்
செயவினைமறுக்கவு மயவினையறுக்கவுஞ்
சிற்சுகம்மருள்புரியவும்
செத்தசவமென்னக் கிடக்கவுஞ்சாகாது
செத்திடற்கருள்புரியவும்
மயில்வெட்குநடனமொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௰)

மனத்தைக்குவித்துக்கொடுங்கைதந்தருகணைத்து அவலமாகாமற்
பார்த்து பதமருள வரவேண்டும்.

கொலைசெயமனுக்குட் படாதெனக்கைக்குட்
குவித்துவைத்தருள்புரியவுங்

கோதையரிடுக்குங் கொடுங்கைதநமுன்னின்
 கொடுங்கைத்தருள்புரியவும்
அலைவாய்த்துரும்பென வலைந்தலைகையாகாம
 லருகணைத்தருள்புரியவும்
அடியேனுனைத்தேடி யாசைகொண்டதுமவல
 மாகாமலருள்புரியவும்
பராகாலிரந்தவென்!பாலுமன்பான்முகம்
 பார்த்துநல்லருள்புரியவும்
பன்மலர்ப்பூவியர்ச் சனைசெய்துதொழுவுனின்
 பாதமலரருள்புரியவும்
மலைபோலெழுந்தமெய்த் தவராஜசிங்கமே
 வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
 மவுனதேசிகநாதனே. (௬)

மனத்தொழும்பு துலங்கிக் கசப்பாகக் கழன்றிடவெல்லா
மெண்ணாமல் வரவேண்டும்.

துச்சனேனாயினும் பட்சம்வைத்தென்னைத்
 தொழுதுகொண்டருள்புரியவும்
துரியமானின்றதுரி யாதீதசெஞ்சுடர்
 துலங்கிடற்கருள்புரியவும்
கைச்சரசமானசிற் றின்பவனுபோகங்
 கசப்பாகவருள்புரியவும்
களகளென்றானந்த பாஷ்பமிருகண்ணிற்
 கழன்றிடர்க் கருள்புரியவும்
எச்சித்தனம்பண்ண வேண்டாமெனையனே
 யெல்லாநீரருள்புரியவும்

என்னகுறைவந்துபோ மென்றெண்ணுநீரொன்று
மெண்ணுமலருள்புரியவும்
மைச்சினிச்சரசமொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனம்புகழ்ந்திடப் பொருடந்து நிராகரித்து நெஞ்சுற
யிரார்த்தமிருந்திட வரவேண்டும்.

புகழுவார்புகழும் புகழ்க்குரியநின்னைப்
புகழ்ந்திடற்கருள்புரியவும்
புத்திக்குமெட்டாத புத்திக்குளுற்றவான்
பொருடந்தனருள்புரியவும்
நிகழ்ப்பந்ததன்னையும் நிர்த்தாரியாகிட
நிராகரித்தருள்புரியவும்
நிருமலசிதாகாச நிஷ்பிரபஞ்சப்பொருளென்
னெஞ்சுறவுனருள்புரியவும்
இகபரமிரண்டென்று வகையுண்டதீதெனு
மெதார்த்தத்தொடருள்புரியவும
என்னுள்ளிருக்குமெங் கோமானென்னுள்ளே
யிருந்திடற்கருள்புரியவும்
மகிழ்வோடெழுந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

மனத்தைக் கரையேற்றிக் கைக்கொண்டு சமூகத் தன்மயம்
போனின்ற பூரணவருள்வரவேண்டும்.

கங்கற்றவாழ்சுழி வங்கத்தையொத்ததனைக்
கரையேற்றியருள்புரியவுங்
கையைக்கொடுக்கவுங் கையைப்பிடிக்கவும்
கைகொண்டினருள்புரியவும்
சங்கைதருசங்கத்தை நீக்கவுஞ்சங்கைதரு
சமூகம்வைத்தருள்புரியவும்
தட்டாதநிஷ்டைமீ திஷ்டமொடிருந்தவுந்
தன்மயம்மருள்புரியவும்
பொங்குஞ்செழுஞ்சுடர் பொருந்துகர்ப்பூரமது
போனின்றதருள்புரியவும்
பொன்னையும் வாழியுன் புண்ணியமும்வாழிபரி
பூரணவருள்புரியவும்
மங்களந்தந்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (அ)

ணத்தனைக்கொண்டு தாற்பரியம்பாய்ந்து பருவரல்தொலைந்து
தொடக்கற வரவேண்டும்.

தஞ்சமேதஞ்சமென் றடையுமென்னஞ்சலி
தனைக்கொண்டினருள்புரியவும்
தற்பரஞ்சிற்பரத் தட்பரவிசிற்பதோர்
தாற்பரியமருள்புரியவும்
பஞ்சவர்ணப்பரஞ் சோதிகிளரிப்பத்தி
பாய்ந்திடற்கருள்புரியவும்

பன்மயத்துட்பரவு தன்மயத்துட்பரவு
பருவமென்றருள்புரியவும்
துஞ்சுமொளிகொஞ்சவும் நெஞ்சமும்வஞ்சந்
தொலைந்திடர்க்கருள்புரியவும்
தூக்கவலைவீசுமூலை மின்னார்களாசைத்
தொடக்கறற்கருள்புரியவும்
வஞ்சியருமெஞ்சவுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனதுக்குச் செல்வந்திறந்து முகூர்த்தமுடிசூட்ட
ஜெயந்தந்து ஜெயமாக வரவேண்டும்.

தேனைப்பழித்தபே ரின்பந்தரும்பெருஞ்
செல்வமென்றருள்புரியவும்
சின்மயச்சிந்தா மணிபொக்கிஷத்தைத்
திறந்தளித்தருள்புரியவும்
மோனசிங்காசனா திபனாகவைத்திட
முகூர்த்தமிட்டருள்புரியவும்
முச்சுடர்பரப்பியொளிர் பத்தியாயும்மகுட
முடிசூட்டியருள்புரியவும்
சேனாசமுத்திரத் தொடுநின்றுவாழ்த்திச்
செயந்தந்துனருள்புரியவும்
ஜெயஜெயாஜெயஜெயா ஜெயஜெயாவென்றடிமை
ஜெயமாகவருள்புரியவும்
வானனையகருணைகொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧௦)

ஆக பாடல் ௧௱௮.

---

மூன்றாவது

## துறவிநிலை.

---

நினைப்பும்விளிப்பு நீக்கலுந்தளிப்பும்
அனைக்கினுமமைத்திட் டாயர்தாய்ந்துநோக்கி
விரதமவுனம் விருப்பொடுவெறுப்பெனும்
இரதமமையா தெழுந்தவெட்கமும்
பற்றியதலைநிலை பதிந்த பருநிலை
சுற்றியமேன்மைத் துறவாகையினால்
அத்துறவியல்பினை யாண்டகையருள்கென
வெத்திறத்தினுங்குறை யிரந்திரந்துயர்த்தது.

மனங்களை கண்டாண்டசல ஒதுக்கியுறைந்திட
வரவேண்டும்.

கர்மக்குரோதமோ கக்கிளைகளைந்துநான்
களைதீரவருள்புரியவும்
கரையாதநெஞ்சக் கனிம்பெலாந்தூரிசறக்
கண்டுகல்லருள்புரியவும்
ஆமைமீன்பறவைபோ லடியேனையாதரித்
தாண்டணைத்தருள்புரியவும்
ஆசைப்பசாசமெனை யனுகாதடித்தடித்
தகலவிட்டருள்புரியவும்
ஓமிங்கண்முதலான வியமங்களெல்லா
மொதாக்குவித் தருள்புரியவும்

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

ஊருக்குளூர்திரிந் தலையாமலுய்தரு
ளூறைந்திடற்கருள் புரியவும்
மாமேருவொத்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (க)

மனந்தீர்ந்து சேர்ந்து பக்குவம் பத்தியக்காடுறை
கனன்மூட்ட வரவேண்டும்

தேய்ந்திடவுமீராறு கலைகளும்மனமாயை
தீர்ந்திடவுமருள் புரியவும்
தீராதவல்வினைக ளீர்ந்துதிருவடியினிற்
சேர்ந்திடற்கருள் புரியவும்
பாய்ந்தேறவும்வாசி நான்றேறவும்பெரும்
பக்குவம்மருள் புரியவும்
பத்தியுஞ்சித்தியும் முத்தியின்முற்றுமோர்
பத்தியும்மருள் புரியவும்
காய்ந்தசருகிலைபுனற் காய்கனிகளுண்டுண்டு
காடுறையவருள் புரியவும்
கட்டையைச்சுட்டுக் கருக்குமெய்ஞ்ஞானமாங்
கனன்மூட்டியருள் புரியவும்
மாய்ந்துமாயாதமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (உ

மனத்தின் பேர்பிடுங்கி நலநாளுந்திறச
சித்தித்திடவரவேண்டும்.

பேயைப்பழித்தபெண் பேய்கொண்டிடார்கொண்ட
பேரொன்றுமருள்புரியவும்
பிள்ளைகளெனுங்கூளி பலகூளியென்னைப்
பிடுங்கிடாதருள்புரியவும்
நாயைப்பழித்தபேய் நாயினுங்கடையே
னலம்பெறற்கருள்புரியவும்
நல்லருளிரங்குமுன் பாதாரவிந்தமெந்
நாளுமெறற்கருள்புரியவுந்
தீயைப்பழித்தசெந் தீயவஞ்ஞானமாந்
தீதிறவருள்புரியவும்
சித்தம்வைத்தத்தனே சித்திதருமுத்திசித்
சித்திடற்கருள்புரியவும்
மாயைப்பழிப்பற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௩)

மனம்நிலையாநிறுத்திப் பாழாகப்பருவம்
அறைந்தானந்தமருளவரவேண்டும்.

நீசமானதெய்வமுனை யன்றியுண்டென்றடிமை
நிலையாமருள்புரியவும்
நீர்க்குமிழியொத்தகா யத்தைநிலையத்தினு
நிறுத்திவைத்தருள்புரியவும்
பசுபாசபாசமும் பாவையர்கணேசமும்
பாழாகவருள்புரியவும்

## கசஅ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

பத்திமார்க்கருந் தரும் முத்திமோக்கந் தரும்
 பருவமென் றருள்புரியவும்
அசராசரபேதமா யாடுவதுமீதென்
 றறைந்தறைந்தருள்புரியவும்
அஞ்ஞானமூடந் துறக்கவும்மெஞ்ஞான
 வாகந்தமருள் புரியவும்
வசமானதேசனே தவராஜசிங்கமே
 வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகததீசனே
 மவுனதேசிகநாதனே. (௪)

மனமெய்தி யெண்ணம் மண்ணுகமடியாமல்
தள்ளென்று தள்ளாது வரவேண்டும்.

எங்களாலொன் றுமிலை யெதுவுமுன் றருமமென்
 றெய்திடற்கருள்புரியவும்
எண்சாணுடம்பினுஞ் சிரமேபிரதானமென்
 றெண்ணமொன் றருள்புரியவும்
மங்கையர்கள்கொங்கையெனு மண்கட்டிமீதிஷ்ட
 மண்ணுகவருள்புரியவும்
மாறுதபுண்ணுன வல்குலாம்படுகுழியில்
 மடியாமலருள்புரியவும்
தங்கத்தையுஞ்செங்க லென்றெண்ணியேதள்ளு
 தள்ளெனற்கருள்புரியவுந்
தந்தையேயுன்றனுக் கென்றெனையளிக்கிறேன்
 றள்ளாமலருள் புரியவும்
வங்கமொனவோடிமெய்த் தவராஜசிங்கமே
 வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடி வாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனத்தின் வல்லபஞ் சமவுட்குளிர வூடாடிப்
போகாமற்போக வரவேண்டும்.

வலைவீசுமூலையாரைக் கொலைஞரென்றென்னுமோர
வல்லபமருள்புரியவும்
வஞ்சியெனுமென்சா ணுடம்புவெறுநஞ்சென்று
வஞ்சமறவருள்புரியவும்
உலையிட்டமெழுகெனப் பின்னமாயுருகுமன
முட்குளிரவருள்புரியவும்
ஓடாமலுந்தேடி வாடாமலும்மெனது
ளூடாடியருள்புரியவும்
பலாநுபிலைவைக்காத்த குளியெனவுமுன்னடிமை
போகாமலருள்புரியவும்
பூரணானந்தமய மானபேரின்பவனு
போகமென் றருள்புரியவும்
மலசலாதிகளற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடி வாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

மனஞ்சலியாது தள்ளாதுட்குளிர்ந்தொட்டாது
நேயம்வைத்து ணில்லாது வரவேண்டும்.

சக்களத்திப்போர் கொடுக்கிறனென்றுநீர்
சலியாமலருள்புரியவும்
சண்டிபோற்றிரண்டுபின் டாடுறனென்றெனைத்
தள்ளாமலருள்புரியவும்

ஒக்கநின்றென்னையுய் யக்கொண்டமையமற
வுட்குளிர்ந்தருள் புரியவும்
ஒட்டதமாமாயை யொட்டினுட்சிட்டெனவு
கொட்டாதனருள்புரியவும்
நிற்குநிலைகாணுது நிற்குநிலைநிற்கநின்
னையப்வைத்தருள்புரியவும்
நீசனிவனென்றுபோ திப்பார்கள்போதனையி
னில்லாதனருள்புரியவும்
மக்கப்புதைக்குமுன் றவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடி வாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே (எ)

மனம்போகாது போகவென்றெண்ண
வெளிநிற் கைபிடித்துக் காப்பாற்றியருள வரவேண்டும்.

பொருந்தேடித்தேடி மேவாதபேரெனப்
போகாதனருள்புரியவும்
பொருடோடியோடியோ டிப்போருவோரெனப்
போகவிட்டருள்புரியவும்
எந்தைமுதல்யாவரும் வந்துகலையுஞ்சந்தை
யென்றெண்ணவருள் புரியவும்
எவ்வாறுமெய்தரிய துறவோடுமற்றுளன
வெளிநிலெற்கருள்புரியவும்
சுந்தையைச்சுற்றவுங் கானசஞ்சுற்றவுங்
கைப்பிடித்தருள்புரியவும்
சுந்தமூலந்தனைத் தந்துகந்தென்றனைக்
காப்பாற்றியருள்புரியவும்

மங்கைதவழியாகினுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (அ)

மனப்பொருப்பூசி வியாபியாதுவீழ்ந்து
பூவெடுத்திட்டேற வரவேண்டும்.

பொன்னைப்பழித்தபொதி கைச்சார்புமீதிற்
பொருதும்பொன்றவருள்புரியவும்
பூவைப்பழித்தநின் பொன்னடியுமன்னடிமை
பூசிக்கவருள்புரியவும்
மின்னைப்பழித்தமன முஞ்சஞ்சலத்தோடு
வியாபியாதருள்புரியவும்
வேலைப்பழித்தவிழி யார்மயக்களறுதனில்
வீழ்ந்திடாதருள்புரியவும்
என்னைப்பழித்தநா னென்பதனையென்னைவிட
டெடுத்தெறியவருள்புரியவும்
எவையும்பழித்ததற வெய்திவெளியேறிநா
னீடேறவருள்புரியவும்
அன்னைப்பழித்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ஆ)

மனதைப்பார்த்துப் பதமளித்துக் கலிதீர்த்துக்கடாக்ஷித்துப்
பொருட்டு பொன்னடியருள வரவேண்டும்.

பைப்பலோநெஞ்சம் பதைத்துருகிநிற்பதும்
பார்த்தேனுமருள்புரியவும்

பாவியடியேன்படுந் துயரைத்தொலைத்துநற்
பதமளித்தருள்புரியவும் [ன்
கையில்வெண்ணெயைவைத்துநெய்க்கழுவண்ணமெ
கலிதீர்த்தனருள் புரியவும்
சன்மங்கமரவுஞ் சென்மசாபல்யங்
கடாக்ஷித்தனருள்புரியவும்
பொய்யுலகவாழ்வுபிற ருக்கிடவுமெற்குமெய்ப்
பொருடந்தனருள்புரியவும்
பொன்னுலகுமண்ணுலகு நின்றிலகுமுன்றிருப்
பொன்னடியையருள புரியவும்
மையலொடெழுந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (கo)

ஆக பாடல் கசஅ.

---

நான்காவது

# நியமநிலை.

---

பொய்கொலைகளவு காமம்பொருணசை
யிவ்வகையெனவைபு மடக்கலியமும்
பெற்றதற்குவத்தல் பெருந்தவந்தூய்மை
மற்றறிவுணர்தல் வழிபடனியமமும்
நிற்றலிருத்தல் கிடததனடத்தலென்
றாற்றலிங்நான்கா முயாசனமும்
அவ்விருவகைக்கு மாதியுமந்தமும்
செவ்வியலாவிவை சிறந்திருந்தமையால்
பிரியாதுநியம நிலைபெறற்கருள்கென
விரியாதிறந்து வேண்டியுயர்த்தது.

மனத்தைப்பார்த்து பலனிலையாமனில்லாமல்
அணைத்தன்பு கூர்ந்தருள வரவேண்டும்.

பஞ்சரித்துப்பஞ் சரித்தியான்கொஞ்சியது
பார்த்தேனுமருள் புரியவும்
பஞ்சைபோனின்றழும் பாவிக்கிரங்கிப்
பலன்றரவுனருள புரியவும்
நின்சார்பையன்றிவே றுண்டென்றுமென்றென்று
நில்லாமலருள் புரியவும்
நெஞ்சம்பதைத்துப் பதைத்தடிமைதிக்கற்று
நில்லாமலருள் புரியவும்
அஞ்சாமலென்றெனக் காதரவுசொல்லவு
மணைத்தாண்டுனருள் புரியவும்
அருகினிலிருந்தவுந் திருவருள்பொருந்தவு
மன்புகூர்ந்தருள் புரியவும்
வஞ்சகருமஞ்சவுந் சலாமுசீக்ரமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மனுதேசிகநாதனே. (௧)

மனத்தைக்கடாக்ஷித்துக் காங்கொடுத்தணைத் தடுக்கவைத்துக்
குறைதீர்த்துக் குணமேற்ற வரவேண்டும்.

ஊனுக்கெறித்ததில வாகாதவண்ணங்
கடாக்ஷித்துனருள் புரியவும்
கல்லுக்கிரங்குமழை யாகாதவண்ணங்
காங்கொடுத்தருள் புரியவும்
யானைவாய்க்குடகரும் பாகாதவண்ணமு
மணைத்தாண்டுனருள் புரியவும்

ஆழித்துரும்பெனவு மாகாதவண்ணமு
மடுக்கவைத்தருள்புரியவும்
கோனைப்பழித்தகுடி யாகாதவண்ணமென்
குறைதீர்த்தருள்புரியவும்
குருவற்றசீடனென வாகாதவண்ணநற்
குணமேற்றியருள்புரியவும்
மானம்வைத்தாதவமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (உ)

மனங்கதறுதற்குங் கலுழுதற்கு மாறாது மாதவமே
யேற்க வரவேண்டும்.

கண்ணேகருத்தேயென் னன்னமேயென்றடிமை
கதறுதற்கருள்புரியவும்
கண்ணீருமாறாத புண்ணீருமாகவுங்
கலுழுதற்கருள்புரியவும்
மண்ணைமூவாசை மண்ணாசையுங்களை
மாறாதுனருள்புரியவும்
மலைநூழைவுபக்கமும் மனவாசிசொக்கவும்
மாதவம்மருள்புரியவும்
எண்ணாதவெண்ணமெல் லாமெண்ணியெண்ணிநெஞ்
சிடையாமலருள்புரியவும்
என்னையென்னுமென் றயிலையாவுநீ
ரேயேற்கவருள்புரியவும்
மன்னுள்ளசித்தரொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯)

மனமுய்ய நிஷ்டைபோக்க முதிர்ந்து கத்துங்
கருணைகூர வரவேண்டும்

சித்தனே சித்தபரி சுத்தனே சிற்றடிய
னேனுய்யவருள் புரியவும்
திருவிகற்பங்கொண்ட நின் மலாநந்தசுக
நிஷ்டையைத்தருள் புரியவும்
முத்தனே நற்றலஞ் சித்திக்கவுமுத்தி
மோக்கமென் றருள் புரியவும்
மூலப்பிராணனென வாலைப்பிராயம்
முதிர்ந்திடுமுனருள் புரியவும்
கத்தனே சுத்தனே யென்றிடையறுபவே
கத்துமெற்கருள் புரியவுங்
கத்தா கடாவென்று பொற்றுளளித்துநற்
கருணைகூர்ந்தருள் புரியவும்
வைத்தமோகத்துடன் தவராஜசிங்கமே
வாவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௰)

மனங்கொள்ளாமற்கொள்ள விதயமலர்ந்து சதாநந்தக்
காக்ஷிக்கண்ணே யருளவரவேண்டும்.

கொண்டார்களைக்கொலும் பெண்டாசையென்றடிமை
கொள்ளாமலருள் புரியவுங்
கொள்ளிவைத்துடலைக் கொளுத்துமுள்முச்சுடர்க்
கொள்ளிவைத்தருள் புரியவுங்

கநிசா மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

தண்டாமலைமலை மலமென்மடலவிழ்ந்தெனவி
தயமலர்ந்தருள்புரியவுந்
தளதளென்றளவில்பே ரொளிகொப்புளித்திடு
சதானந்தமருள்புரியவுங்
கண்டாலுமென்கலிக ளெல்லாமகன்றுபோங்
காட்சிதந்தருள்புரியவுங்
கண்கொண்டு காணவுங் கண்கண்டதெய்வமே
கண்ணேயுனருள்புரியவும்
வண்டாய்ப்பறந்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௫)

மனத்தின் சமர்த்துசார்ந்திட வழிவிட்டுமண்ணு
குருவே குறைதீர வரவேண்டும்.

சகச்சூதைமாற்றிச் சுகச்சோதியேற்றுஞ்
சமர்த்தொன்றையருள்புரியவும்
சாட்சாதிபிசுர சொரூபமேயானுனைச்
சார்ந்திடற்கருள்புரியவும்
வகையற்றசமயக் குதர்க்கங்கடத்திநல்
வழிவிட்டுனருள்புரியவும்
மண்ணாசையேகவும் பெண்ணாசைவேகவும்
மண்ணுமுனருள்புரியவும்
குதைசேரவும்மாயை நகைதீரவும்மெங்கள்
குருவேயுனருள்புரியவும்
கொண்டாட்டமாகவுங் கொத்தடிமையாக்கியென்
குறைதீர்த்துனருள்புரியவும்

மதகத்துவாய்நின்றமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனங்கருதாது கைச்சரசமையாது நம்பிக்கிருபை
கேட்குமுன் வரவேண்டும்.

கஞ்சாவின்வர்க்கமுங் கஞ்சனிமயக்கமுங்
கருதாதுனருள்புரியவுங்
கைச்சரசமெல்லாங் கலந்தாசமாகவும்
கைச்சரசமருள்புரியவும்
நஞ்சானமூவாசை நஞ்சாகவுந்தேக
நையாதுனருள்புரியவும்
நாடவும்பாடவுந் தேடவும்மடிமையுனை
நம்பவும்மருள்புரியவும்
கெஞ்சாதுகெஞ்சுமெற் குன்சாபுதந்துநற்
கிருபைகூர்ந்தருள்புரியவும்
கேட்டதுகொடுக்கநான் கேட்டதுகொடுக்கநான்
கேட்குமுன்னருள்புரியவும்
வஞ்சமிலபராபார்த்த தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

மனநின்று நீங்காது நாட்டநாடாமற் கட்டவிழக்
காணேறையவரவேண்டும்.

கிட்டேரமின்னார்கள் வெட்டையிலழுந்தாது
கின்றிடற்கருள்புரியவும்

## ௧௫௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

நீச்சுநிலையற்றயோகி னிக்கேணியாழ்ந்தடிமை
நீந்தாதுனருள்புரியவும்
நட்டுங்கருந்தேளை யொத்தழலையென்றன்மேல்
நாட்டாமலருள்புரியவும்
நாறுநாரியர்கள்புண் ணூற்றமோர்கனவிலு
நாடாமலருள்புரியவும்
கட்டையிற்போமுனே கட்டுபாசக்கயிறு
கட்டவிவருள்புரியவும்
காலமுஞ்சென்றுசுடு காடுறையுமுன்மனங்
காடுறையவருள்புரியவும்
மட்டமேவிட்டமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௮)

மனதிற் குலாவாக்கொள்ளா வக்கரை ஆளாகச்
சிறப்புச்சீராட வரவேண்டும்.

கூசிக்குலாவுமட வார்களைக்கொஞ்சிக்
குலாவாதுனருள்புரியவும்
குஞ்சுங்குழந்தையுங் கஞ்சிக்கெனைக்கோட்டி
கொள்ளாதுனருள்புரியவும்
ஆசைப்பெருக்கங்கை நீந்தியக்கரைசாணு
மக்கரைக்கருள்புரியவும்
ஆளாகவொட்டாத பாழாசைபாழாகி
யாளாகவருள்புரியவும்
தேசிகாநின்றிருச் சமுகதரிசனமாய்ச்
சிறப்புடனருள்புரியவும்

செல்வம்பொழிந்தடிமை யுல்லாசமாய்நின்று
சீரிளவருள்புரியவும்
வாசங்கொழிந்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯)

மனமேகி வெட்டுதற்கு மனமுவந்து மருவி
ஓராதுரைசெய வரவேண்டும்.

இனவாசமெல்லா மறந்துமன வாசத்தி
லேகிவிடவருள்புரியவும்
எட்டாதபேரின்ப வனுபூதிவலியவந்
தெட்டுதற்கருள்புரியவும்
மனமாயைசோரவும் மனவாசியேறவும்
மனமுவந்தருள்புரியவும்
மாங்காயில்வண்டுபோ லீங்காதவண்ணமுன்
மருவிநின்றருள்புரியவும்
உனையன்றியெனையடிமைகொள்வருண்டென்றடிமை
யோராமலருள்புரியவும்
ஓயாதாற்றியுங் கேட்கவிலையோவதுவு
முரைசெய்துனருள்புரியவும்
வனிதையர்மயக்கற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧௦)

ஆக பாடல் ௧௫௮.

---

ஐந்தாவது

## வளிநிலை.

இம்முறையகலா நியைந்துதொடர்ந்து
செம்முறைபுனையும் யோகஞ்சிறப்ப
உந்தியொடுபுணர்ந்த விருவகைவளியுந்
தந்தமியக்கந் தகப்படுவளிநிலை
என்னும்பான்மையி னிரேசகபூரகத்
தன்னவாயுவைக் கும்பிடத்தடக்கும்
படித்திறனருள்கெனப் பணிந்துபணிந்து
முடித்தலைபாவி முன்னிரந்துரைத்தது.

மனம்விவரித்து வெட்டிவிட்டெண்காலினால் இருடரப்
பண்புதந்து பரந்தாட வரவேண்டும்.

வெட்டவெளியாய்ந்ததும் விட்டுவெளிபாய்ந்ததும்
விவரித்துனருள்புரியவும்
விட்டகுறைதொட்டகுறை யெட்டியென்கிட்டவா
வெட்டிவிட்டருள்புரியவும்
எட்டொன்றுமெட்டவும் மீராறுகட்டவு
மெண்காலினருள்புரியவும்
இரவிமதியேகவும் மிரவுபகலாகவும்
மிருடரவருள்புரியவும்
பட்டமதுகாற்றுற் பறந்தாடுசூத்திரப்
பண்புதந்தருள்புரியவும்
பாராதியண்டப் பரப்பெலாம்யானும்
பாந்தாடவருள்புரியவும்
வட்டந்துதிக்குமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மௌனதேசிகநாதனே. (க)

மனப்பசுவைப் படுக்கவைத்துப் பண்பாகக்கட்டுதற்குக்
கருணைவைத்து
மென்மேலும் வெருளாமல் வாவேண்டும்.

பாற்பசுதனைப்பக் குவத்துடன்பதியிற்
படுக்கவைத்தருள்புரியவும்
பால்காந்துண்டுபசி தாகமறயோகநெறி
பண்பாகவருள்புரியவும்
நாற்பசுதனைக்கா லிரண்டும்முடங்கவெளி
கட்டுதற்கருள்புரியவும்
கன்றினுக்குத்தாய் கனிந்திரங்குதலெனக்
கருணைவைத்தருள்புரியவும்
மேற்படியிலேத்தியெனை மேலாம்பதந்தந்து
மேன்மேலுமருள்புரியவும்
வேதவேதாந்தவெருவெளிகாட்டிவிட்டடிமை
வெருளாமலருள்புரியவும்
மாற்படிக்குதவுமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (உ)

மனவெட்டொன்றையேறுமல்வட்டமுற
வைத்தாட்டி யடக்கிவரவேண்டும்.

வீட்டுமெட்டினுட் கட்டவும்மெட்டாத
வெட்டொன்றையருள்புரியவும்
ஆறுகலையுமிரு நான்குவலைமாட்டிவெளி
யேறுமலருள்புரியவும்.

கசுஉ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

மட்டடங்காதப்ரி யட்டமும்மேற்சோம
வட்டமுறவருள்புரியவும்
மதியமிர்தமும்பொங்கி வழியமூலக்கனலை
வைத்தெடுத்தருள்புரியவும்
அட்டமாசித்திகற் சட்டமாயிட்டமா
யாட்டிவைத்தருள்புரியவும்
அழிவின்றிவிளைகின்ற வெளிகொண்டுவெளியென்
றடங்கிடற்கருள்புரியவும்
வட்டமதிபோலமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ரு)

மனமனை யுறைந்திடற்குச்சரித்து மாட்டிவைத்தடைத்துச்
சார்ந்திடற்குச்சற்றேனும்வரவேண்டும்.

உந்தியின்கீழ்நின்று சித்தசுழுமுனைமனை
யுறைந்திடற்கருள்புரியவும்
ஒருநான்குமாகவு மிருநான்குமேகவு
முச்சரித்தருள்புரியவும்
மந்திரத்தைக்கந்த ரத்தூடுவக்கென்று
மாட்டிவைத்தருள்புரியவும்
வாயிலோரொன்பதும் வன்னிநடுவணையொன்று
வைத்தடைத்தருள்புரியவும்
சந்திரசூரியரிரண்டுமொன்றேடொன்று
சார்ந்திடற்கருள்புரியவுஞ்
சத்தாகியென்னுளச் சித்தாகிநின்றநீ
சற்றேனுமருள்புரியவும்

வந்தவழியொளிரமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௪)

மனமுன்னேற முட்டி விளையாட வீடுபுக ஏற்றி
யேகாம லருளவரவேண்டும்.

மூலவரையுண்ணின்ற தேகிமேற்கொண்டுநான்
முன்னேறவருள்புரியவும்
முன்னேறுகுதிரைதனை மோனகுறடாக்கொண்டு
மூட்டிவிடவருள்புரியவும்
மேலூருவீதியில் வையாளிபோட்டங்கு
விளையாடவருள்புரியவும்
மேலுமுச்சந்திமேற் சந்தினல்வந்துமேல்
வீடுபுகவருள்புரியவும்
ஏலேலோவென்றுகா லிரண்டையுமிழுத்துயா
வேற்றுவித்தருள்புரியவும்
என்னையேமூட்டவு மெம்பிரானென்னைவிட்
டேகாமலருள்புரியவும்
யாவீயுமேலான தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௫)

மனமிடையாம லென்னை யேற்கு மாளாக அயர்ந்து
நடனமிட நயனமிடவரவேண்டும்.

இடைபிங்கலைகள்கூடி யங்குசுழிதடையுணின்
றிடையாமலருள்புரியவும்

## கசுச மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

என்னையறியாமலு மொளித்தெனுளிருந்தாடு
மென்னையெற்கருள்புரியவும்
அண்டக்காயொடிலைசருகு பக்ஷணம்பண்ணியா
ளாகவருள்புரியவும்
அஷ்டாங்கயோகநித்திரைகொண்டுசும்மா
வயர்ந்திடர்க்கருள்புரியவும்
நடனமிடுபரியுமண் ணுளவெளிசென்றுதிரு
நடனமிடவருள்புரியவும்
நயனநடுவணையினடு வணையுஞ்சுயஞ்சோதி
நயனமிடவருள்புரியவும்
வடுவற்றசடையுற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மரகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனத்திற்குக் கொடுத்துக் கொளுத்தாமலூட்டி உப்புகத் துயை
புரிந்து சார்பொன்றவரவேண்டும்.

கொள்ளாதுவெள்ளம் வருமுன்னணைக்கோலிக்
கொடுத்தநல்லருள்புரியவும்
கும்பித்திரேசித்த லொடுகொல்லனுலையிற்
கொளுத்தாமலருள்புரியவும்
உள்ளேமுளைத்தெழுந் துயர்பனையினுறுகள்
ளூட்டிவைத்தருள்புரியவும்
ஓடுமோர்கடகமு மோங்காரசாரமு
முட்புகற்கருள்புரியவும்
தள்ளாதபடியடிமை கொள்ளவுந்தாயெனத்
தலையபுரிந்தருள்புரியவுந்

தாமென்றுநின்றுதற் காத்திரக்ஷித்தனது
சார்பொன்றவருள்புரியவும்
வள்ளலாய்நின்றுமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மணமுளவுகாட்டிக் கட்டியொட்டி லொத்தூதத்
தேயாமற்றிறப்படவரவேண்டும்.

காயாபுரிக்கோட்டை கைக்கொள்ளுதற்குளவு
காட்டிவிட்டருள்புரியவும்
காலோய்ந்தயர்ந்துவிடு முன்காலிரண்டினைக்
கட்டிவைத்தருள்புரியவும்
ஓயாதகும்பித் திரேசித்தலுட்டங்கு
மொட்டொன்றையருள்புரியவும்
ஒத்தூதியூதா திரண்டுமொன்றேடொன்று
மொத்தூதவருள்புரியவும்
தேயாதவிரவிமதி யுந்தேயவுஞ்சுழினை
தேயாமலருள்புரியவுந்
தேவரீர்திருவடிக் காளாகியடியேன்
றிரப்படற்கருள்புரியவும்
மாயாமயக்கற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௭)

## கருசு மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மனத்தைக்கட்டிக் காப்பாற்றிப் பிரமற் பெலப்பாடு நெருங்க நேரிடவரவேண்டும்.

காற்றைப்பிடிக்கவுங் கரகத்தடைக்கவுங்
கட்டிவைத்தருள்புரியவுங்
கரகந்தனைக்காற் றுருத்தியுடையாமலுங்
காப்பாற்றியருள்புரியவும்
பிற்றலோரொன்பதும் மூடவுங்காற்றதிற்
பிறமலருள்புரியவும்
பின்னுமின்னும்பிறழ வொட்டாதுகட்டும்
பெலப்பாடுன்னருள்புரியவும்
நேத்திரமிரண்டுமுன் றேற்றிரவுகொண்டிட
நெருக்குண்டலருள்புரியவும்
நெற்றிநேரிட்டவெளி பற்றிபாயவுநிஷ்டை
நேரிடற்கருள்புரியவும்
வாத்தியாராகமெய்த்தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (சு)

மனந்துள்ளச் சுற்றிக்கட்டிக் காத்துக்கூட்டிக் கொடிப்போட வரவேண்டும்.

துள்ளுமனவாசிமேற் கொள்ளவும்வையாளி
தள்ளவுன்னருள்புரியவுந்
தூரநடவாதமென் முச்சந்திவீதியைச்
சுற்றவிட்டருள்புரியவுங்
கள்ளரறியாதமுள் ளறையிலென்குதிரையைக்
கட்டிவைத்தருள்புரியவுங்

கட்டாமலுங்கதவு சாற்றவும்வாயிலிற்
காத்திருந்தருள்புரியவுங்
கொள்ளையிட்டோலைவந் தாலும்வெருட்டிய
கூட்டிவிட்டருள்புரியவும்
கோட்டையுங்கைவசங் கொண்டுகொண்டுன்றன்
கொடிப்போடவருள்புரியவும்
வள்ளலெனவோடிமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧௦)

ஆகபாடல் - ௧௬௮.



ஆறாவது

## தொகைநிலை.



அடங்காதடங்கி யமைதற்காகினு
மடங்காதியங்கு மறிபொறியதனாற்
பொறியுணர்வெல்லாம் புலத்தின்வழாமை
ஒருவழிப்படுத லொருகைநிலைப்புறனென
ஓதியமுறைபோ லொன்றிலொன்றொன்று
வாதியன்றடாது மடங்கியொருங்குற
கன்னிலைப்புணர்த்து நாயகவென்றழு
திங்கிலையருள்கவென் றிரந்திரந்துயர்த்தது.
மனமிணக்கியேற்றி யடங்கியடைந்து
சார்ந்தொன்றாக வரவேண்டும்.

எந்நாளுமந்திரமு முன்னுததந்திர
மிணக்கிவைத்தருள்புரியவும்

## கசு அ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

எட்டங்குலத்துக்கு மெட்டாதகந்தரத்
தேற்றிவிட்டருள்புரியவும்
அந்நாளமீதுகண் ணுக்குழக்குச்செவி
யடங்கிடற்கருள்புரியவும்
ஆநந்தவொளிகண்டு நான்வந்தவெளிசென்
றடைந்திடற்கருள்புரியவும்
தன்னிலேதானுயர்ந்தடிமைதன்மையஞ்
சார்ந்திடற்கருள்புரியவும்
சர்வபரிபூரண சதானந்தமோனப்பிர
சாதமொன்றருள்புரியவும்
மன்னுமுனிவர்க்குதவு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மனமுழுங்க மூட்டிமேலேற்றி மேலுமெற்குச்
சந்தானந்தஞ் சார்ந்திடவரவேண்டும்.

மூலப்பிராணனைச் சண்டமாருதமென்ன
முழுங்கவிட்டருள்புரியவும்
மும்மண்டலங்களும் முட்டும்படிக்கங்கி
மூட்டிவைத்தருள்புரியவும்
மேலாம்பதங்காட்டு மெய்ஞ்ஞானநாலேணி
மேலேற்றியருள்புரியவும்
மேலுமேலானநா லாம்படிகடத்திமேன்
மேலுமெற்கருள்புரியவுஞ்
சாலோகசாமீப சாரூபசாயுச்சிய
சந்தானமருள்புரியவுஞ்

சாசுவதசாம்பிரதா யத்தொடுசதாநிட்டை
  சார்ந்திடற்கருள்புரியவும்
மாலையணிமார்பனே தவராஜசிங்கமே
  வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
  மவுனதேசிகநாதனே. (உ)

மனத்தைத் திறந்து திறவாமல் கட்டிச்சலீரென்ன
ஆட்டியாளாக்கியருள வரவேண்டும்.

திண்டுமுண்டானவா ருதாரவிடுந்
  திறந்துதந்தருள்புரியவும்
திருகுமுருகாநின்ற வாயிலோரொன்பதுந்
  திறவாமலருள்புரியவும்
சண்டசரமாலையங் கென்றுகண்டந்தனிற்
  கட்டிவைத்தருள்புரியவும்
காலினின்றுதமணி யோசைக்கலீர்க்கலீ
  ரென்னவேயருள்புரியவும்
அண்டர்களுநின்றுதுதி கொண்டிடவுமெனைநடன
  மாட்டிவைத்தருள்புரியவும்
அஷ்டாங்கயோகநன் னிஷ்டையினும்வைத்தென்னை
  யாளாக்கியருள்புரியவும்
மண்டலமெலாந்தொழுந் தவராஜசிங்கமே
  வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
  மவுனதேசிகநாதனே. (௩)

மனந் தம்பிக்கத் தம்பனம் பஞ்சாகப்பாழ்தந்து
கருணைக்கதியளிக்கவரவேண்டும்.

தசநாதமாமுன் னபானவாயுவினையுட்
டம்பிக்கவருள்புரியவும்
தாரணியிலங்கென்று முச்சரித்திடுஜலத்
தம்பனம்மருள்புரியவும்
பசுபாசநேசப் பெரும்பாவமனலிட்ட
பஞ்சாகவருள்புரியவும்
பாழானமூன்றனை பாழாகவும்மூன்று
பாழ்தந்துனருள்புரியவும்
கசமானசிற்றின்ப விடமுண்டுசாகாது
கருணைகூர்ந்தருள்புரியவும்
கருணைநிதியேசரண மடையுமடியேற்குநற்
கதியளித்தருள்புரியவும்
வசியவசனித்தலொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௪)

மனத்தகமாணுகச் சுத்திசெயச்சொக்கிவிட
மாறிடவுற்றுறுதருளவரவேண்டும்.

அத்தியிலுதித்தெழு மகத்தியெரித்தே
யகந்தியவருள்புரியவும்
அத்தியைநத்தியு மிருந்தேயறந்தங்கி
யாணுகவருள்புரியவும்
சுத்தபரிசுத்தமது வாகதநாதமுஞ்
சுத்திசெய்தருள்புரியவுஞ்

சோடசந்தன்னையுஞ் சோமவட்டந்தனிற்
சொக்கிவிடவருள்புரியவும்
மத்தியிலிருந்தமதி யமுதூற்றிநரைதிரையு
மாறிடற்கருள்புரியவும்
வாரியைமிகர்த்தவருள் வாரிகரைதத்தவெம்
வற்றுறுதருள்புரியவும்
வத்துமயமாய்நின்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ரு)

மனம் வர வசிய மடர்ந்தடங்கிச் சோர்ந்து
சுருண்டிட வரவேண்டும்.

வாதனையிறக்கவுஞ் சாதனைநிறக்கவும்
வரமளித்தருள்புரியவும்
வாசிதனிலேற்றவும் பாசவினைமாற்றவும்
வசியமெற்கருள்புரியவும்
ஆதாரமாறினுஞ் சேதாரம்வாரா
தடர்ந்தேறவருள்புரியவும்
அங்கென்றுகுப்பித்து வங்கென்றிரேசித்
தடங்கென்றுனருள்புரியவுஞ்
சூதானமானவெறு வெட்டவெளிசென்றங்கு
சோர்ந்திடற்கருள்புரியவுஞ்
சோதிமணிமண்டபக் கமலாசனத்திற்
சுருண்டிடற்கருள்புரியவும்
மாதவர்க்கரசனே தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனங் குதித்துக் கூத்தாடக் கிட்டுதற்குக் கிருபைபுகுக்
கெப்போது மருளவரவேண்டும்.

குதிகொள்ளுமச்சுமட்டத்தைப்பிடித்துக்
குதித்தேறவருள்புரியவும்
கோபுரத்தடியினிற் கொஞ்சிநடனங்கொண்டு
கூத்தாடவருள்புரியவும்
செதிகொண்டுபாய்ந்தபடி யாறுங்கடந்துளுங்
கிட்டுதற்கருள்புரியவுங்
கெற்பகிரகத்தினிற் குதிரையைக்கட்டவுங்
கிருபைதந்தருள்புரியவும்
பொதிகைமாமலையது பொதும்பிலடியேனும்
புகுந்திடற்கருள்புரியவும்
போதுமெனவாழ்வதுஞ் சித்தமென்பாக்யமெய்
போதுமெற்கருள்புரியவும்
மதியெனவெழுந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (எ

மனத்தின்முராணை தம்பிக்கச் சரிந்த கருக்கிட்
பதவிபால்தா வரவேண்டும்.

தசநாடியும்மூல நாடியுளொடுங்குநற்
முராணைகளருள்புரியவும்
தந்தமுந்நான்குமிரு நான்காகவொருநான்கு
ம தம்பிக்கவருள்புரியவுங்

கசியாதுசோமவட் டத்துறையுமமிர்தங்
கசிந்திடற்கருள் புரியவும்
கனலினுற்றத்துவக் குப்பைபையைச்சுட்டுக்
கருக்கிடற்கருள் புரியவும்
பசிதாகமற்றவமு தூற்றவுஞ்சாயுச்சிய
பதவியொன் றருள் புரியவும்
பசுவினைப்பதியினிற் கட்டவுங்காற்பசுப்
பால்தரற்கருள் புரியவும்
வசீர்த்தியாகமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மெனனகத்தச்சனை
மவுனதேசிகநாதனே. (அ)

மனம் வெல்லுதல் விலாசஞ்சு மாறுபடச் சூதுக்கொள்ளாது
குலைந்திடவரவேண்டும்.

வெல்லரியமாயைதனை வெல்லென்றுசொல்லவும்
வெல்லுதற்கருள் புரியவும்
விரிமறைகண்முரசறையு மறிவுக்ககண்டித
விலாசமொன் றருள் புரியவும்
சொல்லரியவாசா மகோசரசுபாவஞ்
சுமாறுபடவருள்புரியவும்
சும்மாவிராமலும் சும்மாவிராநின்ற
சூட்சமமெறக்ருள்புரியவும்
கொல்லரியபேய்க்குரங் காமனம்பாய்ந்துகுதி
கொள்ளாதுனருள் புரியவும்
கொலைதேடரானவைம்புலவேடர்கூட்டங்
குலைந்திடவுனருள் புரியவும்

## கஎச மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

வல்லிருடுலேக்கவுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (சு)

மனமது கொள்ள வானந்தங் கடத்தேறக்கட்டி
நான்புக நயந்துவரவேண்டும்.

அஷ்டாங்கயோகமே கிட்டநீரிஷ்டம்வைத்
ததுகொள்ளவருள்புரியவும்
ஆதிநடுமுடிவில் லகண்டிதாகாரவறி
வானந்தமருள்புரியவும்
கட்டையிற்போமுனே கிட்டைசாதித்துக்
கடைத்தேறவருள்புரியவும்
நட்டநடுவீதிமீ தோடியங்கானற்று
நான்புகற்கருள்புரியவும்
காலைப்பிடித்துமு லப்பிராணன்றனைக்
கட்டிவைத்தருள்புரியவும்
நட்டநடுவீதிமீ தோடியங்கானற்று
நான்புகற்கருள்புரியவும்
நாதநாதாந்தவே தாந்தசாரத்தையு
நயந்துதந்தருள்புரியவும்
மட்டறிவதற்கரிய தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (கo)

ஆகபாடல் - கஎஅ.



ஏழாவது
பொறை நிலை.

தொகுத்துப்பலபுறந் துருவிசசெல்லா
தகத்தோட்டி யவ்வருநிலையொடு
மனத்தினையொருவழி நிறுப்பதுபொறையால்
நினைத்தநினைவை நினைவாக்கொண்டு
பொருக்குநிலையினை பொருந்தவருள்கவென்
றிருக்குங்கருத்தோ டிரந்திரந்துயர்த்தது.

மனங் கனலை மூட்டிவைத்து முன்னேற்றிச் சிர்பாததீக்ஷை
வைத்துச் சரணமிட வரவேண்டும்.
முன்னையேமூட்டுமூட்டென்று மூலக்கனலை
முட்டிவைத்தருள்புரியவும்
முன்வைத்தகாலையும் பின்வாங்கிடாமலெனை
முன்னேற்றியருள்புரியவுஞ்
சென்னிமீதேந்தியான் றெண்டனிட்டுய்யவுஞ்
சிர்பாதமருள்புரியவும்
தெட்சணாமூர்த்தமாய் நின்றுதரிசனைதந்து
தீக்ஷைவைத்தருள்புரியவும்
சந்நிதானத்திற் சரண்சரணமென்றுநான்
சரணமிடவருள்புரியவும்
சட்டமுனிமுதலான நாதாக்களடியினுஞ்
சரணமிடவருள்புரியவும்
வின்னிருவேணையான தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவ்னதேசிகநாதனே. (க)

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ச)

மனஞ் சுத்திசெய்யத் துலக்க நின்றிலங்க விறைஞ்ச விட்டிலவிட்டு
விளக்குவைக்க வரவேண்டும்.

சோற்றுவெடுத்தசுவை ஞானசாயத்தையுஞ்
சுத்திசெய்யவருள்புரியவும்
சூக்குமக்காரண மகாகாரணத்தொடு
துலங்கிடற்கருள்புரியவும்
ஏற்றபடியாண்டவடி வென்முகத்தெதிர்நின்
றிலங்கிடற்கருள்புரியவும்
இறைவனேயுடைமையுனை யேத்தியேத்தித்தொழு
திறைஞ்சிடற்கருள்புரியவும்
வேற்றுருவர்காணாத வேதாந்தவீட்டிலெனை
விட்டடுத்தருள்புரியவும்
விழிமாயையிருடூர வொளிருமுச்சுடர்மணி
விளக்கொன்றையருள்புரியவும்
மாற்றுதபொற்றுவென் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ரு)

மனத்தைப் பிடித்துப் பிராணே னியங்காமற் சித்திக்க
விழுத்திடையறாது வரவேண்டும்.

பற்றற்றமுத்தியிற் காற்றெலாஞ்சேர்த்துப்
பிடித்தடைத்தருள்புரியவும்
பீற்றலாற்காற்றும் புறத்துப்படாதெம்
பிரானேயுனருள்புரியவும்

சேற்றினிடைநாட்டுமோர் கம்பமெனவென்னிலை
　　தியங்காமலருள்புரியவும்
செத்தாற்பிறழப்பனென் கருணைமிகுசிக்கிரஞ்
　　சித்திக்கவருள்புரியவும்
எற்றபடி தன்னரசு நாடாகவொட்டா
　　திழுத்தாளவைத்தருள்புரியவும்
என்றுமா தவமெய்ஞ்ஞானமென் றிடையுமேழையேற்
　　கிடையுறாதருள்புரியவும்
ஏற்றுமொழிசாற்றுஞ் சுகவாரஜசிங்கமே
　　வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடி வாழு மென்னகத்தீசனே
　　மவுனதேசிகநாதனே. (௫)

மனத்தைக் கருவென விணங்கிப் பிரித்துப் பேரின்பஞ்சேர்த்தாளு
　　தேவனே யருள்புரியவரவேண்டும்.

இந்த்ரசாலப்புலைச் சேரிவாதனைகளை
　　வெனமுழுக்கருள்புரியவும்
இல்லந்துறக்கவுஞ் சொல்லரியகல்லறி
　　விளைக்கிவைத்தருள்புரியவும்
பெந்தமதுபந்தமது கண்டவிருளென்னைப்
　　பிரிந்திடற்கருள்புரியவும்
பேராசைகொள்ளவும் பாராசையின்றுமோர்
　　பேரின்பமருள்புரியவும்
சிந்தாதபேரருட் செல்வமேபெண்சிந்தை
　　சிந்தாதனருள்புரியவும்
தேவனேதேவாதி தேவனேபரவாசு
　　தேவனேயருள்புரியவும்

## கஅ/௦ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மந்தாரவேளையிற் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மனங் கடாக்ஷித்துக் கரைந்திடப் பதித்துப் பக்குவ
மேகாந்தமேறிட வரவேண்டும்.

கதைபேசியதிலென்ன காரியம்மேலுங்
கடாக்ஷித்தனருள் புரியவும்
கல்விகல்லாக்கருங் கல்லாமென்னெஞ்சங்
கரைந்திடற்கருள்புரியவும்
பதியாமனத்தைப் பதைப்பறப்பதியிற்
பதித்துவைத்தருள் புரியவும்
பற்றறற்றுணிவுதரு முக்தரைப்பணியுநற்
பக்குவம்மருள்புரியவும்
இதயந்திறக்கவும் மெதையுந்துறக்குமோ
ரேகாந்தமருள்புரியவும்
இல்லாசையில்லாது வல்லாண்மைகொண்டுவெளி
யேறிடற்கருள்புரியவும்
மதிளுங்கடந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மன மண்ணலே வானந்தஞ் சோதிசுடரிருந்திட
என்னாளுமருள வரவேண்டும்.

அகமுதற்சகமயக் ககலவும்மகமேவு
மண்ணலேயருள்புரியவும்

அல்லவிழவெல்லவுந் தொல்லையறவெல்லையி
லாநந்தமருள்புரியவும்
சுகமீறவும்மனக் கலைகமாறவுஞ்சயஞ்
சோதியெற்கருள்புரியவும்
சுருதிமுடியாய்நின்ற சுந்தமடியாளருச்
சுடரொன்றையருள்புரியவும்
இகமொடுபரத்தினு மகமொடுபுறத்தினு
மிருந்திடற்கருள்புரியவும்
எகாறவும்முமது பாதாரவிந்தமெற்
கென்றைக்கு மருள்புரியவும்
மகிமைசொல்லற்கரிய தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
பாருணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧)

மனத்திற் கடாக்ஷங் கதிகிளைந்திடநிறுத்தி முதிர்ந்து
முறையாக வரவேண்டும்.

சுத்தனேயத்துவித வஸ்துவெற்கேத்துங்
கடாக்ஷம்வைத்தருள்புரியவும்
கருதரியசிற்பரத் துட்பரவுமெய்ப்பொருட்
கதியளித்தருள்புரியவும்
நித்தியானந்தமோ னந்தனையென்சிந்தையு
ணிறைந்திடற்கருள்புரியவும்
நேத்திரத்தாடுமே ணைற்றுமலர்பத்தையு
நிறுத்திவைத்தருள்புரியவும்
முத்திக்குளித்தாய் முளைத்தெழுஞ்சோதியு
முதிர்ந்திடர்க்கருள்புரியவும்

## ௧௮௨ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

முப்பாழ்கடத்திவைத் தப்பானடத்துமுறை
முறையாகவருள்புரியவும்
மத்தியிலுதித்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

ஆகபாடல் - ௧௬௮.



### எட்டாவது
### காட்சிநிலை.



வளிவசப்பட்டும் பொறிவசப்பட்டுந்
தெளிவசத்திருந்த சிந்தையையனைத்தும்
ஒருவழியோங்கு முயர்மனவழியே
திருவொளிகனிந்து நிலைபெற்றிகழ்ந்து
வெளியிலிரவும் விளங்கியபகலும்
ஒளியாயிருந்த வுவமையென்னைத்
தோற்றும்தோற்றந் தோற்றவருள்கெனப்
போற்றிப்போற்றிப் புகழ்ந்திரந்துயர்த்தது.

---

மனயணைந்தர்ச்சிக்கப் பணிந்து வசம்பண்ணிச் சென்றுடச்
சிறியவெற்கருள வரவேண்டும்.

ஆத்தாளையெனையீன்ற வாலையாநந்தியை
யணைந்திடற்கருள்புரியவும்
அம்பிகைமனோன்மணிக் குண்டலித்தாய்ப்பதமு
மர்ச்சிக்கவருள்புரியவும்
பார்த்தாளையாவையுங் காத்தாளையென்றும்
பணிந்திடற்கருள்புரியவும்

பரையாளை மாநல்ல சிறையாளையென்வசம்
பண்ணிவைத்தருள்புரியவும்
சேர்த்தாளிவான்கருணை பூத்தாளையொத்தபடி
சென்றுடவருள்புரியவும்
சிறியாளைமெத்தவும் பெரியாளையறியவுஞ்
சிறியவெற்கருள்புரியவும்
மாற்றுளனுப்பாறு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாதுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனம்பதம் பணிந்து சேவிக்கச் சிறப்பிடு சரண்டைந்து
தடையறவரவேண்டும்.

பந்துவயதடையசிறு பெண்ணனவென்றுய்
பதந்தொழற்கருள்புரியவும்
பாலானவாமமவைத் துப்பூசைபண்ணிப்
பணிந்திடற்கருள்புரியவும்
சித்தந்தெளிந்துபர தெய்வசந்நிதிசென்று
சேவிக்கவருள்புரியவுஞ்
சின்மயசிதாகாச தேவதைக்கென்றுஞ்
சிறப்பிடற்கருள்புரியவுஞ்
சத்தியுத்தொடுபரா சத்தியசமுகத்திற்
சரண்புகற்கருள்புரியவுஞ்
சஙகதிதிபத்மதிதி போலுதவியாய்நின்று
தடையறற்கருள்புரியவும்
மற்றெவரிருந்துமென் றவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே

## கஅகுச மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (உ

மனம்முயற்சி மோகங் கடத்திக்காட்டிச் சூக்ஷம்வகை
தொகையாக வரவேண்டும்.

மூலமுதலாறுவரை தாண்டிமேற்றண்டவு
முயற்சிதந்தருள்புரியவும்
மூலவர்க்கங்களென வாலையைப்பூசிக்க
மோகமெற்கருள்புரியவுங்
காலைப்பிடித்திழுத் துக்கந்தரத்தைக்
கடத்திவைத்தருள்புரியவுங்
காலனுக்குங்கால னாகவுங்கற்பமுறை
காட்டிநல்லருள்புரியவுந்
தூலத்தைவிட்டுவிட வொட்டாதுசூக்ஷாதி
சூக்ஷமொன் றருள்புரியவும்
பூமியின்னதென் றுசோடசமின்னதென் றுவகை
தொகையாகவருள்புரியவும்
வாலாயமாகமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௩.

மனத்தைக்கட்டிக் கண்ணே தயைபுரிந்து பிரசாதமென்று
பார்த்துப் பரிகரித்தருளவரவேண்டும்.

கலையாமலீராறு கலையினிலைகுலையுமுன்
கட்டிடற்கருள்புரியவுங்
காலைப்பிடிக்கிறே னம்மைகுண்டலியையென்
கண்ணேயெற்கருள்புரியவுஞ்

சலனமறவுங்கருணை நிதியேதயாளமே
தயைபுரிந்தருள்புரியவும்
சரணாரவிந்தமுன் பாதாரவிந்தப்ர
சாதமொன்றருள்புரியவும்
பலகாலிரந்ததும் பலனாகவென்முகம்
பார்த்துநல்லருள்புரியவும்
பாவியடியேன்படுங் கண்கலக்கங்களைப்
பரிகரித்தருள்புரியவும்
மலமத்தனையுமற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௪)

மனமுத்த முதநிராத் தண்ணீரைத் தள்ளாமற்
றெளிந்து சேவிக்கவரவேண்டும்.

மோகந்தவிர்க்கமூல யாரையனையாமனுமை
முத்தமிடவருள்புரியவும்
மொழியைத்தவிர்க்கவாய் மூடவுடனேமோன
முத்திரையையருள்புரியவும்
காகித்தமென்றனுக் கெண்ணெழுட்டாதுநற்
றண்ணீரையருள்புரியவும்
தாராதவருமெலாந் தந்தடிமைகொள்ளவுந்
தன்னாமமருள்புரியவும்
தேகத்தைவிட்டுவிடு முன்மனந்தேறித்
தெளிந்திடற்கருள்புரியவும்
செம்பொனிறமானசிறு வாலைபிருகாலையுஞ்
சேவிக்கவருள்புரியவும்

மாகத்தனைமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. ((

மனத்தின் பேரின்பம் பெண்ணாசையாசை ஆதரிப்ப
நாசமாய் நாசவரவேண்டும்.

பேசாதுமவுனத் திருக்கவும்பேசாத
பேரின்பமருள்புரியவும்
பெண்ணாசைமண்ணாசவும்வாலையம்பிகைப்
பெண்ணாசையருள்புரியவும்
ஆசாபசாசைத் துரந்தவந்திருவடியி
னாசைதந்தருள்புரியவும்
ஆதரவுமற்று தரிப்பாருமற்றவெனை
யாதரித்தருள்புரியவும்
நாசச்சரீரமு நாசமாமுன்புவன
நாசமெற்கருள்புரியவும்
வாசாமகோசரத் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (

மனத்தையாசை யபயந்தடாரித்துத் தாடந்து
பாசம்வைத்துப் பழக்கவரவேண்டும்.

ஆசரித்தம்பிகை சனைப்பூசைசெய்துய்யு
மாசையொன்றருள்புரியவுந்
அறமியற்றவுமனத் திறமியற்றவுமெனக்
"கபயளின்றருள்புரியவும்

தாய்செத்தபிள்ளையென வேசற்றிராமற்
றடாரித்தனருள்புரியவும்
தடையுரிற்றிடைபடா நின்றொளிருமெய்த்திருத்
தாடந்தனருள்புரியவும்
பாசத்தைவீசுமெம னுக்குட்படாதநின்
பாசம்வைத்தருள்புரியவும்
பஞ்சாக்கரத்தையுந் துஞ்சாச்சரத்தொடு
பழகிவைத்தருள்புரியவும்
வாயற்கடந்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (எ)

மனங் களித்துக் கனுவென்று நானுணை நற்தவசு
ஞானசத் துரையருள வரவேண்டும்.

காணுதகாட்சியைக் கண்டடிமையுள்ளங்
களித்திடற்கருள்புரியவும்
கண்கொண்டுகாணப் படாநின்றவெவையும்
கருவென்றுணருள்புரியவும்
நாணுமடவிரைக் கண்ணினிற்காணுமுன்
நாணுணவருள்புரியவும்
நாவுருசிதேடுதற் காவிகெட்டலையாது
நற்றவமதருள்புரியவும்
தூணைத்துரும்பாக்க வுந்துரும்பைப்பெருந்
தூணுக்கவருள்புரியவும்
துரியமயமாய்நின்ற பெரியபொருளைத்தொழுந்
துரையொன்றையருள்புரியவும்

வாஞ்ஞைவிடாதமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மனத்தையடிமைகொண் டனுபூதிமுழுத்திட மூடித்
தாண்டித் தந்தருளவேண்டும்.

ஆண்டினோடாண்டினந் தங்கோடிவைத்தெனையு
மடிமைகொண்டருள்புரியவும்
அதிசோதிபாலிக் கிடந்தொளிபரப்புமுன்
னனுபூதியருள்புரியவும்
மூண்டெரியுமங்கியிற் கருவிகரணங்களை
முழுத்திடற்கருள்புரியவும்
மூக்குமுனைவாயிலன் றைக்கிஞானியாலடைய
மூடிவைத் தருள்புரியவும்
தாண்டுமீராறுகலை தாண்டாமலுஞ்சுழினை
தாண்டிடற்கருள்புரியவும்
தாடாமணின்றமதி மண்டலங்கொண்டவமு
தந்தந்துனருள்புரியவும்
மாண்டவையுமாண்டமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மனத்திற்குச் சுகந் துணைதழுவித் தரித்திட ஆட்கொண்டு
ஆளாக்கியருளவரவேண்டும்.

சுந்தரச்சோதிமணி மார்போடணைத்துச்
சுகந்தந்து னருள்புரியவும்

சொந்தவடியேன்சிந்தை கொந்திடாவண்ணமே
துணையுநின்றருள் புரியவுஞ்
சந்திரோதயமெனச் சிந்துமொழிதந்தூகை
தழுவிநின்றருள்புரியவும்
தளதளென்றவிர்தரு ஜகச்சோதிபரவித்
தரித்திடற்கருள்புரியவும்
அந்தரத்துலவுகம னக்குளிகையொன்றளித்
தாட்கொண்டுனருள்புரியவும்
அம்பிகைபதம்பணியு மாளாகவும்மெனையு
மாளாக்கியருள்புரியவும்
வந்தனங்கைக்கொளுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (க0)

ஆகபாடல் - ககஅ.



ஒன்பதாவது

## தியான நிலை.



தோற்றியகாட்சியிற் சுயத்தினைப்பற்றி
எற்றியேற்றி யிடம்வலம்முன்பின்
இயங்காதோங்கி யெழுமனந்தன்னினை
வியங்காத்தோன்றி யுண்மையிற்றிகழ
நிறுத்திவம்மன நிலைதிரியாமற்
குறித்தபொருளொடு கொளுத்தறியானம்
என்னும்பாங்கி னிம்முறையருள்கவென்
றுன்னியுன்னி யுவர்ந்திரந்துயர்த்தது.

## கஅ௦ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மனமோகமுந்த நாளும் நாட்டிலைத் தவிழாமலவிழ்ந்து
தேனொருமுகச் சிறப்பிட வரவேண்டும்.

நவகண்டயோகமே நான்கொண்டமோகமதை
நாளுமெற்கருள்புரியவும்
நாவதனையொட்டிவிட்டுக்ராளமாட்டினிலே
நாட்டினையருள்புரியவும்
அவிழுமொன்றாயாய் முப்பட்டவுங்கட்டு
மவிழாமலருள்புரியவும்
அவயவாதிகளுநாலு தண்டாரயவிழுத்
தவிர்ந்திடற்கருள்புரியவுந்
திவலையொன்றுபிறவும் புன்னைனிபின்மணியெனத்
தேனொருமுகவருள்புரியவுஞ்
சிற்றாறுவட்டவுஞ் சித்தாந்தமுத்திச்
சிறப்பிட்டெனருள்புரியவும்
மனுணமணியானமெய்த் தவாராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
பாருணங்குடிவாழு மென்னைகத்தீசனே
மனுனதேசிகநாதனே.

மனம் பெரும்பாதையொன்றில் நிர்த்தூளிபண்ணிக் கடந்து
கைக்கொண்டேன்றி
யொன்றுக்குளொன்முக வரவேண்டும்.

பாலமுங்காண்டியப் பானடக்கப்பெரும
பாதைநயொன்றருள்புரியவும்
பாருக்களோவனம் தங்களதைநிர்த்தூளி
பண்ணிவிட்டருள்புரியவும்
காலாலடர்ந்தசமர் செய்தாதலமாறுங்
கடந்திடற்கருள்புரியவும்

மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௫

மன மங்கங்கென்றுள்ளடக்கிப் பக்குவம்பண்ணி அமிர்தபான
திருத்தந்திர மருளவரவேண்டும்.

ஆயபன்னிருகலையு மாயாதாதங்கவும்
மங்கங்கென்றருள்புரியவும்
அங்குகிங்கென்றுமைம் பத்தோரெழுத்துள்
ளடங்கென்றனருள்புரியவும்
பாயவும்வாசிக்கலை தேயவும்பக்குவம்
பண்ணிவிட்டருள்புரியவும்
பாலூரவுந்தனை மேலேறவும்மமிர்த
பானமெற்கருள்புரியவுந்
தீயைப்பொருத்தியென் னையத்திருத்தித்
திருத்திவைத்தருள்புரியவுந்
தேரத்தெளிக்கவுஞ் சேரப்பழிக்கவுந்
தீரமொன்றருள்புரியவும்
மாயையைக்காயவுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழுமென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬

மனம் வழிமருவச் சமர்செய்யத் தம்பனம் அடைத்துச்
சரணடையவரவேண்டும்.

வங்குவங்கென்றுரீங் காரமுடனேகமேல்
வழிவிட்டெனருள்புரியவும்
வாசிதனிலேற்றியெனை மாசற்றபரவெளியின்
மருவவைத்தருள்புரியவுஞ்

சங்குகிங்கென்றங்கு கண்டமாருதமெனச்
சமர்செய்யவருள்புரியவுங்
கம்பனங்கும்பித் திரேசிக்கவாயுவிட்
டம்பனம்மருள்புரியவும்
அங்கடங்குண்டவமிர் தங்கடைங்தென்கட
மடைத்துவைத்தருள்புரியவும்
அம்மைதுண்டலிபாத மாசரித்துச்சர
• ணடைந்திடற்கருள்புரியவும்
மங்காததங்கமே தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௬)

மனத்திரஞ் சின்மயமெய்தா வென்னுள் சுடர்சொந்தத்
தொடரருளவரவேண்டும்.

செத்தாலும்வைத்தடிபின் வாங்காதுமுன்னேறு
தீரமொன்றருள்புரியவுஞ்
சிற்பரவெளிக்கூடு செல்லவுஞ்சொல்லரிய
சின்மயம்மருள்புரியவும்
சுத்தாதழுத்திநெறி யேற்றவுமற்றவையு
மெய்தாமலருள்புரியவும்
ரக்வுருவாகிநின் றெங்குநிறைகின்றமொரு
ளென்னுளூறவருள்புரியவுஞ்
சித்தமயபடிகச் சுயஞ்சோதிபூரவிமுச்
சுடர்கொழித்தருள்புரியவுஞ்
சொக்குமதிமோகமுக வாரியமுதூட்டவுஞ்
சொந்தத்தொடருள்புரிவும்

வற்றாதசெல்வமே தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (அ)

மனத்தினிஷ்டம் வைத்தென்னை யெற்காய்த்து அறிவதற்குச்
சித்தம்வைத்துச செய்யுநல்லருள் புரிய வரவேண்டும்.

இதமாகவேயடிமை பதமாம்பொருட்டாக
விஷ்டம்வைத்தருள்புரியவும்
எல்லாமதாயேது மில்லாததுமாய்நின்ற
வென்னையெற்கருள்புரியவும்
அதுவேயதானவோ ருமறைப்பொருளாயா
ராய்ந்திடற்கருள்புரியவும்
அறிவதற்கரியவறி வாகாரமானவுன்னை
யறிவதற்கருள்புரியவுந்
சிதையுமிதயத்தையுஞ் சிதையாதிருத்தவுஞ்
சித்தம்வைத்தருள்புரியவுஞ்
சேவடிகொடுத்திந்த நாயடியனுக்குதவி
செய்யுநல்லருள்புரியவும்
மதமற்றமதமுற்ற தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே.

மனத்தைத் தாக்கத் துணிந்தெடுத்திருந்து
நிலைநெக்குருக வரவேண்டும்.

தொலையாப்பவக்கட றொலைத்துமக்கரையிலே
தாக்கிவிட்டருள்புரியவுந்

தொல்லைதருதொல்லுலகை வெல்லவுந்துறவிற்
அணிந்திடற்கருள்புரியவும்
இலையும்மலர்ந்தசரு குக்கும்பியெரியற்
றிருந்திடற்கருள்புரியவும்
இருகலையினூடுருவி முக்காலைக்கப்பா
லிருக்குமுன்னருள்புரியவும்
நிலையற்றவிதயத்தை நிலையத்திருத்தஞா
னிலையமொன்றருள்புரியவும்
நிற்குநிலைசொக்கியா னிற்காதுமிற்கவும்
நெக்குருகவருள்புரியவும்
பஞ்சமெலாந்தீர்க்கவுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
குணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௪)

பனைக்கருத்தக் கர்பித் தொழுக்கொழுக்கி
நடந்து நானெனவரவேண்டும்.

கானகவிலங்கினை மாகும்வைராக்கியக்
கருத்தொன்றுனருள்புரியவுங்
நாடுவீடாகவும் வீடுகாடாகவுங்
கற்பித்தவருள்புரியவும்
ஊனிறைந்தோருரு வெடுத்தகாயத்தற
வொழிந்திடவனருள்புரியவும்
உண்டுடுத்துப்பூணு முலகநடையெனைவிட்
டொதுங்கிடற்கருள்புரியவும்
ஞானநேயங்கண்டு மானாபிமானம்
நடந்திடவனருள்புரியவும்

நானென்றகற்றுநா னுறைகும்வண்ணநீ
நானென்றதருள்புரியவும்
வானுச்சியுலவுமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (கூ)

மனத்தினடனஞ் சந்தியிற்சென்று திறந்து
வசம் வளர்ந்தேற வரவேண்டும்.

நாசிநடுவணைநட்ட நடுவினின்றுல்லாச
நடனமிடவருள்புரியவும்
நாதநாதாந்தம் முழங்குமோர்தெய்வசந்
நிதியில்விட்டருள்புரியவுந்
தேசுதருமோசைமணி மாமண்டபத்தினுட்
. சென்றிடற்கருள்புரியவுந்
திரையைக்கடந்தங் கடங்கவள்ளறையைத்
திறந்துதந்தருள்புரியவும்
வாசங்கொழித்தகம லாசனத்தையுமென்
வசங்கொடுத்தருள்புரியவும்
வற்றுதசெல்வங்க ளத்தேசகாலமும்
வளர்ந்தேறவருள்புரியவும்
மாசேதுமற்றமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (சு0)

ஆக பாடல் - உ0அ.



பத்தாவது
## சமாதி நிலை.



ஒன்றியதத்னை யொன்றுற்றறுகுணம்
இன்றித்தானுந் தன்பெயரின்றிச
சேர்ந்துஞ்சேரா திருந்தவுண்டையோ
டார்ந்துமதுவு மாகாதாக
அங்ஙனங்குறித்த வம்மூதற்பொருளொடு
தான்பிறனுகத் தகையதுசமாதி
ஆகுமென்ற வந்நிலையருள்கவென்
றேகமாகி யிரந்திரந்துயர்த்தது.

மனக் கூடுகொள்ளாம லடங்கியஞ்சி ஒடுங்கி
யொழிதற்கு வரவேண்டும்.

கூடுவிட்டுக்கூடு பாயுகங்குக்குருவி
கூடுறையவருள்புரியவுங்
கொல்லனுலைமேனின்று கூத்தாடுகுறளிகுதி
கொள்ளாமலருள்புரியவும்
ஆடுநற்குண்டலிப் பாம்புமெய்ப்புற்றினு
ளடங்கிடற்கருள்புரியவும்
அஞ்சாதவிஞ்சுபுல வேடர்களுமடியனேற்
கஞ்சிடற்கருள்புரியவும்
ஓடியுழல்சிந்தையுங் கணமேனுமூசென்
றொடுங்கிடற்கருள்புரியவும்
ஒவியம்போலவே சும்மாதிருக்கமற்
றொழிதற்குனருள்புரியவும்
வாடுதலறிந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (க)

## கஅ௲ அ மஸ்தான்சாகிப் அவர்கள்பாடல்.

மனந் திகழ்ந்து தீயிற்சரிப்படச் சமஸ்தமும்
ஆட்கொண்டடக்க வரவேண்டும்.

தீபம்பொருந்துகர்ப் பூரமெனவுடலந்
    திகழ்ந்திடற்கருள்புரியவுந்
தீயிலிட்டென்னைக் கருக்குமுன்பென்னகந்
    தீயிலிட்டருள்புரியவுஞ்
சாபங்கடீரச் சமாதிநிறைவேறிச்
    சரிபடற்கருள்புரியவுந்
தடையுறாதுதவுகற் பகமாயிருந்தே
    சமஸ்தமும்மருள்புரியவும்
ஆபத்தையும்மடிமை பாபத்தையுந்தொலைத்
    தாட்கொண்டினருள்புரியவும்
ஆங்காரமெல்லா மடக்கியுன்கைக்குள்
    ளடக்கிவைத்தருள்புரியவும்
மாபதவிசேர்த்துமெய்த் தவராஜசிங்கமே
    வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
    மவுனதேசிகநாதனே.

மனத்தின் றத்துவந் தான்சாக நான்சாக
நாள் வருமுன் சித்தி சீக்கிரமருள வரவேண்டும்.

தான்செத்திருந்துலக முழுதுமரசாளுமோர்
    தத்துவம்மருள்புரியவுந்
தான்சாகவும்மருந் துண்பாரியாரியான்
    றான்சாகவருள்புரியவும்

நான்சாமுனான்சாக நாடினேனான்சாமு
னான்சாகவருள்புரியவும்
நாள்வருமுநான்சாக நாள்வந்துநான்சாக
நாள்வருமுனருள்புரியவும்
திஞ்சுதிருபிடிசாம்ப லாகவுந்தானை
சித்திபெறக்கருள்புரியவுந்
தேகநிலையல்லவே திருவருளிரங்கிமாச்
சீக்கிரம்மருள்புரியவும்
வீரஞ்சாலையானமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯.)

மனங்கரையத்தக்கவிழ்ந்து விளையாடவிட
எண்ணமின்புறவரவேண்டும்.

கண்ணாறுவிண்ணா றெனப்பொங்கவுங்கங்கு
கரைதத்தவருள்புரியவுங்
கருணசமுத்திரம் பரவிவந்தென்னைக்
கவிந்திடற்கருள்புரியவும்
விண்ணாடர்போற்றிசெய் யண்ணாவுமென்கூ
விளையாடவருள்புரியவும்
வேதவேதாந்தமெல் லாம்விட்டுநட்டநடு
வீடுபுகவருள்புரியவும்
எண்ணரியஞானவா னந்தமோனந்தரு
மெனந்தரற்கருள்புரியவும்
ஏகதத்துவசரூ பத்தைமோகித்தடிமை
யின்புறற்கருள்புரியவும்

மண்ணொளிரவின்னுலவு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ச

மனவெண்ணமிரங்கித் தீக்ஷைசெய்வித் தொடுங்கி
யுறங்கிடவரவேண்டும்.

இன்றுளோர்நாளையு மிருப்பரென்றெண்ணாத
வெண்ணமொன்றருள்புரியவும்
இந்தவடியானுனது சொந்தவடியானென
விரங்கிநல்லருள்புரியவுந்
தென்றிசைக்கைலாச மாம்பொதிகைவாசனே
தீக்ஷைதந்தருள்புரியவுந்
தேசிகசிகாமணி னேயடிமைபண்படச்
செய்வித்துனருள்புரியவும்
ஒன்றுக்குளொன்றன வொன்றுக்குளொன்று
யொடுங்கிடற்கருள்புரியவும்
உள்ளுக்குளுள்ளுருகி யுள்ளுக்குளுள்ளே
யுறைந்திடற்கருள்புரியவும்
மன்றிலெவருந்தொழுந் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (ரு)

மனமுனையே தொழ வுண்ணின்று மறந்திடாது வாய்த்திட
நாளுக நானறியவரவேண்டும்.

ஊனுனகாயமுயிர் போமுனடியே னுமுனை
யேதொழற்கருள்புரியவும்

உயிரினுக்குயிராயுறைந்தநீ யென்றுமேற்
றுண்ணின்று னருள்புரியவும்
வானுதிபூதலய மானபெரு மானெனை
மறந்திடா தருள்புரியவும்
வாக்குமன மணுகாத பூரணந்தானுக
வாய்த்திடற் கருள்புரியவும்
நானுகநின்றநா னுனுகநின்றநா
னுனுக வருள் புரியவும்
நான்மறையுமறியாத நான்மறையி னுட்பொருளை
நானறிய வருள்புரியவும்
மாவெனை விரைந்துமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௩)

மனமடர்ந்துபகர்ந் நீதென்றிருந்திட
மதமண்ணுக வரவேண்டும்.

அதிமோக மாகிமெய்ஞ் ஞானவா னந்தத்
தடர்ந்தேற வருள் புரியவும்
அங்கிங்கெனுமலெங் கெங்குமதுவானதெது
வதுபகர்ந் தருள் புரியவும்
இதயங்கணின்றுமித யங்களறிதற்கரிய
திதென்று னருள்புரியவும்
ஏகமாகியபராபரமுமென் பரமா
யிருந்திடற் கருள்புரியவும்
மதமத்தனையுமற்ற மதமுற்றியானும்
மதமாக வருள்புரியவும்

மனமயக்கந்தரும் மென்மயக்கம்வெறு
மண்ணாக வருள்புரியவும்
மதிமுகத்தழகனே தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்திசனே
மவுனதேசிகநாதனே.

மனமையமணைகால் பாயக்காத்துப் பாரிசப்
பரமாட வரவேண்டும்.

அடியனேனுய்யவு மாதரவுசெய்யவு
மையமற் றருள்புரியவும்
அன்புமழைசொரியவா றுய்ப்பெருகிவந்துமற்
றணைதந்த வருள்புரியவுங்
கட்டின்மடைபோலுமென் கண்மடைதிறக்கவுங்
கால்பாய வருள்புரியவுங்
கதியானபூமியி லேற்றியதையும்பாது
காத்ததின் றருள்புரியவும்
படுபாதிபங்குபற் றுமலும்முழுதுமென்
பாரிசத்தருள்புரியவும்
பாசமற்றிடவுநன் னேசமுற்றடிமையம்
பரமாட வருள்புரியவும்
மடமடெனநடனமொடு தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்திசனே
மவுனதேசிகநாதனே.

மனமன்பறிவு வீறுவீடுபதம்
பரமடைய வரவேண்டும்.

அகடமுறுசாமர்த்திய மெல்லாமறந்தடிமை
யன்படைய வருள்புரியவும்
அதிகப்ரசங்கங்க ளெல்லாமறந்தடிமை
யறிவடைய வருள்புரியவும்
வெகுளிவிளையாட்டுமுத லெல்லாமறந்தடிமை
வீறடைந் தருள்புரியவும்
வேடிக்கையோடுபகட் டெல்லாமறந்தடிமை
வீடடைய வருள்புரியவும்
பகடிப்ரியாசங்க ளெல்லாமறந்தடிமை
பதமடைய வருள்புரியவும்
பாடிப்படித்தகதை யெல்லாமறந்தடிமை
பரமடைய வருள்புரியவும்
மகுடந்தரித்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென் றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௯)

மனம்போகாமற் புணருதற்குச் செழுஞ்சாரல் நினைந்து
நான்சாரநாளுக வரவேண்டும்.

பூஞ்சோலைவாழுமோ நானெனவும் வீணிறன்
போகாம லருள்புரியவும்
பொற்றாமரைக்குளத் தவளையா காதினைப்
புணருதற் கருள்புரியவுந்
தேஞ்சாறுபாஞ்சாறு பாயுகின்பொதிகைச்
செழுஞ்சார லருள்புரியவுந்

திவ்யமா மதுரந் திரண்டமதி யமிர்தந்
தினந்தந்து னருள்புரியவும்
நான்சாமு னென்செத்து நாடோறு முன்சமுக
நான்சார வருள்புரியவும்
நாதமும்வேதமும் நாதநாதாந்தமு
நானுக வருள்புரியவும்
வாஞ்சித்தலோடுமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டுமென்றனருகே
மாகுணங்குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதேசிகநாதனே. (௧0)

௧0 - வது சமாதிநிலை பத்து - முற்றிற்று.

நேரிசையாசிரியப்பா.

இவ்வகையெல்லா மியைந்தும்பயன்கொளும்
அவ்வகை யெவர்க்கே யாயினும் விதியருள்
அருளுவதாயி னவரேயுலகெலாந்
தெருளுமூர்த்தித் திருப்பொருளென்ப
நல்வழி தேடு நரர்காள்
சொல்வழி யிஃதே துணிந்துகொ ணடரே.

இச்சதகப் பெயரின் கருத்துப்பொருளும், கொள்ளுந்தன்மை யும், இச்சதகஞ்சொல்லிய காரணமும், சாரியப்படுதலும், இச்சத கத்திற்போந்த அதிகாரமும், இவ்வதிகாரத் துட்பொருளும், இவற் றினியல்பும் ஒழுங்கும், இவற்றிற்குப் பழஞ்சூத்திரக் கோட்பாடும், விளக்கிக்காட்டி அதிகாரந்தோறும் பன்மையா யொழுகி, ஈற்றி னொருமையாய் முற்றுப்பெற்ற இவ்வகத்தீசர் சதகத்தின் அதிகாரத் துறையினமைத்த,

நேரிசையாசிரியப்பா.

அருந்தவமுனிவ ரனைவரினுயர்ந்த
பெருந்தவ முனிவர் பெயரே யாயினும்

அமைவனவமைக்க லாருமே லாமே
கமைவரு தாபதர் கருத்தகஃ தன்றால்
அகமும் புறமு மாயெப் பொருட்கும்
வகைபெற விளங்கு மதியா வுண்மையைக்
காரணந் தானும் காரியத் தானும்
ஆரணத் தானு மருந்தெளி வானுந்
தொகுக்கவு மிவற்றாற் றெருத்ததை மறுத்து
வகுக்கவு மாகா வன்மைபூண் டமைபான்
அகத்தீச னுக்கினம் புறத்தீச னென்று
'தகத்தீச னென்றே யாளவேண் டியதால்
அவ்வகத்தீச னின்பமோ டிறைஞ்சித்
தன்பெயர் மாறிக் காரணந் தந்து
பின்பெயர் மாறி யறிவெனப் பிறழ்ந்து
மாயை யுடையான் மனமெனத் தோன்றும்
சாயை யுடைய தாடாண்மை வீரனை
அடக்கி யொடுக்கி யணிகா ரணப்பெயர்
மடக்கி மடக்கி வாரா தாக்கித்
தானே தானுந் தன்மையின் விளங்கற்
கானு முறைசெய்வா னகத்தி னமைத்துத்
தவமும் யோகமுந் தகையென வியல்பின்
அவயவ மெல்லா மருளினொ டளித்து
விளக்கியாட் கொள்கென வேண்டி வேண்டித்
துளக்கி யிரந்துயர் தீரக் கேட்டது.

அகத்தீசர்சதக - முற்றுப்பெற்றது.

ஆகபாடல் - உசஅ.



 மஸ்தான்சர்கிபு அவர்கள்பாடல்.

## மகுமூது நபியாண்டவரைச் சுகானுபவமுறத் துதித்தல்.



ஆசிரியவிருத்தம்.

வெட்டவெட் டத்தளிர்கள் விட்டும் படர்ந்தடரும்
விசுபா சாடவியெனும்
வினையென்ற பெருமர வனக்கா னகக்காடு
வெட்டிவிர்த் தாவி பண்ணி
வெருளிக ளெனும்பல பறட்டுமுட் காடெலாம்
வேரோ டறப் பிடுங்கி
விரிகருணை விரகண் டாமணி யணிந்தணி
வீரவா யுதமணிந்து
வெற்றிகொண் டெழுமகங் காரவெங் கைப்புலியை
வேட்டையா டித்தணித்து
வேட்கையொடு துக்கமும் வெருட்சியு மருட்சியும்
வெருண்டோட வருவி ராகம்
வெஞ்சின மெனுங்கொடிய துஷ்டமிரு கங்களும்
வெபவா லெடுத்தெடுத்து
விரவிட் டலறியோன் றொடொன்று சேராமல்
வெருவியே யிடவடித்து
வெல்லரிய மாமாயை யெனுமலைப் பாம்பினை
விவேகமெனு மண்டாவினால்
வெட்டிப் பிளந்தபின் மின்னுகா ணத்தொடு
விருந்தோடு கருவி வேரை
மீறிய விசாரமெனு மண்வெட்டி கோடுவெட்டி
மேட்டுமைக ளென்னு மரமும்
வெட்டுண்ட மாறோடு முட்களுஞ் சேர்த்ததின்
மெய்த்தலைக் கனலை மூட்டி

விண்டலமு மண்டலமு மொன்றாகி நின்றபெரு
    வெளிவாயு வதனையூதி
மெய்யான வடவனலெனச்சுடர் பரந்தபின்
    வினிமாயை யெனு மிருளெலாம்
விரிகதிர் வரக்கண்ட பனியின்முக மென்னவுந்
    விட்டுவெளி யாகிப்போக
வெட்டியைக் கட்டிவழி வெட்டிப் பறிக்கின்ற
    வினையறக் காலி வெட்டிக்
கட்டபி னகங்கைத்துமை மென்றகற் பாறையைக்
    கழிவென்று முளியி றுமே
செரிச்சமற வெட்டிப் பிடுங்கியிடை யிக்கலைச்
    சூட்சியென் றைந்தைக்கட்டித்
ஆக்கினைத் தேற்றிய தொந்தக்கொ டொண்ணுமொரு
    தோல்வடக் கயிறு கட்டித்
பட்டத் துடிக்கிறகலிங் காமாட்டி யாடகரந
    தோல்வடந் தொட்டு முக்கத
தூயமெய்ஞ் ஞானவை ராக்கியக் கைகயிறுந்
    தொண்டெரெப் பென்றடுக்குத்
தூராத பிடியென்னுந் தொல்லைப் பெருங்கோலி
    தூர்க்கையா ருள்ளேற்பிச்
சொற்பிரணவமெனும் நிச்சயக் கருமுகில்
    சூழ்ந்துவரு காலூன்றியே
சுற்றிக் கவிந்தமெய்ஞ்ஞா னந்த மழைமாரி
    சோராமலேபொழிந்து
சொல்லரிய தெந்தசக மெனும்பூமி சுத்தவெளி
    யாகவச் சுத்திருத்தித்

துய்யசதுர் வேதத்தை நால்வாப் பாக்கியே
துறவெனுங் கிடை மறித்துச்
சுருதிமுடி வென்னுமறி வுழவுழுவ தற்கான
சூத்திர மெனுங் கலப்பை
துன்பவின் பங்கவென் பதிரண்டு மாடாய்ர்
சுருக்கிவார் பூட்டி யிதமாய்த்
துள்ளிக் குதித்தெடுத் தேறியே போகின்ற
துடியடக் கின்ற திடமாய்த்
தூலமொடு சூக்குமத் தாசையுயி ராசையாய்த்
தொந்தவிர்த் தொந்த மாகிச்
சோதிமய மாகின்ற வித்தகப் பண்ணையா
டொட்டிதய மேழி யதனைச்
சொன்னபடி வந்திடக் கௌரிகுண் டலியெனுஞ்
சுழிமுனைத் தாறெடுத்துப்
பட்டும் படாதும்வைத் திடைதரிசி லைதுழுது
பல்வருண பேத மென்னும்
பாவிகச் சாதிவரை கின்றகளி யளறது
பழுக்கவழு கக்கலக்கிப்
பழக்கமெனு மடைதலுங் கட்டியு மிதித்தபின்
பழகரிய சமரச மெனும்
படிகொண்ட மூலமுத லாதார மாறும்
பரப்பிப் பரம் படித்துப்
பகருமிரு கலைநோக்கி வருசுழியி லமைகின்ற
பலனெனுங் கைகுலுக்கிப்
பாரமலை யோடணு வகண்டமொடு சண்டம்
பரிசுத்தக் கொணுத விதையைப்

பட்டிமுந் தாதுபிந் தாமலே பாவியே
 பருவமது செய்த பின்பு
பாசட ரெடுப்பென் றெடுப்புநீ ரதனையும்
 பார்த்துக் கழித்து விட்டுப்
பத்திவை ராக்கியக் கடன்மழை திறந்துகால்
 பாய்ச்சியது பயிராகவே
பரிபாகபக்குவக் காலமதுபி காறு
 பார்த்துப் பநந்தன்னிலே
பற்றிப்படர்ந்தகொண் றாற்குறுதத்துவப்
 பலகளை யறப்பிடுங்கிப்
பரிபூர்ணமாகவே நானுக்குநாட்கதிர்ப்
 பலகோ ளறப்பரிந்து
பானையென்னும்பருவ முற்றியேமுத்திப்
 பலன்பெற்ற சமுசாரிநீ
படைகொண்டமும்மண்ட லத்துமுன்மகிமையைப்
 பற்றிப்படர்ந்த குருவே
பாதபங்கயமதுக் காளடிமையாகாது
 பாவத் தழுந்துவேனே
பாசவலைவீசியே மோசமதுசெய்கின்ற
 பாவையர்க் காளாவனே
கொட்டியகருந்தே ளிகர்த்தவிழிபின்னும்
 குவிந்தவிரு பொற்கொங்கையுங்
கோசமொடுமும்மத மிறைக்கின்றகர்விதக்
 குஞ்சரக் கொம்புகானே
கொஞ்சுகிளிமொழியார்க ளுவநல்லரவினின்
 கொடியகஞ் சுப்பையதோ

கூரிருட்கூந்தலென் சொல்லுகேன்கோடையிடி
குடிகொண்ட கருமேகமோ
கோதையிளமின்னார்கள் யோனிப்பெருங்கேணி
குறையாத யானைமடுவோ
கூருமுகிலேழும் படர்ந்துவருடிக்கினும்
குறையுருக் கெடுபள்ளமோ
கொத்துக்கடங்காத மதசாரிதனக்குமது
கொப்பமோ படுபள்ளமோ
குருவைத்தொழாமனுக் குப்பைகளொதுங்குமோர்
குப்பைக் கிடங்குதானோ
கொலைசெயமனுநிருக் கின்றபடுகளமோ
கொடுஞ்சிங்க மிடிபொதும்போ
குமுகுமெனவதிரசத் தேனொழுகுகனியெனக்
கொண்டுநெஞ் சினைவாட்டுதே
கோளடப் பெண்ணிலத் தாரைதரு கின்றதே
கோதையர்கள் காதலாலே
கூளமதரிப்பதே யல்லாதிருந்துநான்
குளிர்காய நேரமில்லையே
கூர்குணமகத்துதிற் கின்றபரவெளியெலாங்
குடிகொண் டிருந்தகுருவே
கொடியகெடு மாயையைக் கூடாதிருக்கின்ற
குறியருள்வ தென்றுபுகலாய்
கோடானுகோடிமறை யாவுமறியாக்குணங்
குடிகொண்ட கருணைவடிவே
கூலாஇ லாகஇல் லல்லாகுவென்பதற்
குரியமகு மூதுநபியே.

அறுபத்துநாலடி யாசிரியவிருத்த - முற்றிற்று.

ஆக பாடல் - உ௧௧.

## தவமேபெறவேண்டுமென்றல்.

கட்டளைக்கலித்துறை.

ஓடி யலைந்துமிவ் வையக முற்று முழன்றுந்
தேடி யெடுத்த திரவியம் யாவையுஞ் செத்தபின்பு
நாடி யெடுப்பது முண்டோ மறந்து நடக்குநெஞ்சே
வாடி யிறந்தறஞ் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே. (௧)

பெண்ணாசையென்கிறபேய்ப்பிடித்தாடிய பேதைநெஞ்சே
கண்ணா லதில்வருங் கஷ்டங்கள் யாவையுங் கண்டிலையோ
எண்ணாத பாவங்க ளொன்றாமற் பெய்யுமிப் பேருடம்பு
மண்ணாக நற்றவஞ் செய்வாய் குணங்குடி வாய்த்திடுமே.

ஆடும் பலபொரு ளாட்சியென் றங்கிங்கு மாயலைந்து
பாடும் படுவதுன் பாரமன்றோ சொல்லு பாழ்மனமே
கூடும்ப டுபயன் றேடுமப்பாலுள்ள கூட்டம்விட்டு
வாடும் படும்பெறு முண்மைக்குணங்குடி வாய்த்திடுமே.

ஆதி முகம்ம தருளாமுகம்ம தருள்விரிந்த
சோதி முகம்மது தோற்றமு கம்மது தாயவுளத்
தோதி முகம்மதென் றுண்மைகண் டாலிவ் வுலகினுக்கு
வாதி முகம்மதி னோடுங் குணங்குடி வாய்த்திடுமே. (௪)

எல்லாப் படைப்பும் படைத்து மிரணங்க ளீபவனே
அல்லாவொ ருவ னவனன்றி வேறிலை யாகையினாற்
சொல்லா மற்சொல்லுஞ் சுருதிமுடி வினிற் சொல்லிறந்த
வல்லான் குணங்குடி வாழ்ந்திருப் போமினி வாருமினே.

அய்யோவு லகி லழியா வரம்பெற்றி யாரிருந்தார்
அய்யோ வுனக்கந்த வாதர வென்னதி லாசையென்னே,

பொய்யான வாழ்வும் புலையாட்டு நம்பும் புதரலர்க்கும்
ஒய்யார முள்ள குணங்குடி யாற்கு முறவில்லையே. (௯)

உற்றா ரிருந்தென்னைப் பெற்றா ரிருந்தென் னுனக்குதவி
சற்றாயி னுமில்லைசொன்னேன் சொன்னே னிதுசத்தியமாய்ச்
செற்றாலும் வைத்தடி வாங்காமனிற்கிற் செயம்பெறலாங்
கற்றார் குணங்குடி கொண்டிடுவாய் மனக் கண்மணியே. ()

அஞ்சா னுபரத் திருக்கும் பணியி னிறக்கியுன் னும்
பஞ்சா க்ஷரமெனும் பாரிய வாளினைப் பாய்ந்தெடுத்துத்
தஞ்சாவூ ராஜ மகாராஜன் பாதத் தனைப் பணிந்தால்
செஞ்சாக் குணங்குடி கொள்வாயிதுபுந்தி கேளெனஞ்சமே

படிக்கும் படிக்கு நடக்கின்ற யோகிப் பழந்தெருப்பா
லடிக்கட்டுமோவுனக் கொக்காசையாரமற பாவிநெஞ்சே
முடக்கிப்படுத்துக்கொண் டுச்சரிக்குப்பையின் மோககளி
லடக்கிக் குணங்குடிகொள் வாயிது புத்திகே ளெனஞ்சமே.

ஆருக்கு வந்த விருந்தென் றிராம லருமையுள்ள, பேரு
க்கு வந்த தெனவே நினைந்து பிரியமுற்று, நேருக்கமைந்த
தோரன்னங்க ளுண்டுண்டொன் றாமறையாய்ப், பாருக்
குணல்ல குணங்குடி போய்ப்பள்ளி கொண்டிடுமே. (௧௦)

மூலமு கம்மது முப்பார்முகம்மது மோனமுள்ள
பாலமு கம்மது பத்தியுள் ளோர்களுய் யாய்ந்தெடுக்கும்
வேலுமு கம்மது வேதாந்த மூல விளக்குடைய
கோலுமு கம்மது குன்றக் குணங்குடி கொண்டவர்க்கே.

நாளைக் கிருந்திட லாமென வெண்ணி நடுநெஞ்சமே
நாளைக் கிருப்பதை நம்புவதோ வில்லை நானிலத்தில் [ன்
நாளைக்கும்பின்னைக்கு மாமிருப்போமென்னு நாட்டமற்ற
வேளைக்கு நல்ல குணங்குடி வாழ்ந்திரு வெல்லையிதே. (௧௨)

காட்டமென் றேயிரு வன்னிரு பாதத்தி னன்னிலையின்
ஓட்டமென் றேயிரு வொன்றான வக்ஷர மோதியதின்
ஆட்டமென் றேயிரு தோற்ற மெவையு மலிபுடைய
கீட்ட மென்றேயிரு நெஞ்சே குணங்குடி நிச்சயமே. (கங)

நாடு நகருண்டு நல்லோர் களுமுண்டு நாதனுமுண், டோடு மெனக்குண் டென்றெண்ணி யுன்னையி லுடல்பசித் தாற், போடென்று கொண்ட கவளத்தை வாங்கிப் புசித்துக்கொண்டு, பாடுங் குணங்குடி வாழ்ந்திட வேபரமா னந்தமே. (கச)

தவமே பெறவேண்டுமெனல் - முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - உகஅ.

## குறையிரங்கிபுரைத்தல்.

நேரிசை வெண்பா.

கள்ளினங்க ளுண்ணுங் கழுதைகா ளென்சொலினும்
எள்ளளவுநம் மிதயத் தெய்திலையே—உள்ளம்
இணங்கா மடமாந்த ரொக்கேசு தான்கெடினுங்
குணங்குடியார்க் குண்டோ குறை. (க)

உற்றா ரழாம லுறமுறையார் திட்டாமற்
பெற்றார் பிறந்தார் பிதற்றமல்—எத்தாலும்
அங்கிங்கெனுதபடி யாரும் பெருவெளியிற்
றங்கல் குணங்குடியே தான். (உ)

நாசி நுனியி னயனத் திடைவெளியிற்
றேசிகனு ராடுந் திருநடனம்—வாசிகொடுத்
தோரா யெழுவா யுணர்வா யருநெஞ்சே
பாராய் குணங்குடியின் பால். (ங)

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

பாலிடுக்குந் தோற்பையைப் பற்றியுளம் பாவையரின்
காலிடுக்குக் காகக் கரைவனே—மேலெடுக்கும்
உன்னருளையுங்காட்டி யோங்குங் குணங்குடியின்
றன்னருளையுங் காட்டித் தா. (௬)

நஞ்சுண்ணு மாப்போலு நாதனருள்பெறவென்
னெஞ்சேநீ புண்ணாய் நினைப்பதேன்—அஞ்சாதே
என்றமுத்த னம்முள்ளே யேகா திருப்பதால்
ஒன்றுங் குணங்குடியி னாள். (௭)

நீண்டான் பனைபோலு நெற்பதரைப் போலுமே
என்று னெனைப்படைத்தா யென்கோவே—நீண்டாத
கல்லா மிடாவதைதின் னைத்தடியான் மோதினால்
அல்லாற் குணங்குடியா கா. (௮)

மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்றுதுணிபோற்றவரைச் சற்றுகுளிர்—அற்றதுணி
இல்லைக் குளிருமில்லை யில்லையிது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர். (௯)

குறையிரங்கி யுரைத்தல் முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௨௫௦.



## தவராஜமகிமை சாற்றல்.



நாகூர்மீரான்சாகிபவர்கள்பேரிற் பாடிய
இரட்டையாசிரிய விருத்தம்.

திக்குத்திகந்தமுங் கொண்டாடி யேவந்து
தீன்கூறி நிற்பர்கோடி

சிங்காசனதிபர்க ணதரேந்தியேவந்து
ஜெயஜெயவென்பர்கோடி.
ஹக்கனருள்பெற்றபெரி யோர்களொளி மார்க்க
யணியாக நிற்பர்கோடி.
அஞ்ஞானவேரறுத் திட்டமெய்ஞ்ஞானிக
ளிணைந்தருகு நிற்பர்கோடி.
மக்கநகராளும் முகம்மதிற சூல்தந்த
மன்னரே யென்பர்கோடி.
வீசனித்தநிற்கலே கொலுவிற்றிருக்குமுன்
மகிமைசொல வாயுமுண்டோ
தக்கபெரியோனருட் டங்கியேநிற்கின்ற
தவராஜ செம்மேருவே
தயையைவைத் தென்னையாள் சற்குணக்குடிகொண்ட
ஷாகுல்ஹமீ தரசரே.

தவராஜசாற்றல் - முற்றுப்பெற்றது.

---

## வரனருள்பெற்றோர்

மனநிலையுரைத்தல்.

---

கலி விருத்தம்.

வஞ்சவேல்கொடு மார்பிலேறியினும்
விஞ்சவேதழல்மீட்டியெரிக்கினு
நஞ்சினாற ஞெக நலியினும்
அஞ்சிடாதவ ரானந்தமாவரே.

வரனருள்பெற்றோர் மனநிலையுரைத்தல்-முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௨௪௨.

---

உகசு மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

## ஆனந்தக்களிப்பு.

இரக்கத்துணிந்துகொண்டேனே - எனக்
கிருக்குங்குறைமுழுது நீசழித்திக்கொண்டேனே. (இரக்கத்)

கொடிகட்டிக் கொண்டெழுகோடி—தனங்
குவித்தந்தமகிழ்ச்சியாற் கூத்துகளாடிக்
கெடுபுத்தி யுடையோரைக்கூடி—யானுங்
கெட்டலையாமலே கெதிபெறநாடி—இரக்கத் (க)

சொற்கடங்காச்சுக ஞானம்—தன்னிற்
சும்மாவிருக்குஞ் சுகமதேமோனம்
எட்கிடையாயினும் பானந்—தன்னை
எடுத்துண்டிருப்பதற் கிச்சித்தே யானும்—இரக்கத் (உ)

வஞ்சியராசையைத் தாட்டி—விட்டு
வழிவெற்றுக் களிப்புற்று வாசியைப் பூட்டித்
துஞ்சாத வறிவினைச் சூட்டி—அற்பத்
தொல்லுலகாசை துணித்துவிட்டோட்டி—இரக்கத் (ரு)

அஞ்சுதா ளுட்டியமாடி—அது
அஞ்சோடு நாலோட்டை யடையாமலோடிப்
பிஞ்சழிந்திடுமென்று நாடி—யானும்
பேரின்பவீட்டினைப் பிரியமாய்த்தேடி—இரக்கத் (ச)

நற்பூச்சந் தகவத்தர் பூசி—மிக
நன்றாகவைத்தாலு நாற்றமேவீசி
எப்போதுங் கொடுமைசெய் தோசி—என்றே
இவ்வுடல்வாழ்வுக ளியாவையும்வீசி—இரக்கத் (ரு)

மாளிகை மேல்வீடுகட்டி—மனை
வாழ்வை நிலையென்று வாழ்கின்றமட்டி
நாளையெமன்வந் ததட்டிக்—கொண்டு
நடப்பானென்றறியானை யடுப்பதைவெருட்டி—இரக்கத் ()

பட்டும்பணிகளும் பூண்டு—கொண்டு
பாழான வாழ்வினைப் பலனென மாண்டு
கெட்டவர் களைக்கண்டு மீண்டு—கதி
கிடைக்கும்படிக்கு நடப்பதற்கீண்டு—இரக்கத் (எ)

காமக் குரோதங்களற்று—சூழுங்
கருவிகரணஞ் சகலமுமற்று
சேமநிஷ்டைகளையு மற்று—நின்ற
நிலையுமறந்து குருவடிபெற்று—இரக்கத் (அ)

எத்தனை யெத்தனைகாலம்—இந்த
என்று தசையா லெடுக்கின்ற தூலம்
மெய்த்தனை வாழுமிந் ஞாலம்—அதை
மேவாதுமேவா தெடுத்திந்தக்கோலம்—இரக்கந் (கூ)

என்னிலே தன்னை யறிந்தே—என்னுள்
இருந்தாடுஞ் சூத்திரம் பொருந்தாட மறிந்தே
அன்னிய நிலைகளைத் துறந்தே—குரு
அருளினா லநுதின மருளெலா மறிந்தே—இரக்கத் (க0)

ஆழித் துரும்பென வங்கும்—இங்கும்
அலைந்து திரிவதி லஞ்ஞானந் தங்கும்
பாழிற் கெடாதருள் பொங்கும்—படி
பார்த்துத் துணிந்து பரதேச மெங்கும்—இரக்கத் (கக)

காடுங்கரையுஞ் சுழன்று—ஒரு
காட்சியுங் காணுமெனவே யுழன்று
தேடும்பருவத்திற் சென்று—திக்குத்
திசையொன்றுந் தெரியாமற்றெளிதற்குநின்று—இரக்கத்

ஆடியகூத்தினைப் போற்றி—அருள்
ஆனந்தஞ் சேரக் கருகிலிற்றேற்றி

## ௨௧௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

ஓடியகாற்றினை யேற்றி—அதில்
உருகியொழுகு மமிர்தத்தைத்தேற்றி—இரக்கத் (௧௩)

நாலிரண்டரைமுழ மான—பிண
நாற்றச் சடலத்து ளொன்று ஞானக்
கோலம் விளக்கியமோன—அருள்
குருவடி திருவடி வுருவத்தை மான—இரக்கத் (௧௪)

எறியு மகத்தைத் தடுத்தே—அதில்
இச்சித்துப் பக்ஷிகளைத் தடுத்தே
அறிவைக்கொண் டறிவைத் தொடுத்தே—அருள்
ஆனந்தஞ் சேர்க்கின்ற வருளினையெடுத்தே—இரக்கத் ()

பாரினிற் பலவிதங் காட்டி—நல்ல
படிகத்தின் குணமெனப் பரவெளிசூட்டி
ஆரிய னருளினைக்கூட்டி—குரு
அருள்செய்த வுடனேயென் வினைகளையோட்டி—இரக்கத்

மண்டப வுள்ளறை விண்டு—வரும்
மாமணமூறிய தேமதுவுண்டு
உண்டு களிப்போரைக்கண்டு—யானும்
உள்ளத்திருக்கினைத் தள்ளிக்கைகொண்டு—இரக்கத் (௧௭)

மாதவந் தன்னைப்புரிந்து—ரச
வாதங்கள் செய்கின்றோ மென்றுதிரிந்து
சூதோடு வாதைபுரிந்து—கெட்ட
சூதரைச் சத்தியமாகப் பிரிந்து—இரக்கத் (௧௮)

பொறிபுல னடங்கிய காலே - பரி
பூரணப்பொருள்வந்து வாய்க்குமப் பாலே
அறிஞரு மறியாதுபோலே - காணும்
ஆனந்தவெள்ளத்தி லூடினதாலே - இரக்கத் (௧௯)

நினைவுங் கனவு மறந்து - நின்ற
நினையு மறந்தெழு கலையுமறந்து
முனமும் மனமும் மறந்து - பின்னர்
இதனிடை தோற்றிய விதங்களுமறந்து - இரக்கத் (உ0)

கடற்கட்டுப் பாய்கின்ற தோயம் - போலக்
காட்டிமறைக்கும் பிரபஞ்சமாயம்
அற்பற்குத்தெரியாத பாயம் - என்று
ஆலோசனைசெய் தழியுமுன் காயம் - இரக்கத் (உக)

எனையாவனென் றறியாதபாடு - என்னை
இக்கோலமாக்கிய தேபதன் கேடு
தனையானு மெதிர்க்கையி னோடு - கொண்டு
சாபத் துடனடர்ந் தேகோபத் தோடு - இரக்கத் (உஉ)

விண்ணுக்குள் வெளியிருண் மாற்றி - அதில்
வேதாந்தமூல விளக்கினை யேற்றிக்
கண்ணுக்குண் மணியாகத் தோற்றி - வருங்
காரணமான கடவுளைப்போற்றி - இரக்கத் (உ௩)

எல்லாரு மானுடர் தாமோ - இந்த
இழிவான பிரமைக ளெல்லார்க்கும் போமோ
கல்லெல்லா மாணிக்கமாமோ - என்று
கற்பித்த காரண குருவடி போற்றி - இரக்கத் (உ௪)

நாதமுங் கீதமுங் கேட்கும் - அந்த
நாயகன் சந்நிதி தன்னிடை சேர்க்கும்
மாதவ நன்னிலை யாக்கும் - நல்ல
மாசறு தேசிகன் பொற்பதம்போற்றி - இரக்கத் (உ௫)

கட்டுப் படுங்கன்மக் குட்டை - வருங்
காலத்தச் சன்மையால் வெட்டிடுங் கட்டை

கட்டத்தொழிலுள்ள மட்டை - இந்தத்
தூலமென் றெண்ணிக் குருவருள்போற்றி - இரக்கத் ( )

போக்கு வரவற்ற போதம் - பஞ்ச
பூதாதி யாலடங் காதெழு நாதம்
வாக்கிய லமையாத வேதம் - தன்னை
வடித்துப் புகட்டு மகத்துவைப் போற்றி - இரக்கத் (௨௭)

நரம்பு தசைதோ லெலும்பு - கொண்டு
நாட்டும் வினைகளுக் காட்டுக் கரும்பு
நிரம்புந் துயர்கொரு டம்பு - என்றும்
நில்லாதென் றெண்ணி யில்லல்லாவைப்போற்றி - இரக்கத்

ஆழித் திரளெனப் பொங்கும் - அருள்
ஆனந்தஞ் சேர்க்கு மறிவிற் கடங்கும்
நாளுக்கு நாளங்கு மிங்குஞ் - சற்றும்
நாதாந்த வேதாந்த நாதனைப் போற்றி - இரக்கத் (௨௯)

இன்றைக் கிருப்பதும் பொய்யே - இனி
இன்றைக் கிருப்பது மெய்யென்ப தையே
என்று மிருப்பது மெய்யே - என
எண்ணியெண்ணியரு ளுண்மையைப்போற்றி - இரக்கத்

பார்க்கப் பலவிதமாயும் - ஆகப்
பல்லாயிரங்கோடி யண்டம தாயும்
காக்கு நிலைக்குயி ராயும் - நின்ற
காரண பூரண நாதனைப் போற்றி - இரக்கத் (௩௧)

கரும்புசர்க் கரைகற்கண் டாலே - பாகங்
காய்ச்சி யெடுத்துத் திரட்டிய பாலே
அரும்பாவிக் கருத்துங்கை யாலே - அனைத்
தாட்கொளு நாயகன் ருள்களைப்போற்றி - இரக்கத் (௩௨)

கற்பகங்க ளுண்கிறோ மென்றே - வெறி
கஞ்சாவுங் கள்ளு மபினியுந் தின்றே
தப்புக்கெட் டலையாம லின்றே - அருள்
தூயமெய்ஞ் ஞானச் சுடரினைப் போற்றி - இரக்கத் (௩௩)

கருவி வழிதனி லோடி - யாவுங்
கால்களு மோய்ந்தும் விடாமலே தேடி
அருவிக் குயர்ந்துளம் வாட - அல்ல
யாமலெனக் கருள் வாயனைப் போற்றி - இரக்கத் (௩௪)

நசி நுனியிடை நின்று - நல்ல
நடனம் புரிவதைக் களிக்களி மென்று
வாசியி லேறிக்கொண் டின்று - காண
வைத்த குருபரா னந்தனைப் போற்றி - இரக்கத் (௩௫)

தேடிய பொருள்புதைப் போதும் - தேச
தேசங்கள் ராஜாங்க மாண்டிடப் போதும்
சடைக்கிக் கிலேயனை போதும் - செத்திய
சிறப்போடென் னேமைத் திறப்படப் போற்றி - இரக்கத்

ஆனை குதிரைக் கொட்டை - ரதம்
ஆசைபோ டெழு முடலொட லொட்டை
ஞான மிலாதகன் பொட்டை - என்ற
நாதன் குருவழி வித்தகனைப் போற்றி - இரக்கத் (௩௭)

அரச வரண்மனை கோட்டை - கூற
அன்பர் நடனம் புரிகின்ற பாட்டை
இரவும் பகன்மனச் சேட்டை - வைத்த
இன்பக் குணங்குடி யானருள் போற்றி - இரக்கத் (௩௮)

ஆனந்தக்களிப்பு முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - உ௮உ.



## நிராமயக்கண்ணி.

ஆதி முதலே யகண்டபரி பூரணமென்
றோதுங் குணங்குடிகொண் டோனே நிராமயமே. ௧

தேசிகனு மென்றே திருநடன மாடுகின்ற
வாசாம கோசரமே வாழி நிராமயமே. ௨

சுத்தத் திருவடியிற் சொக்கி யருள்பெறுமுன்
செத்திறந்து போனாலென் செய்வே னிராமயமே. ௩

கண்ணே மணியேயென் கண்ணிறைந்த காரணமே
விண்ணே மெய்ஞ்ஞான வெளியே நிராமயமே. ௪

எந்த விதமென் னிதயந் தெளிவதற்கே
பந்த வினையகலப் பாராய் நிராமயமே. ௫

இறந்தான் முதலகத்தி னென்னதியா னென்பதெல்லாந்
துறந்தானே யங்கிலையே சொல்லாய் நிராமயமே. ௬

வற்றாச் சமுத்திரமே வள்ளலே வான் பொருளே
சித்த ருளத்திற் றெளிவே நிராமயமே. ௭

உம்பர்க்கு மெட்டாதென் றொன்றிமறை யோலமிட்ட
செம்பொற் கிரியே ஜெயமே நிராமயமே. ௮

பேச்சுக் கடங்காத பேரின்பத் தேனமிர்தங்
காய்ச்சி வடித்த கடலே நிராமயமே. ௯

அந்தரத்தி னுள்ளேநின் றுடுதிருக் கூத்ததனைச்
சிந்தை யறிகிலனென் செய்வே னிராமயமே. ௧௦

மோன மவுனமணி முடிவைத்த பெட்டகமே
தேனமுத வின்பத் தெளிவே நிராமயமே. ௧௧

மண்பட்ட நெஞ்ச மயக்கமெல்லாந் தீரவருள்
பண்பட்டார்க் கல்லோ பயன்கா னிராமயமே. ௧௨

மனவாக் கனாகா மறைந்தவான் செஞ்சுடரே
இனமாதி யற்ற விறையே நிராமயமே. ௧௩

பார்க்குமிட மெல்லாம் பரிபூ ரணமாக
ஏற்கையுட னின்ற வியல்பே நிராமயமே. ௧௪

விண்ணாமுதன் மண்ணாப் விளக்கிநின்ற மெய்ச்சுடரே
கண்ணேயென் னின்பக் கடலே நிராமயமே. ௧௫

துன்புறுமென் னெஞ்சத் துயரமெல்லாந் தீர்க்கவெனக்
கன்புருவாய் நின்ற வருளே நிராமயமே. ௧௬

அங்கிங்கெனா வொண்ணா வகண்டபரி பூரணமாய்
எங்குநிறைந்த விறைமே நிராமயமே. ௧௭

நாட்டு மிருவினையு நாட்டா ருனதருளின்
றேட்டாள ரென்றதிறமே நிராமயமே. ௧௮

படர்ந்த மனக்குடியாம் பக்குவர்பா சாடவியைத்
தொடர்ந்து தொடர்ந்துவெட்டத் துணிவாய் நிராமயமே.

உத்தமர்கட் காகா வழுத்தப் புலையரேனும்
பித்தர் நெறியுளரோ பேசாய் நிராமயமே. ௨௰

பாவபுண்ணி யத்தைப் பறக்கவிட்ட பக்தர்தமக்
கேவல் விலகலிலை யென்றாய் நிராமயமே. ௨௧

முத்திதரும் வேத மொழிந்த வழிநடக்கப்
பெற்றகுருவென் பிணைகா ணிராமயமே. ௨௨

ஊத்தைப் பிணமா முடலை யிடிசுவரை
ஏற்றபடி விடுநினை நிராமயமே. ௨௩

வஞ்ச மழிந்து வருபாசம் விட்டொழிந்து
நெஞ்சந் தெளியநெறி நிற்பார் நிராமயமே. ௨௪

## ௨௨௬ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

தொந்தங் கடிந்தே சுயமனையி னல்லாலென்
புந்தி மயக்கம்விட்டுப் போமோ நிராமயமே. ௨௫

வாராக் கருணைமழை வந்துபொழிந் தாலொழியத்
தீரா மனமயக்கந் தீரே னிராமயமே. ௨௬

மாயும் பசுபாச மடிய மடியவரு
டாயனைய வின்பந் தருவாய் நிராமயமே. ௨௭

அய்யனே யென்னை யணைத்தாட்கொண் டாளவந்த
மெய்யனே நாத வெளியே நிராமயமே. ௨௮

கூருமலத்தைக் குணங்குடிபோ மன்பருக்கி
யாரை நிகரிடுவே னையா நிராமயமே. ௨௯

பித்தம் பிடித்தலையும் பேய்க்குரங்கு போற்கரணம்
புத்தி தனையலைக்கப் போமோ நிராமயமே. ௩௦

தஞ்சமெனு ஞானத் தடாகமதின் மூழ்குநற்கு
விஞ்சிய நாத விளக்கே நிராமயமே. ௩௧

ஆரிருந்தென் னார்போயென் னுயிர்க் குவந்தனையாம்
பேறுபெறச் செய்தாற் பிழைப்பே னிராமயமே. ௩௨

போகாக் கவலைப் புழுக்கமெல்லாந் தீருதற்கு
வாகா யருள்புரிய தாராய் நிராமயமே. ௩௩

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல்வைத்தால்
நேமநிஷ்டைக் கம்பம் நிலைகா ணிராமயமே. ௩௪

நின்னைச் சரண்புகுந்தா னிர்மூட மாகிவினை
யென்னத்துக் காட்கொண்ட தியம்பாய் நிராமயமே. ௩௫

சிந்தை மறிவைச் சிதையவிட்டு னருள்பெறவே
வந்தெற்குன் றிருக்கருணை வைப்பாய் நிராமயமே. ௩௬

தேனமுதே பாகு திரண்ட பெருங்கடலே
வானவர்க்கு மெட்டா மணியே நிராமயமே. ௩௭

இந்த விதய மிணங்கி வணங்கவரு
டந்தடிக்காட் கொண்ட தானூஉ நிராமயமே. ௩௮

இடம்பொரு ளேவ லெவையு மறந்தகுணங்
குடியார்க் குவமை குறியே னிராமயமே. ௩௯

ஆழாழி தானு மனேகடவா தாணை தனிற்
றாழா திலேயோவென் றுயே நிராமயமே. ௪௦

நீது நலமறியேன் நினைசநாக மற்றெவையும்
ஈதென் றறியே னெறியே னிராமயமே. ௪௧

மீளா வெளியில் விழுந்திறைந்த நீரெனவும்
பாழா யலேவது மென்பாவம் நிராமயமே. ௪௨

ஈன்றெடுத்த மாதா வெனையாட்கொண் டாள்வதென
ஆண்டணைப்ப தென்றோ வருளாய் நிராமயமே. ௪௩

சாத்திரங்க ளோதுஞ் சமுக்கர் தமக்குமருள்
மாத்திரைப்போ தேனும் வருமோ நிராமயமே. ௪௪

அய்யனே மெய்யருளி லாசையற்ற நீசனுக்கும்
உய்யுந் திருக்கருணை யுண்டோ நிராமயமே. ௪௫

காதறுங் கண்ணீராற் கரைபுரள நின்றவர்க்குச்
சூதருங் கண்ணீர் தொலையும் நிராமயமே. ௪௬

வஞ்சக் குடியிருந்து வாழு மனத்தினருக்
கெஞ்சாதிருக்கு மிரும்போ நிராமயமே. ௪௭

பற்றற்று நின்ற பரம பதத்தினருக்
கெத்தொழிலுஞ் செய்ய வியல்போ நிராமயமே. ௪௮

வாதே யகன்டகுணங் குடிவாழ வைத்தாயே
ஈதே பெருமையெனக் கென்றாய நிராமயமே. ௪௯

என்று மிருப்போமென் றெண்ணியெண்ணி யெண்ணிதயஞ்
சண்டை பிடிக்கச் சரியோ நிராமயமே. ௫0

மட்டுக்கடங்கா மயக்கமெலாந் தீர்த்துவெளிப்
பட்டோர்கட் கல்லோ பயன்கா ணிராமயமே. ௫௧

மன்னு முயிர்க்கு மறலி வரும்பொழுதில்
உன்னையன்றி யார்தா முளரோ நிராமயமே. ௫௨

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணி யிளைத்துமனம்
புண்ணாவ தற்கோ புகுந்தே னிராமயமே. ௫௩

உள்ள துரியதெல்லா மொழியா துரைத்தவெனைத்
தள்ளி விடத்தான் றகுமோ நிராமயமே. ௫௪

வன்னத் திருக்கருணை வாழுந் திருவடிக்கே
என்னத்தைச் செய்வே னெளியே னிராமயமே. ௫௫

கற்ற படிநடக்கக் கல்லாத பாவியெனைச்
சித்தந் தெளியவருள் செய்வாய் நிராமயமே. ௫௬

பேச்சற்றுச் சிந்தை பிரக்கினையு மற்றபதம்
வாய்ச்சார்க்கல் லோமவுனம் வாய்க்கு நிராமயமே. ௫௭

நிஷ்டை நிருவிகற்ப நித்திரைகொண் டேயிருக்க
அஷ்டாங்க யோகமெனக் கருளாய் நிராமயமே. ௫௮

தொல்லுலகி லல்லற் றுயரமெல்லாந் தீர்க்கவொரு
சொல்லருள வந்த ஞானையே நிராமயமே. ௫௯

மயிர்த்துணைவ ரேனு முளந்தெளியா வுலுத்தரையோர்
உயிர்க்கு நிகர்குறிக்க மாட்டே னிராமயமே. ௬0

கொல்லா விரதந்தனைக் கொள்ளாக் கொலைஞருள்ளங்
கல்லாகத் தானே கனித்தாய் நிராமயமே. ௬௧

எத்தனையோ வுத்தி யெடுத்தெடுத்துச் செய்யுமுடல்
உற்றிருக்க வுடையு நிராமயமே. ௬௨

வாயே புலம்பி வருபாடப் பேய்பிடித்த
தீயனெனச் சொன்னாலென் செய்வே னிராமயமே. ௬௩

தாயிருக்கப் பிள்ளை தளரா தொருபோது
நீயிருக்க நான்றளர நேரோ நிராமயமே. ௬௪

சொல்லுக் கடங்காச் சுகங்காண் முறவிகட்கு
நல்லறிவு சற்றே நருங்கா னிராமயமே ௬௫

மத்திபத்தி லூடே மறைந்த மணிவிளக்கை
நித்தம் விளங்கவரு வேனோராய் நிராமயமே. ௬௬

மெத்தப் படித்த பெரும்பாசப் பித்தருக்கே
சித்தந் தெளியாதென் செய்கை நிராமயமே. ௬௭

கள்ளா விருளைக் கடிந்துகளை யேறுதற்குத்
தெள்ளியவான் சோதித் திரளோ நிராமயமே. ௬௮

ஒட்டாதே யுன்னைவிட்டு மோட்டி நயமிடறில்
மாட்டாதே யான்பொறுக்க மாட்டே னிராமயமே. ௬௯

தன்னை யறிந்தாற் றலைவன் றனையறிந்த
தென்னுமொழியே யிதங்கா னிராமயமே. ௭0

ஆபியமெனைக் காப்ப தண்ணலே யுன்னுபய
முபய முபய முனதுபய நிராமயமே. ௭௧

பிரியா வுனதடியைப் பின்றொடர்ந்தார் பின்றொடர
அறியாச் சிறியேனென் னையோ நிராமயமே. ௭௨

## உ அமஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

தூர்க்குணமே கொண்ட தொழும்பனியான் றொல்லுலகிற்
சற்குணத்தா ரென்போலுங் காணே னிராமயமே. ௭௩

பொய்யுங் கவடுமுள்ளே பூட்டிவைத்த பெட்டகமாய்
நையு முடலெடுத்தே னென்கா ணிராமயமே. ௭௪

கங்குல்பக லொழிந்த காரணர்க்கோ நின்னருளைப்
பங்கு கொடுத்தாய் பகராய் நிராமயமே. ௭௫

தேறுப்ர பஞ்சத் திடுக்கமெல்லாந் தீர்ந்தவர்க்கு
மாறு வருணிலைதான் வாய்க்கு நிராமயமே. ௭௬

சருவ தயாநிதியாய்ச் சஞ்சரித்த நெஞ்சினர்க்குப்
பிரியா வருணிலைதான் பேறும் நிராமயமே. ௭௭

பாத முடிநடுவும் பக்கமுன்னும் பின்னுமற்ற
நாத வடிவே நவமே நிராமயமே. ௭௮

பேசா திடமறிந்தும் பேய்க்குரங்கு போற்கருவி
ஊசா டுவதே னுரையாய் நிராமயமே. ௭௯

எனையாட்கொண் டாளவரு மென்குருநா தன்வடிவுந்
தனையார்க்குஞ் சொல்லத் தகுமோ நிராமயமே. ௮௦

கொப்புவித்தி னுள்ளே குடியிருந்த கொள்கையென
எப்பொருட்குஞ் சித்தா யிருந்தாய் நிராமயமே. ௮௧

கூறுங் கருவி குடிபோன வன்பருக்கே
யாரும் நிகரோவென் னையா நிராமயமே. ௮௨

சிந்தை சிதையாய்ச் சிவராஜ யோகநிலை
வந்தோர்க் கருள்புரிய வந்தாய் நிராமயமே. ௮௩

கோடானு கோடிமறை கூறவறி யாதவனைத்
தேடுகின்ற தென்னேவென் றிரமே நிராமயமே. ௮௪

பிறியா வருணிலையைப் பெற்றார்பெற் றாரெனவு
மறியா வெறியனையா ளையா நிராமயமே. ௮௫

எமனாற் விடுதா தெனும்பாசக் கட்டறுத்தோர்
நமனார் தமக்கு நமனா நிராமயமே. ௮௬

துலங்கு மருண்மயத்தைத் தோன்று திருண்மயமாம்
புலனைத்தொலைப் பாயுனக்குப் புண்ணியம் நிராமயமே. ௮௭

மன்னிக்க வெண்ணா மனக்குறையுந் தாய்பொறுப்பள்
கின்ன தருளுமந்த நேரம் நிராமயமே. ௮௮

எந்த வறிவை யெடுத்தெடுத்தே யோதினுமென்
புத்தி மயக்கறுவும் போகா நிராமயமே. ௮௯

செகதூண் மயக்கச் சிதறிப் பறக்கவுமென்
றகைப்பறவோர்முத்தந் தருவாய் நிராமயமே. ௯௰

உய்ந்த துணர்வதெல்லா முயிர்க்குயிர்நீ தானெனவுஞ்
சிந்தந் தெளிந்தோர் திறங்கா ணிராமயமே. ௯௧

அனைத்துயிரு நீயென் றறிந்தார் மறப்புமுதல்
நினைக்குமா றெங்கே நிகழ்த்தாய் நிராமயமே. ௯௨

நின்செயல்களென்று னினைப்பு மறப்புமுத
லென்செயல்க ளுண்டோ வியம்பாய் நிராமயமே. ௯௩

எறும்பூரவூர விறும்புமுகற் றேய்வதுபோல்
இரும்பூரு மன்பருள மித்தலையே நிராமயமே. ௯௪

கும்பிக் கிரைதேடிக் கொடுப்பார்முகம் பார்த்திதயஞ்
சம்பித் திரியத் தகுமோ நிராமயமே. ௯௫

கடலின்மிடை கண்டதெனக் கண்ணீர் கரைபுரளும்
அடியின்முகம் பார்த்திரங்கி யருளாய் நிராமயமே. ௯௬

பருவமதுசெய்யப் படர்பயிராம் பக்குவர்க்குக்
கருவா மருணிலையே கனிகா ணிராமயமே. ௯௭

நினைப்பு முதிப்புமெலா நின்செயலென் றன்பருளன்
தினைப்போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே. ௯௮

சிவராஜயோகந் தெளிந்த திறத்தினருக்
கெவரைச் சரியிடுவே தெந்தாய் நிராமயமே. ௯௯

அந்திபக லற்ற வகண்டபரி பூரணர்க்கே
சிந்தை நிறைந்த தெளிவே நிராமயமே. ௧௦௦

வேதங்களாலும் வெளிப்படாச் சுந்தரமாஞ்
சோதியெனக் கென்றே துலங்கு நிராமயமே. ௧௦௧

எப்பொருளுந்தானா யியங்குமுனைப் பூசைசெய்யப்
புட்பமெடுக்கவுந்தான் போமோ நிராமயமே. ௧௦௨

கைப்பொருளைத்தேடிக் கடலோடிப் போவரென
மெய்ப்பொருளைத் தேடி மெலிந்தே னிராமயமே. ௧௦௩

உயிர்க்குளுயி ராயென் னுள்ளுள்ளு ளாகியநீ
தயிர்க்குளுறு வெண்ணெயெனத் தானே நிராமயமே. ()

மூடுமொளிக்கிடையா மூக்குநுனிக் கட்கிடைக்கி
னாடுந்திருநடனத் தாட்டம் நிராமயமே. ௧௦௫

நீளுங்கரணமுத னெக்குருகி மக்குநர்க்குத்
தாழா வருணிலையைத் தந்தாய் நிராமயமே. ௧௦௬

கொல்வ தற்குவந்த கொலைஞரெனப் பாவிமன
மல்லுப் பொருதுதற்கேன் வைத்தாய் நிராமயமே. ௧௦௭

பல்லுயிரும் போற்றும் பரம பதத்தினர்க்குச்
சொல்லுஞ் செயலுந் தொலையு நிராமயமே. ௧௦௮

தன்னை யறிந்தாற் றனக்கொருகே டில்லையெனச்
சொன்னமொழியே சுகங்கா ணிராமயமே. ௧0௯

புண்ணுக்கிசைந்துமனம் பூறுகின்ற வன்பருக்குக்
கண்ணீர் கரைபுரளக் கண்டாய் நிராமயமே. ௧௧0

முன்னூற்சுருதி முறையா லெனையறிந்த
வுன்னையறிதற் குளவா நிராமயமே. ௧௧௧

அண்டபகிரண்ட மகண்டபரி பூரணமாய்க்
கொண்டதின்னை யாரறிந்து கொண்டார் நிராமயமே. ௧௧௨

உன்னையன்றி வேறொன் றுளதோவுண் டாயினதை
இன்னதுவா மென்றே யியம்பாய் நிராமயமே. ௧௧௩

நெஞ்சகத்தில்வஞ்ச நெகிழாக்கட் டுண்டவருக்
கஞ்சலென்ன நீயென் னறியா நிராமயமே. ௧௧௪

தூர்க்கவலையற்ற துரியாதீ தத்தினர்க்கு
நற்கவலைதானே நடிக்கு நிராமயமே. ௧௧௫

விண்ணோடு மண்ணுமுதல் வேணதொல்லா முன்கருணைக்
கண்ணூா டிடைக்கிடக்கக் கண்டே னிராமயமே. ௧௧௬

நாய்க்கு விருந்தோ நரிக்கோ புழுக்கூடு
திக்கு விறகோ தெரியே னிராமயமே. ௧௧௭

சக்க ளெலும்புமுதலெல்லா மென்னுமுடல்
பேய்க்க டமக்குப்பெறு பேறே நிராமயமே. ௧௧௮

விண்ணுதியாவும் விளங்குவது நீயெனவென்
கண்ணூர வுங்கண்டு கண்டே னிராமயமே. ௧௧௯

இல்லாமை யில்லாதென் றிசயந் தெளிவதற்கென்
வல்லாண்மை கொண்டு வருமோ நிராமயமே. ௧௨0

## உ௬உ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

உன்னையன்றி யாவு முளதோவென் றோதியபின்
என்னையென்னத் தில்லைத் திசைப்பாய் நிராமயமே. ()

கானற்சலமாங் கவிபாசக் கட்டுண்டார்
தானுனே னென்னத் தகுமோ நிராமயமே. கஉஉ

காட்டுக் கொலைவேடன் கைக்குள்சிக்கு மானெனவு
மாட்டித் துயருறவு மாட்டே னிராமயமே. கஉ௩

கல்லுமுருகுமொரு காலத்தி லென்னிதய
அல்ல லறுவதில்லை யையா நிராமயமே. கஉ௪

காயக்கருவி கரணமுதற் காயமைத்த
நேயருளத்தி னிறைவே நிராமயமே. கஉ௫

பல்லா யிரங்கோடி பகிரண்ட மும்மையும்
எல்லா முனதடிக்கா ளென்றாய் நிராமயமே. கஉ௬

எனக்கோர் நிகருமில்லை யில்லாரில் வல்லாரில்
உனக்கோர் நிகரொருவ ருண்டா நிராமயமே. கஉ௭

செப்பஞ்செயுஞ்செயலுட் சிந்தித்தல் வந்தித்தல்
எப்போ தெனைவிட் டியங்கு நிராமயமே. கஉ௮

நீராற் றிரள்குமிழி நேயவடை யும்முடலம்
யாரார்க்குக் கைகொடுத்த தையா நிராமயமே. கஉ௯

ஒன்றாய்ப் பலவா யுருவருவா யும்முயிராய்
நின்றவனை யாரறிய நின்றாய் நிராமயமே. க௩௦

பெற்றெடுத்த மாதா பிதாக்களிருந் தாலுமெனைச்
செத்தவுடன் மண்ணிற் றிணிப்பார் நிராமயமே. க௩க

எந்தவுயிர்க்கே யெமனுய் வரும்பாச
பந்த மேகலமுகம் பாராய் நிராமயமே. க௩உ

அபயமெனைக்காப்ப தண்ணலேயுன்கடமை
உபயமினியொருவர்க்குண்டோநிராமயமே. ௧௩௩

என்னையுனடிக்கீழிசைத்தாட்கொண்டாளந்த
வின்னமேயெண்ணி மெலிந்தேனிராமயமே. ௧௩௪

நாமவத்தையற்ற நவநாதசித்தர்தமைக்
காமக்கரைபுரளக் காணேனிராமயமே. ௧௩௫

தேங்காய்க்கிளநீர் செழிப்பிற்றிரட்சிதரப்
பாங்காயருளுவதுன் பாரிராமயமே. ௧௩௬

கன்னலெனவின்பங் கனிந்தொழுகுமுன்னடிக்கென்
றன்றாலுமென்னபலன் றாயேநிராமயமே. ௧௩௭

அமையாமனமமைந்தே யருட்கடிமைப்பட்டவரை
எமனாலுமென்செயலா மெந்தாய்நிராமயமே. ௧௩௮

ஒன்றுக்குமெட்டா துறைந்தசயஞ்சோதியுப
ரண்டர்க்குமெட்டாதென் றறிந்தேனிராமயமே. ௧௩௯

வஞ்சமின்றியெனை வழிப்படுத்திவைக்கவுனை
யஞ்சலறநாளடைந்தே னையாநிராமயமே. ௧௪௰

தாயனையவின்பந் தருபேரின்பக்கடலில்
வாய்மடுக்கிற்சுகம் வருமோநிராமயமே ௧௪௧

மூன்றுமொக்கவிருந்த முச்சுடரிலேனோர்வசஞ்
சொன்றுறையாலே சாங்காணிராமயமே. ௧௪௨

அட்டதிக்குமண்விண் ணடங்கும்பெருவெளியில்
நட்டநடுவிருந்த நாதாநிராமயமே. ௧௪௩

நிர்க்கலமுதலாஞ் செய்கைசகலமைந்தால்
சதிதான்றம்போதுமெனக் கெந்தாய்நிராமயமே. ௧௪௪

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கெர்ப்பகத்திலென்னைக் கிடத்தியமுதூட்டுமுனக்
கொப்புவமையாதென் றுரைப்பேனிராமயமே. கசரு

எவ்வுலகுமேவற் கிணங்காதோரின்னருடான்
செய்விக்கப்பட்டோர்க்குச் செப்பாய்நிராமயமே. கசசா

தன்னேசம்விட்டுத்தனித்ததபோதனர்க்குச்
சென்றுழியெல்லாஞ் சிறப்பாநிராமயமே. கசஎ

சிந்தைக்கலக்கந் தீதறிவிடச்செய்வதுவே
எந்தத்தவத்திலுநன் றெந்தாய்நிராமயமே. கசஅ

தேடுவதுநாடுவதுஞ் சிந்தைத்திருநடன
மாடுவதுமுன்னடியார்க் காசைநிராமயமே. கசகூ

கண்டபகலிரவுங் காணார்க்குஞ் சூரியனு
ரென்றெழுநாமென்ன வியம்பாய்நிராமயமே. கரு௦

சத்தசவமென்றுஞ் சின்னஞ்சிறியரென்று
முத்தர்க்கிருக்கு முறைகாணிராமயமே. கருக

சட்டாசங்கண்முதற் சருவவில்லங்கசத்தி
இட்டார்க்குனதருள்வந் தெய்துநிராமயமே. கருஉ

ஆகமத்துக்கெட்டா வகண்டபரிபூரணமாம்
ஏகவெளியன்றோ வியம்பாய்நிராமயமே. கருங

தேகமுடையுமெனத் தேர்ந்தமனத்தினர்போற்
பாசபக்குவத்தைப் படையேனிராமயமே. கருச

நாழியுப்புநாழியப்பும் நாழியாந்தன்மையுமுப்
பாழெய்தினோர்க்கோ பகராய்நிராமயமே. கருரு

சொத்தோடடிமை குடியாகவென்றனையுன்
பத்தருக்கென்றோ படைத்தாய்நிராமயமே. கருசா

எந்தவுயிருமெமதுயிரென் றெண்ணியெண்ணிச்
சிந்தைதெளிவருள் செய்வாய்நிராமயமே. ௧௫௭

அந்திபகலற்ற வகண்டாதாகாரமுமென்
புந்திவெளிக்குப் புகுமோநிராமயமே. ௧௫௮

உள்ளுள்ளுயிரா யுறைந்தவுனைத்தொழுவே
பள்ளியறையேன் பகராய்நிராமயமே. ௧௫௯

மேலிட்ட வானவத்தை மெலியவிட்ட மேலவர்க்கு
மூலத்தெழுந்த முனையேநிராமயமே. ௧௬௦

மூலமுதலாறுதல முட்டிநின்றகுண்டலியின்
பாலிற்கதித்தேகப் படுமோநிராமயமே. ௧௬௧

பஞ்சசுத்திசெய்த பழவடியாரென்னவுன்னை
யஞ்சலிசெய்தேயடைந்தேனையாநிராமயமே. ௧௬௨

தொண்டர்பணிக்காளாய்ச் சுமைப்படுத்திவிட்டுவேற்
கென்றிரங்குவாய்கருணையெந்தாய்நிராமயமே. ௧௬௩

ஓவியத்தைப்போலே யுறைந்தமனத்தினையென்
னாவிக்குறுதுணையா மையாநிராமயமே. ௧௬௪

விரிந்தசரியைமுதன் மேவிநின்றமெய்ஞ்ஞானக்
கரும்புமுதற்கண்டெனவுங் கண்டேனிராமயமே. ௧௬௫

அஞ்ஞானம்விட்டே யறந்தாங்கிவந்தவர்க்கு
மெய்ஞ்ஞானந்தானே விளக்காநிராமயமே. ௧௬௬

தின்றுமுத்திப்பூண்டு திரியவெனப்பாவிமனச்
சண்டிபுரளச் சரியோநிராமயமே. ௧௬௭

எம்மாலிசைந்த விருவினையும் போகவிட்டுச்
சும்மாவிருக்கச் சுகந்தானிராமயமே. ௧௬௮

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

பாசவினையெல்லாம் மறந்திடமெய்ஞ்ஞானவைவாள்
விசவருடானே விளக்காநிராமயமே. ௧௬௯

தன்னிலிருந்த தலைவன்றனையறிய
தென்னையறிந்தென்னபல னெந்தாய்நிராமயமே. ௧௭௦

உன்னைமறப்பிக்க வுருவெடுத்தவாணவப்பேய்
தன்னைமறப்பிக்கத் தகாதோநிராமயமே. ௧௭௧

இல்லாதமாயை யெனைத்தொடராவண்ணமொரு
சொல்லருளச்செய்யென் றுரையேநிராமயமே. ௧௭௨

துர்க்குணமேகொண்ட தொழும்பனியான்றொல்லுலகிற்
கற்குணத்தரென்போலுங் காணேனிராமயமே. ௧௭௩

பொல்லாவென்னெஞ்சம் புழுங்கவருகவலை
சொல்லுக்கடங்காச் சுகநாநிராமயமே. ௧௭௪

அலையுமனத்தை யகத்தடக்குமன்பருளம்
உலையினிடுமெழுகுக் கொப்பாய்நிராமயமே. ௧௭௫

எழுகடலுமோர்சடுகி னிடையிருத்தக்கற்றாலும்
வழுவுமனத்தினர்க்கு வாயேனிராமயமே. ௧௭௬

போருக்கேவந்தெதிர்த்த போக்கிரிபோலென்னிதயம்
தீரம்பேசுவதென்ன செய்வேனிராமயமே. ௧௭௭

சோம்பேறிகள்போற் சுருண்டமனத்தினர்க்குக்
காமவிகாரங் கசப்பாம்நிராமயமே. ௧௭௮

ஒழியாப்பிரபஞ்சத் துறவைமறவார்க்குக்
கெழிற்றிற்படுநாரைக் கெதிகாணிராமயமே. ௧௭௯

புந்தியிதழவிழப் பூட்டுவிட்டபோகர்தமக்
கந்திபகலறுமென் னையாநிராமயமே. ௧௮௦

நானெனெருப்பாறு நடக்குமயிர்ப்பாலமும்யான்
றானேயெனுமுறிவைத் தாராய்நிராமயமே. ௧௮௧

மின்னனையபொய்யுடலை மெய்யென்றபொய்யரினி
என்னகதிபெறுவா ரெந்தாய்நிராமயமே. ௧௮௨

கருவிப்பெருவெளியிற் கருத்தைச்செலுத்தாருக்
கருவிசொரியவரு ளாங்காணிராமயமே. ௧௮௩

தேயாப்பஞ்சாக்ஷரவா மட்டுந்திறத்தினர்க்குக்
காயாபுரிக்கோட்டை கணங்காணிராமயமே. ௧௮௪

பூமிப்பரப்பைவலம் போய்வரினும்பாவிகளைக்
காயவினையகலக் காணேனிராமயமே. ௧௮௫

கோணற்கருப்பிரசங் கோறுதுகொள்கையென்றன்
ஆணவத்திலுந்த னறிவாநிராமயமே. ௧௮௬

கானலைநேர்பொய்யுடலைக் கல்லாகக்கண்டவர்க்கு
நாளுமைநின்றே நடக்கும்நிராமயமே. ௧௮௭

ஜலக்குமிழிபோன்றவென்றன் சிற்றுடற்குமித்தனையோ
கலக்கமதைவைத்தாயென் கண்ணேநிராமயமே. ௧௮௮

பொய்வாழ்வைநம்பும் புலையர்தமக்குனது
மெய்வாழ்வுவந்து விடுமோநிராமயமே. ௧௮௯

கனக்குமிருவினையாங் காவடியைத்தூக்குவதற்
கெனக்குமுடியாதினிமே லெந்தாய்நிராமயமே. ௧௯௦

தீறவின்றிச்செய்வினையின்றொகைப்பலனே தென்பவர்க்கு
நரகசொர்க்கமென்றே நவின்றாய்நிராமயமே. ௧௯௧

காதெருடுகண்வாய்மூக்குங் கண்டமெய்யோடையறிவும்
வாதாடுதற்கோ வளர்த்தேனிராமயமே. ௧௯௨

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

மாதாவும்பிதாவும் வருந்திவருத்திவைத்த
போதனையைப்பார்க்சிற் பிழைகாணிராமயமே. ககூங

செல்லுமளவுஞ் செலுத்துகின்றசிந்தையினோர்க்
கல்லும்பகலுமறு மையாகிராமயமே. ககூச

வேதச்சுமையதனை வீம்புக்கெடுத்தவுடன்
மாதவத்திற்கெங்கே வளையுங்கிராமயமே. ககூரு

நரம்பென்புதோலா னடிக்கின்றபாவைதனிற்
குறும்புமுதலெல்லாங் குடிகாணிராமயமே. ககூசு

நூலத்துணிச்சை தொலைத்தோரிஞ்ஞால்முதல்
ஆலத்துக்கொப்பென் றறைந்தாய்கிராமயமே. ககூஎ

வானேற நானேணி வைத்தாற்போலுன்னடிபால்
நானேறுவேனென்ற நாட்டங்கிராமயமே. ககூஅ

மைந்தர்களைப்பெற்று மறலிக்களிக்தாரெனவென்
சிந்தைநெருப்பாயெரியச் செய்தாய்கிராமயமே. ககூகூ

நாலுதிக்கிலும்விஜய நாட்டுமன்னர்கோட்டையெல்லாம்
பாலர்மணற்சோற்றின் பழியாங்கிராமயமே. உ00

பாட்டைப்படித்ததனாற் பகர்ஞானவானென்ப
தேட்டுச்சுரைக்காய்க் கியல்பாங்கிராமயமே. உ0க

நின்னதருளன்றி நிறைவுதுறைவென்பாருக்
கென்னகதிமுடிவி லெங்தாய்கிராமயமே. உ0உ

தேகாபிமானத் திரைகடந்ததேசிகர்க்கு
மோகங்களெங்கே முயலுங்கிராமயமே. உ0ங

சித்தந்தெளிந்த சிவஞானியருலகப்
பித்தாறவைப் பிடியார்கிராமயமே. உ0ச

புத்திதெளியாப் புலர்தோர்கமைத்தவத்தின்
மத்தமனுஷரென மாட்டேனிராமயமே. உ௦௫

தொல்லைப்பெருமல் ற்றெல்லைந்தாருக்கேதொன்றுஞ்
சொல்லத்தரனுண்டோநான் சொல்லாய்நிராமயமே. உ௦௬

போக்கும்வரத்துமெல்லாம் பொய்யென்றபுண்ணியர்க்கு
நீக்குமருளுண்டோ நிகழ்த்தாய்நிராமயமே. உ௦௭

எத்தனையோகற்று மிகயந்தெளியாதிருந்த
பித்தருடனேசம் பிழைதானிராமயமே. உ௦௮

வஞ்சப்பிரபஞ்ச மயக்கொழிந்தாலல்லாதுன்
அஞ்சலெனும்பொருளி னொகேனிராமயமே. உ௦௯

ஆண்டுமிருவிளைட்டே பண்டாரடிப்பவர்க்குத்
தொண்டுசெய்வார்க்கன்றே சுகங்காணிராமயமே. உ௧௦

என்னெஞ்சந்தானே யெனைச்செருக்குமின்றுமெனைச்
சின்னப்படுத்திலென்ன செய்வேனிராமயமே. உ௧௧

பூடுமெனதுநீவே மூடியிருந்தாலுமுன்
ஆடுமறிவெங்கேநின் றுடுநிராமயமே. உ௧௨

ஓடியேயுள்ளமட்டு மோடிமிகமயங்கி
வாடியேநின்சமுகம் வந்தேனிராமயமே. உ௧௩

முட்டாளெனப்பட்ட முழுதுமெனக்கியவுனக்
கிட்டமிருந்தா லியம்பாய்நிராமயமே. உ௧௪

ஆலமுழுதுந்தால மநித்தியமென்போர்க்காசை
மாலெங்கேநின்று வருங்காணிராமயமே. உ௧௫

ஆர்ப்புக்குயிரான தண்டபகிரண்டமுமாந்
தாற்பரியஞ்சொல்லத் தகுமோநிராமயமே. உ௧௬

எண்டிசையுந்தானா யியங்குமுனைத்தொழுதற்
கண்டசராசரநின் றுடும்நிராமயமே. உகஎ

காற்றுடிபோலக் கருத்துவந்துதேடி யுனை
ஆற்றுதயர்ந்தேனென் னையாநிராமயமே. உகஅ

எல்லாம்படித்துநடப் பெய்தினாரின்புற்றனர்மற்
றல்லாரையாரென் றறிதனிராமயமே. உக௯

அன்னைசுற்றமெல்லா மகலவிட்டவன்பர்தமக்
கின்னலகலுமதெவர்க்காம்நிராமயமே. உஉ0

சாருதனியன்றில்லைச் சத்தியமெம்மனத்தை
ஆராயவேண்டாமென் னாசேநிராமயமே. உஉக

தத்துமனத்தினர்க்கு தாரபலன்போகிறதை
எத்தனையென்றேயுரைப்ப தெந்தாய்நிராமயமே. உஉஉ

கொல்லுங்கொலைக்கஞ்சாக் கொலைஞனெனும்பாவிமனத்
தொல்லையைத்தீர்க்கச் சுகங்காணிராமயமே. உஉ௩

உன்னையின்றியென்னை யொதுக்கிவைப்பதெந்தநெறி
அன்னையின்றிச்சேய்தானுண் டாமோநிராமயமே. உஉச

பொங்குகருணைப் புறச்சுழித்தார்கள்ளமனா
வங்கமெங்கேயோடி வருங்காணிராமயமே. உஉரு

கல்லாதகல்வியெல்லாங் கற்றுமுயர்ஞானகலை
இல்லார்க்குமின்பமிலை யேதோநிராமயமே. உஉசு

விளக்குஞ்சுடரினையும் வேறுவேறெண்ணுறுக்
குழக்குளப்புமுப்பெனவு மொன்றுநிராமயமே. உஉஎ

சார்ந்தோரைத்தூடணிக்குந் தப்பிலிகளைப்புவியில்
என்றுன்படைத்ததுதா னெந்தாய்நிராமயமே. உஉஅ

புத்தியகங்காரம் பூணுமனமிறக்கிற்
சித்தமகத்துவத்தைச் சேரும்கிராமயமே. ௨௨௯

நாதனேதிருவடியை நாடுவதுந்தேடுவதும்
ஆனாலதுபெரிதா மையாகிராமயமே. ௨௩0

காற்றுத்துருத்தியைத்தான் கள்வர்புலைக்குடிலை
சோற்றாலெடுத்த சுவர்காணிராமயமே. ௨௩௧

மன்னுங்கலைஞான மார்க்கமறிந்தோர்க்குமுறும்
அந்நியங்களோது மதியார்கிராமயமே. ௨௩௨

ஜென்னிக்கிசையா சிவராஜயோகநிலை
வன்னமலர்ப்பதத்தை வைத்தேனிராமயமே. ௨௩௩

ஜென்மமெடுத்தாற் ஜெகமாயைவிட்டொழிந்து
நன்மைபெறாத நயங்காணிராமயமே. ௨௩௪

பாசமறவார் பரமபகத்தினர்போற்
பேசிலவர்கூடவும்நான் பேசேனிராமயமே. ௨௩௫

நேராய்வழிகாட்டி நிச்சயத்தைச்சொல்லுவெனக்
காருணியன்றி யாரேனிராமயமே. ௨௩௬

வாசகத்தின்ஞானமெல்லாம் வந்ததுபோற்பேசியையோ
மோசப்படவு முறையோகிராமயமே. ௨௩௭

பெட்டிநிறையப் பெருக்கிவைத்தபெட்டகத்தாற்
குட்டிச்சுவரென்றே குறித்தாய்கிராமயமே. ௨௩௮

மண்ம்பாசமற்றுநிற்க வாயாலுனைப்புகழும்
இனங்கள்முழுதுமெனக் கெதிர்காணிராமயமே. ௨௩௯

வாசனையைப்போக்கும் வழியுண்டெனவொருசொல்
நேசருக்குமுண்டோ நிகழ்த்தாய்கிராமயமே.. ௨௪0

அன்னைபிதாவு மணைந்தகுற்றவாக்கினைக்கா
என்னைப்பிறக்கவைத்தா யெந்தாய்நிராமயமே. உசக

மாதாபிதாவு மயதீர்ந்தவாற்றினுக்கு
வாதோயென்னைப்பிறக்க வைத்தாய்நிராமயமே. உசஉ

பின்னையொருவர்செய்யும் பிழைக்குப்பரிகாரம்
என்னைத்தெருவில்விட்ட தேன்காணிராமயமே. உசங

தொண்டரசைகொண்டோர் துயிலார்முகத்தணைக்கக்
கண்டுயிலானப்ரெனக் கண்டாய்நிராமயமே. உசச

ஈனத்துக்கேற்றவுட லென்னதென்னதென்பதுவும்
ஞானத்துக்கேற்றவர்க்கு நன்றோநிராமயமே. உசரு

ஆசைக்கடலினலைவாய்ப்பட்டேயலைந்து
மோசப்படுதன் முறையோநிராமயமே. உசசா

எட்டிரண்டுமின்னதென்று மேன்மையறியாதபடி
வெட்டவெளிப்பேதையென விட்டாய்நிராமயமே. உசஎ

பித்தம்பிடித்த பிரபஞ்சத்தார்போலன்றோ
முத்தர்க்கிருக்கு முறைகாணிராமயமே. உசஅ

காமக்குரோதமத மாச்சரியக்காரருக்கே
ஆமோதருக்கருணை யையாநிராமயமே. உசகூ

ஜெகத்துமயமாயுந் தேஜோமயமாயும்
அகத்தூடனுவான தன்றோநிராமயமே. உருo

தேசாதிபாசமுதல் கெர்ப்பக்குவட்டில்வைத்த
ஈசாவுனக்கே யியல்பாம்நிராமயமே. உருக

எக்கலைக்குஞ்சொக்கா தியங்குனைத்தொழுதல்
திக்கலைகளெல்லா நிலைகாணிராமயமே உருஉ

அகத்துவிழியு மதிகற்கரிதாயவன்பால்
முகத்துவிழியா முயலும்நிராமயமே உ௫௩

திக்குவிஜயர்ஞ் சிவராஜயோகியர்க்காந்
தாக்கவலைபோர்க்குத் துறைபோநிராமயமே. உ௫௪

வாழுகிறோமென்றே வலக்காரம்பேசிலையோ
ஏழாம்நரகுக் கிரைகாணிராமயமே உ௫௫

ஈடெனக்காரென்றே யெதிர்பேசமட்டியுடல்
நீடூழிகால நிலையோநிராமயமே உ௫௬

பாகாய்க்கசிந்துருகும் பரமபதத்தினர்க்குத்
தேகாபிமானமெல்லாந் தீயுநிராமயமே உ௫௭

ஆவியுடல்பொருளு மடங்கக்கொள்ளைகொண்டுனைப்
பாவியென்றுதள்ளப் படுமோநிராமயமே உ௫௮

அளந்தாலுமிந்தவுல கவ்வளவுமெவ்வளவும்
உளந்தெளியாருக்குடா லுண்டோநிராமயமே உ௫௯

சொன்னபடிக்கிணங்காத் துட்டன்யானாலுமுன்
வன்னமலர்ப்பதத்தை வைப்பாய்நிராமயமே உ௬௰

பாதமுடியின் பரமார்த்தமானவனைக்
கேதுவடிவென்றே யிசைப்பேநிராமயமே உ௬௧

*முன்னானிருந்த முறைபோலுமூர்த்திகராய்
ஏந்நாளவருவதெனக் கெந்தாய்நிராமயமே உ௬௨

மடக்கெடுத்துவீசி மணல்குடிக்கநீரதனால்
கடற்குறையுண்டோவென் கண்ணேநிராமயமே உ௬௩

தானேதானெவ்வுயிர்க்குத் தற்பதமாய்நிற்பதுடல்
ஊனூறிக்கொண்ட வுளவேநிராமயமே உ௬௪

பாசமொழித்துநெறி பத்திநின் றவித்தகர்க்கு
வீசுந்திருக்கருணை வீசும்நிராமயமே ௨௬௫

கறறகலவியறறுக் கன்மமுதல்பாசமற்ற
உத்தமர்க்குச்சித்த மொடுங்குநிராமயமே ௨௬௬

சித்தநிராஞ்சனத்திற் சென்றிருக்கவல்லார்க்குப்
புத்திநிருவிகற்பம் பூணும்நிராமயமே ௨௬௭

நீட்டிக்குறுக்க நெடும்பகையென்பாரதுபோற்
காட்டிமறைக்க கண்ணேநிராமயமே. ௨௬௮

கற்பூரவுண்டை கரைவதுபோலக்கலையுந்
தற்போதகர்க்கருளைத் தந்தாள்நிராமயமே ௨௬௯

தேனோடுபாசாய்த் திரண்டமுதமென்னவுமென்
னூனோடுடலோ டுறைந்தாய்நிராமயமே ௨௭0

கண்டித்தவெள்ளுங் கரும்புப்போலும்மெனது
சண்டித்தனமெய்தற்குச் சார்ந்நிராமயமே ௨௭௧

ஐந்துபுலவேடருக்கே யாளாக்கினேனுனக்கு
வந்தபலனென்னே வழுத்தாநிராமயமே ௨௭௨

ஓயாக்கவலைக் குரித்தாய்ப்புழுக்குரம்பை
ஆயேயெனவகுத்த தையாநிராமயமே ௨௭௩

ஐவர்க்குமென்னை யடங்கச்சிறையாக்குவது
முய்யுங்கருணைக் குளதோநிராமயமே ௨௭௪

ஊசிதனைக்காந்த முகந்தனைக்குமாறெனவே
பாசத்தைப்போக்கியருள் பாராய்நிராமயமே ௨௭௫

உள்ளந்தெளிந்தே யொளியாய்ப்பிறங்கினர்க்குக்
கள்ளந்தெளியக்கனவு கண்டேநிராமயமே ௨௭௬

அற்புதமேசிற்குணமே வன்பர்க்கருள்புரியுஞ்
சற்குருவேயெங்கள் சலுவேநிராமயமே ௨௭

அழியாவருள்வாரி யள்ளியடியேன்றனக்கா
மழையாய்ப்பொழிந்தாய்நீ வாழிநிராமயமே ௨௮

முத்தர்க்கும்வாழியெங்கள் முன்னோர்க்கும்வாழியருள்
வித்தகர்க்கும்வாழியெங்கும் விளக்காய்நிராமயமே ௨௯

ஒழியாவருள்வாழி யுத்தமர்களும்வாழி
அழியாப்பதிவாழி யைய நிராமயமே ௩௰

குன்றாக்குணக்குடிகொண் டோராமெய்வித்தகரும்
என்னாளும்வாழிய நிறைந்தாய்நிராமயமே ௩௰௧

நிராமயக்கண்ணி-முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௩௰௧.

## பராபரக்கண்ணி



அண்டபுவனமென்று மாடுதிருக்கூத்தினையான்
கண்டுமகிழ்ந்திடவே காட்டாய்பராபரமே ௧

ஆதியாயண்டவனா யனந்தவாய்நின்றபெருஞ்
சோதியாய்நிர்மலமாய்ச் சூழ்ந்தாய்பராபரமே ௨

வேதமறைப்பொருளை வேதாந்தத்துட்கருவை
ஓதியுனையறிந்தா ருண்டோபராபரமே ௩

அண்டம்புவனமுட னாகாசமென்றுநம்பிக்
கொண்டாடுமெஞ்ஞானக் கூத்தேபராபரமே ௪

நாவார்புகழ்க்கெட்டா நாயகனேநாதாந்தப்
பூவாய்மலர்ந்திருக்கப் பூத்தாய்பராபரமே ௫

பேரற்பெரிய பெரும்பொருளேபேதைதனக்
காராரிருந்தம்பல னாமோபராபரமே ௬

மாராயநற்கருணை மாரிவருஷித்திடவே
பாராபோவையா பகராய்பராபரமே ௭

ஆனாலுமுன் பாதம் ஆசித்திருப்பதற்குத்
தானாயிரங்கியரு ளாராய்பராபரமே ௮

நாதாந்தமூல நடுவீட்டுக்குள்ளிருக்கு
மாதவத்தோர்க்கான மருவேபராபரமே ௯

உடலுக்குயிரேயென் னுள்ளமேயுன்பதத்தைக்
கடலுமலையுந்திரிந்துங் காணேன்பராபரமே ௧௦

மந்திரத்துக்கெட்டா மறைப்பொருளேமன்னுயிரே
சேர்ந்தவெழுதோற்றத்தின் சித்தேபராபரமே ௧௧

தனியேனுக்காதரவு தாரணியிலில்லாமல்
அனியாயமாவதுனக் கழகோபராபரமே ௧௨

ஓடித்திரிந்தலைந்து முன்பாதங்காணாமல்
வாடிக்கலங்குகிறேன் வாராய்பராபரமே ௧௩

தூராதிதூரந் தொலைத்துப தினுன்பாதம்
பாராதபாவத்தாற் பயந்தேன்பராபரமே ௧௪

தேடக்கிடையாத திரவியமேதேன்கடலே
ஈடுனக்குமுண்டோ விறையோபராபரமே ௧௫

அரியபெரும்பொருளே யன்பாயொருவார்த்தை
பரிபூரணமாய்ப் பகராய்பராபரமே ௧௬

ஐயோவெனக்குதவு மாதரவைவிட்டுவிட்டுத்
தையலரைத்தேடித் தவித்தேன்பராபரமே ௧௭

எத்திசையுநோக்கி யிசையாத்திருக்கூத்தாய்
வித்தைத்விளையாட்டு விளைப்பாய்பராபரமே கஅ

எப்பொழுதுமுன்பதத்தி லென்கருத்தேயெய்துதலுக்
கிப்பொழுதேகைப்பிடித்தா ளிறையேபராபரமே ககூ

வாதுக்கடரவரும் வம்பரைப்போற்றேருஷிமனம்
ஏதுக்கடர்வதியா னெளியேன்பராபரமே உ0

தூண்ணேமனோன்மணியே கண்பார்வைக்கெட்டாத
விண்ணடங்காவெட்ட வெளியேபராபரமே உக

அடக்கவரிதா மாயிரம்பொறியைக்கட்டிப்
படிக்கப்படிப்பெனக்குப் பகராய்பராபரமே உஉ

எத்தவங்கள்செய்தாலு மின்பமுடனுன்பதத்தை
முத்தரொருபோது முற்றார்பராபரமே உங

சொல்லுக்கிணங்காத சூத்திரத்தைப்பார்த்திருக்க
அல்லும்பகலுமெனக் காசைபராபரமே உச

நாற்றச்சடலமதை நம்பார்முகந்திருக்கப்
பூத்துமலர்ந்திருக்கும் பூவேபராபரமே உரு

சோற்றுப்பொதியைச் சுமந்தேகுரிந்தலைந்தே
ஆற்றுமனின்றுகளைத் தாழ்தேன்பராபரமே உசு

காற்றுத்துருத்திதனைக் கல்லாயணைந்திருக்கச்
சூத்திரமாய்நின்றாய் சுழியேபராபரமே உஎ

கோலத்திருவடிவு கோதையர்களாசையினால்
ஆலைக்கரும்புபோ லானேன்பராபரமே உஅ

கேளாயோவென்கவலை கேட்டிரங்கியுமைதனை
ஆளாயோவையர்பா லானேன்பராபரமே உகூ

## ௨௬௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

எத்தனைதான்குற்ற மெதிர்த்தடிமைசெய்தாலும்
அத்தனையுநீபொறுப்ப தழகோபராபரமே ௩௰

அல்லல்வினையா லறிவுகெட்டவான்மாவாய்
நெல்லும்பதருமென நின்றேன்பராபரமே ௩௧

சொல்லறியஞானக் கடலேயொருவார்த்தைத்
செல்வம்பொழிந்திடநீ செப்பாய்பராபரமே ௩௨

சித்தமுனைத்தொழா நிர்மூடனாயிருக்கும்
பித்தனேயென்காண பிறந்தேன்பராபரமே ௩௩

உற்றார்களாலு முறவின்முறையோராலும்
பெற்றார்களாலுமுனைப் பிரிந்தேன்பராபரமே ௩௪

ஏழைமுகம்பார்த் தெளியேனையெப்பொழுதும்
ஆழாமலாண்டருளென் னழகேபராபரமே ௩௫

பாவவுடலெடுத்துப் பாதகனாயான்பிறந்துள்
ஆவிகெடுவதனக் கழகோபராபரமே ௩௬

வாராயோவென்னிடத்தில்வந்தொருக்காலென்றன்முகம்
பாராயோசற்றே பகராய்பராபரமே ௩௭

பார்க்கப்பலவிதமாய்ப் பல்லுயிருக்குள்ளிருந்தும்
ஆர்க்குந்தெரியாம லானாய்பராபரமே ௩௮

ஆனாலும்பொல்லா தரும்பாவியாகவுடல்
ஏனெடுத்தே னெந்தாய்பராபரமே ௩௯

கர்ப்பூரதீபக் கனலொளிபோற்காட்சிதர
முப்பாழும்பாழாய் முடித்தாள்பராபரமே ௪௰

கருப்பேதகவாசமே சடலமுதேகண்மணிக்குள்
அரும்பொருளாய்நின்ற வழகேபராபரமே ௪௧

ஏழையடியேனை யெப்படியுங்கைபிடித்தே
ஆளாதிருப்பதுனக் கழகோபராபரமே சஉ

ஆளாயோவையா வடியேன் பிதற்றுதலைக்
கேளாயோவென்றன் கெதியேபராபரமே சங

ஊனாகியுள்ளுயிரி லொட்டாதலக்கருவாய்த்
தானாகிநின்ற தனுவேபராபரமே சச

பொன்னான்மயக்கெடுத்துப் புத்திகெட்டுநானனவே
பன்னாளுநின்றேற் பலையேபராபரமே சரு

இல்லல்லாகூவென் றெனைமறந்துகொண்டுனைபே
சொல்லவருண்மெய்ஞ்ஞானச் சுடரேபராபரமே சசா

ஐயோவடிமைதனக் காரிருந்துமென்னபலன்
கையாற்கவிழ்த்தணைக்கக் காணேன்பராபரமே சஎ

ஆனாலுமேழை யடியேனுக்காதரவாய்த்
தானாயிரங்கியருடாராய்பராபரமே சஅ

தூங்கியிருந்தா தொழுவோர் முகம்பார்க்கும்
வேங்கைப்புலியாக்கு விப்பாய்பராபரமே சகூ

கண்ணேகருத்தேயென் கண்மணியேகண்ணிறைந்த
விண்ணடங்காவெட்ட வெளியேபராபரமே ருO

காசாசைகொண்டு கலங்கியேகெட்டலைந்த
தோஷியாய்நின்றேன் றுணையேபராபரமே ருக

ஐயோவெனத்துய ராரிடத்திற்சொல்லிநின்று
கையெடுக்கப்போறேனென் கண்ணேபராபரமே ருஉ

என்னதான்செய்திடுவே னென்விதியைச்சொல்லியழ
வுன்னையன்றிவேறெனக்கு முண்டோபராபரமே ருங

கள்ளக்கருத்துகளைக் கட்டோடறுத்தவருக்
குள்ளிருக்குமெய்ஞ்ஞான வொளியேபராபரமே ௭௮

தும்பிக்கிரைவிரும்பிக் கொடுப்பார்தமைதேடிச்
சம்பித்திரிந்தே சலித்தேன்பராபரமே ௭௯

காண்காதவாசை கடித்தாலென்காண்முகமும்
வீங்காதோவையா விதியேபராபரமே ௮௦

தூங்காமற்றூங்கித் தொழுதிருந்தாலென்னுடைய
ஆங்காரமெல்லா மகற்றாய்பராபரமே ௮௧

தேனாமிர்தமூறத் திவ்யமதாஞ்சொரியத்
தானாவொருவார்த்தை தாராய்பராபரமே ௮௨

சாத்திரங்களோதுஞ் சதுர்மறையோர்க்கெட்டாத
சூத்திரமாய்நின்ற சுழியேபராபரமே ௮௩

வேற்றொருவர்காணாத வேதாந்தத்துட்பொருளைப்
பார்த்தோர்கட்கெய்தும் பலனேபராபரமே ௮௪

சாதிசனத்துடனே சார்ந்திருந்துபட்டதுயர்
போதும்போதும்போதும் போதும்பராபரமே ௮௫

உற்றாரைநம்பியிருந் தொருபலனுங்காணாமற்
செத்தாலெனக்கதுதான் சின்னம்பராபரமே ௮௬

செல்லுமுறையறிந்து சித்திமழிநாணாமற்
கல்லுமாய்போலானேன் கணணேபராபரமே ௮௭

ஓகோவுனையறிந்து மொருபலனுங்காணாமற்
போகாமற்காத்தருளென் புனையேபராபரமே ௮௮

உன்னையறிவதற்கோ வுடலெடுத்தேனென்றென்னைச்
சின்னஞ்சொல்லுவார்கட் கென்செய்வேன்பராபரமே

தெரியாதவின்பத் தெளிவாயருண்மயமாய்
பரிபூரணமுடனை பராய்பராபரமே ௯௰

ஆச்சிதனைத்தேடி யாசைவைத்தலையாமற்
பூச்சியாயேனே பிறந்தேன்பராபரமே ௯௧

காசைவிரும்பிக் கலங்கித்திரிந்துன்பாத
ஆசைவிரும்பா தலைந்தேன்பராபரமே ௯௨

சூகாமற்செத்துதயச் சச்சிதானந்தமயப்
பாகமாயாகமுகம் பாராய்பராபரமே ௯௩

வாராயோவையர் வந்திரங்கிக்கொண்டணைக்கப்
பாராயோசற்றே பகராய்பராபரமே ௯௪

ஆசைவலைப்பாசபொறி யத்தனையுங்கட்டறுத்து
வாசிதனிலேற்றியெனை வைத்தாள்பராபரமே ௯௫

வேஷந்தனைப்போட்டு வேதாந்தசாத்திரத்தைக்
காசுபணம்பறிக்கக் கற்றேன்பராபரமே ௯௬

செய்ததெல்லாங்குற்றஞ் சிறியேன்றனக்கிரங்கிக்
கைதூக்கிக்கொண்டருளென் கண்ணேபராபரமே ௯௭

மாளாமயக்கறுத்து மனக்கறையைத்தான்கழுவி
ஆளாக்கிக்கொள்வாயென் னையாபராபரமே ௯௮

நாட்டமங்குமிங்கிருக்க நாதாந்தமுத்திநிலை
கூட்டாயனைந்தருளென் கண்ணேபராபரமே ௯௯

சிந்தைதனைத்தெளிந்து சித்திமுத்திபெற்றுயர்ந்த
உன்றன்குணக்குடியார்க் குயிரேபராபரமே ௪00

பராபரக்கண்ணி முற்றுப்பெற்றது.

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

## றகுமான் கண்ணி

பார்க்கப்பலவிதமாய்ப் பல்லவண்டங்கன்னையடை
காக்குந்திருக்கருணைக் கண்ணே றகுமானே க

ஈறுமுதலுமற்றே யியங்குகின்றபூர்வடமாய்க்
காரணிக்குபூரணமே கண்ணே றகுமானே உ

பாணிக்கவொண்ணுப் பதம்பெறுதற்கென் சிரசைக்
காணிக்கைவைத்தேனென் கண்ணே றகுமானே ௩

பொய்யடிமையாயினுமுன் பொன்னடிக்காளாக்கியென்னைக்
கையைக்கொடுத்தணைத்தாள் கண்ணே றகுமானே ச

பெண்டுபிள்ளையென்றே பிதற்றுதல்பொய்யல்லாமற்
கண்டபலனென்றுமில்லைக் கண்ணே றகுமானே ரு

பேதலித்தேனுன்னடிமை பேதகமில்லாமனுனைக்
காதலித்தேனுண்டருள்செய் கண்ணே றகுமானே சு

ஏகப்பெருவெளியி லிருட்கடலிற்கம்பமற்ற
காகமதுவானேனென் கண்ணே றகுமானே எ

ஐயோவுனதருளி லாசையற்றபாவியென்னைக்
கையைநெகிழ்த்தாதருளென் கண்ணே றகுமானே அ

போதமயமாகவெங்கும் பூரணித்தகாரணத்தைக்
காதலித்துநின்றேனென் கண்ணே றகுமானே கூ

எல்லார்க்குமுதளிக்கு மியல்புபோற்றேரைகட்கும்
கல்லுள்ளமுதளிக்குங் கண்ணே றகுமானே க0

சொல்லும்பதர்நீக்கிச் சும்மாவிருந்தருளைக்
கல்லாருங்கல்லேயென் கண்ணே றகுமானே கக

வெட்டவெறுப்பாவியென்ன வீணிலெனைத்தள்ளாமற்
கட்டியணைத்தாண்டருள்செய் கண்ணேறகுமானே ௧௨

யானைரதமேறு மரசர்பெருவாழ்வுறுதற்
கானற்சலைப்போலவோ கண்ணேறகுமானே ௧௩

எவருடைமையுமெடுத்திட்டென் றுடைமையென்பவர்க்குக்
கபுறில்வருந்துணையோ கண்ணேறகுமானே ௧௪

ஊனெடுத்ததாண்முதலா வுபயோகமற்றயான்
கானினிலவானேனென் கண்ணேறகுமானே ௧௫

வாசிதனிலேறி மனமகிழ்ந்துலாவாமற்
காசாசைகொண்டேனென் கண்ணேறகுமானே ௧௬

வீடோவென்றேசம் விரும்பிடந்தான்வீதிகளோ
காடோசெடியோவென் கண்ணேறகுமானே ௧௭

பாகமுடன்வளர்த்த பாழுடலுழுவுக்கிரையோ
காகங்கழுக்கிரையோ கண்ணேறகுமானே ௧௮

எங்காமலங்குமிக்கு மேகாந்தமாகவுனைக்
காண்தவந்தபாங்கருள்செய் கண்ணேறகுமானே ௧௯

தொண்டுசெய்யநின்ற துறவியர்களேயருளைக்
கண்டுகொள்ளக்கண்டாயென் கண்ணேறகுமானே ௨௰

அல்லும்பகலு மடுமைமனந்தேம்புதற்குக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணேறகுமானே ௨௧

வேட்டைபெரிதென்றே வெறிநாயைக்கைபிடித்துக்
காட்டிற்புகலாமோவென் கண்ணேறகுமானே ௨௨

அடைத்தமனக்காட்டை யாளுமைந்துகள்வரையுங்
கடத்தமுடிவதில்லைக் கண்ணேறகுமானே ௨௩

மடம்புகுநாய்போல மயங்குமென்னையுன்னைவிடக்
கடத்துநரைக்காணேனென் கண்ணேறகுமானே ௨௪

வையம்பொய்யென்றே மறையோலமிட்டதெல்லாங்
கையுமெய்யுமாச்சுதென்றன் கண்ணேறகுமானே ௨௫

சொல்லருமெய்ஞ்ஞானச் சுடரொளிகண்டாலென்மனக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணேறகுமானே ௨௬

மாதாபிதாவுமென்னை மயக்கிமயக்கியுன்னைக்
காதலிக்கவொட்டாரென் கண்ணேறகுமானே ௨௭

வெற்றிதருமெய்ப்பொருளை வேதாந்தத்துட்கருவைக்
கற்றோர்க்கருள்புரியுங் கண்ணேறகுமானே ௨௮

உடையாபரணமென வுன்னியுன்னிப்பாவிமனங்
கடைபடலாமோவென் கண்ணேறகுமானே ௨௯

ஓயாக்கவலையிறை யுள்ளிடைந்துவாடுதற்கோ
காயமெடுத்தேனென் கண்ணேறகுமானே ௩௦

நேசம்வைத்ததுன்னடிமை நின்பாதத்திற்கல்லாது
காசுதனக்கோவென் கண்ணேறகுமானே ௩௧

எண்ணாதவெண்ணமெல்லாமெண்ணியெண்ணியுன்னடிமை
நண்ணிக்குட்டிட்டானேன் கண்ணேறகுமானே ௩௨

பொய்யெடுத்தானென்று புரக்கணித்தாயாகிலெனைக்
கையணைப்பாருண்டோவென் கண்ணேறகுமானே ௩௩

விண்ணோர்காணா விரிகருணைச்செஞ்சுடரைக்
கண்குளிரத்தந்தருள்செய் கண்ணேறகுமானே ௩௪

தங்குபேரின்பமதைச் சார்ந்தருநாதனுக்கே
தங்குல்பகற்றானுமென் கண்ணேறகுமானே ௩௫

தாங்காமற்றாங்கித் தொழுதுதொழுதுன்னருளைக்
காண்கவெனக்கருள்செய் கண்ணேறகுமானே ௩௬

இன்றுள்ளோர்நாளைக் கிருப்பதுபொய்யென்பதையான்
கண்டுகொண்டேனையாவென் கண்ணேறகுமானே ௩௭

பிற்றற்றுருத்திதனைப் பிக்குழியைச்சாக்கடையைக்
காத்தேன்வளர்த்தேனென் கண்ணேறகுமானே ௩௮

போதத்தனம்புதைத்த புல்லர்க்கிருப்பூசி
காதற்றதுமலருமோ கண்ணேறகுமானே ௩௯

பாடிப்படிந்தரிந்தும் பற்றறார்பாசமலைக்
காடுகொண்டுபோவாரென் கண்ணேறகுமானே ௪0

நிறைந்தபரிபூரணமே நிர்க்குணமேநிர்மலமே
கருணைக்கடலேயென் கண்ணேறகுமானே ௪௧

பார்ப்பாயோவென்றன்முகம் பாவியாகாமலென்னைக்
காப்பாயோவையாவென் கண்ணேறகுமானே ௪௨

மெய்யெடுத்தான்முதலா மெய்யறியாப்பாவியெனைக்
கைவிடவேவேண்டாமென் கண்ணேறகுமானே ௪௩

சோற்றுப்பொதியைச் சுமந்தேயலைந்துசுழற்
காற்றுத்துரும்பானேனென் கண்ணேறகுமானே ௪௪

சேர்ந்தசுற்றந்தன்னைச் சிதறவிட்டசிந்தையர்க்குக்
காந்தமலையேயென் கண்ணேறகுமானே ௪௫

உலையிலிடுமெழுகி னொப்பாகவென்றனுள்ளம்
கலைதல்தகாரியமோ கண்ணேறகுமானே ௪௬

ஆவிதனைக்குரங்கா யாட்டுகின்றவையறிவைக்
காவலிடவருள்செய் கண்ணேறகுமானே ௪௭

வேஷந்தனைப்போட்டுமெய்ம்மயக்குப்பொய்க்குருவாய்க்
காசுபணம்பறித்தேனென் கண்ணேறகுமானே ௪௮

## உறிஅயஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

எட்டிப்பிடிக்கும் விதமறிந்தாலுன்பதத்தைக்
கட்டிப் றிடுவேன் கண்ணே றகுமானே ௪௯

அவிய விய வாயுங்கலையோர்கடமைக்
கவியு க்கருணைக் கண்ணே றகுமானே ௫0

சித்திர வேதாந்தச் செழுஞ்சுடரைர்கி மயத்தைக்
கற்றவா முதலிதருங் கண்ணே றகுமானே ௫௧

அருவிலெ ரியும்படிக் கம்பாத்திலன்புலைந்தாற்
கருவிபி தன் கண்ணே றகுமானே ௫௨

மாராய ளா மருங்கமிழ்ந்தகின்கருணைக்
காரார் ழுவொழியுங் கண்ணே றகுமானே ௫௩

எண்ப ண்ணமெல்லாமெண்ணியெண்ணிநெஞ்சமொ
ரு, கண தலங்குவதோ கண்ணே றகுமானே ௫௪

கோல றிபில்லாக் குருவடிதொழார்கண்மனங்
காலனி பிடமோ கண்ணே றகுமானே ௫௫

உள்ளுயி னுள்ளே யுறைந்தபரஞ்சோதிவரிற்
கள்ளம துள்ளாதென் கண்ணே றகுமானே ௫௬

சேர்க்கு வியமுஞ் சித்ரமணிமண்டபமுங்
காக்கு யோவென் கண்ணே றகுமானே ௫௭

பட்டு மாப்பனையும் பாதகமுமென்னைவிட்டுக்
கட்டோ டாழிவதிலைக் கண்ணே றகுமானே ௫௮

எண்ணு வண்ணமெல்லா மெண்ணுதிருக்குமனங்
கண்ணு குண்முகமாங் கண்ணே றகுமானே ௫௯

மண்டபமுந்தண்டிகையு மாளிகையுஞ்சாளரமுங்
கண்டெபூிங்கவருள் கண்ணே றகுமானே ௬0

மன்னுங்கருணை மவுனமணிப்பெட்டகத்தைக
கன்னமிடப்போமோவென் கண்ணேறகுமானே ௬௧

என்றுமன்னைச்சுற்றமுதலெனக்குப்பழிகாரரெனக்
கண்டறிந்துகொண்டேனென் கண்ணேறகுமானே ௬௨

கொடியமனத்துயரைக் கூடாதிருப்பவர்க்குக்
கடுகமுடுகிவருங் கண்ணேறகுமானே ௬௩

மெச்சுமதிமயக்கு மில்லார்களாலுடைந்தேன்
காய்ச்சிரட்டையானேனென் கண்ணேறகுமானே ௬௪

விள்ளரியவேதம் விறைவுதலையுங்கடிந்து
கள்ளமனத்துள்ளுவதேன் கண்ணேறகுமானே ௬௫

வேதக்கருவை விளைகருணைக்குஞ்சரத்தைக்
காதலித்தேனுதரித்தாள் கண்ணேறகுமானே ௬௬

அரும்பேமலரேயென் னாசைதரும்வாசனையே
கரும்போரசமேயென் கண்ணேறகுமானே ௬௭

பூரணமேயற்புதமே பொங்குகருணைக்கடலே
காரணமேயென்றனருட் கண்ணேறகுமானே ௬௮

ஓயாதோவென்கவலை யுன்னருளாலென்கருவி
காயாதோவையாவென் கண்ணேறகுமானே ௬௯

ராஜாங்கம்வேண்டி ரதகஜங்களேறுதற்குக்
கங்கெசங்குங்கேளேனென் கண்ணேறகுமானே ௭௰

தந்தைதாயென்றே தயங்குகின்றபாவிமனக்
கண்டிறக்கவந்தருள்செய் கண்ணேறகுமானே ௭௧

அச்சமெம்மாகிலில்லையென வைம்புலனென்பாழ்மனதற்குக்
கைச்சுரையாயூயிடன் கண்ணேறகுமானே ௭௨

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

இனியவமிர்தம்பொங்கி யெங்குங்கரைதந்திலாக்
கனிவாய்திறந்தருள்செய் கண்ணேறகுமானே ௭௩

ஆணையிட்டேஞணையிட்டே னையனேயுன்னருளைக்
காணவெனக்கருள்செய் கண்ணேறகுமானே ௭௪

அல்லும்பகலு மறிவிலயமாவோர்க்குக்
கல்லும்பிளந்திடுமென் கண்ணேறகுமானே ௭௫

புவியுமெழுவானும் பொன்னுலகும்பல்லுயிருங்
கவியுந்திருக்கருணைக் கண்ணேறகுமானே ௭௬

எண்ணரியதாக விருந்தாடுஞ்சூத்திரமோ
கண்ணிலொளிபாய்ந்ததுவோ கண்ணேறகுமானே ௭௭

உழையோவழுக்கோவென் னுள்ளங்கழுவக்கழுவக்
கழுவாத்தொடக்கோவென் கண்ணேறகுமானே ௭௮

உற்றகிளைத்திரையு முறவின்முறைத்திரையுங்
கத்தரித்துவிட்டருள்செய் கண்ணேறகுமானே ௭௯

நற்பவளக்கொம்பே நவமணிக்குமற்புதமே
கைப்பொருட்குமெய்ப்பொருளே கண்ணேறகுமானே

ஒப்புறவுதப்பி யுணர்வற்றுக்கைவிடுக்
கப்பரைகைக்கொண்டேனென் கண்ணேறகுமானே ௮௧

பசப்பிப்பணம்பறிக்கும் பாவிக்குருமுகத்தைக்
கசப்பாகக்கண்டேனென் கண்ணேறகுமானே ௮௨

வேதியர்க்குமாதவர்க்கு மெய்யடியார்கட்குமுனைக்
காதலிப்போருக்குமருள் கண்ணேறகுமானே ௮௩

வேலைவேரோடறுத்து மெய்யடிமையாக்குதற்கென்
காரியத்திற்றுமதமென் கண்ணேறகுமானே ௮௪

பழகப்பழகிவரும் பாக்கியத்தைப்பைமுகலைக்
களவுகொடுக்கேகனேன் கண்ணேறகுமானே ௮௫

நாமாண்மைகள்முழுது நாசமாக்கார்தமக்குங்
காமவினைபோமோவென் கண்ணேறகுமானே ௮௬

அடிமையுனதைய மாகாதிருக்கினுமென்
கடைவழிக்குக்கட்டமுதே கண்ணேறகுமானே ௮௭

வேதாந்தவேதமெல்லாம் விட்டேறியேகடந்து
காதலித்துநின்றேனென் கண்ணேறகுமானே ௮௮

இனமுஞ்சனமுமென் னெண்ணியெண்ணியுன்னடிமை
கனசழக்குப்பட்டேனென் கண்ணேறகுமானே ௮௯

நவஆத்திரத்தைவிட்டு நன்னினைவெண்ணுதுமனங்
கவலைப்படுவதென்ன கண்ணேறகுமானே ௯0

மடிப்புஞ்சொல்களவும் வஞ்சமுமென்னெஞ்சைவிட்டுக்
கடக்கநடப்பதில்லைக் கண்ணேறகுமானே ௯௧

பலவிடத்தைசுற்றிப் பரதவித்துப்பாவிமனங்
கலங்கிமலங்குவதென் கண்ணேறகுமானே ௯௨

உள்ளக்கருத்தா லுவந்துறவுகொள்ளாமற்
கள்ளமனந்துள்ளுவதென் கண்ணேறகுமானே ௯௩

மண்ணுமுதன்மற்ற மயக்கமலக்கல்லாரைக்
கண்ணொடுத்துப்பாரேனென் கண்ணேறகுமானே ௯௪

தேசிகனென்னுந் திருட்டுருக்கள்சொல்லோர்
சீசாய்மதியேனென் கண்ணேறகுமானே ௯௫

தன்னையறிந்து தவம்புரியாத்தன்மையினாற்
கன்னெஞ்சனேனென் கண்ணேறகுமானே ௯௬

மாடகூடங்கண்மணி மண்டபமுமன்றுகளுங்
காடுகொள்ளக்கண்டேனென் கண்ணேறகுமானே ௯௭

குானெரியவேகதறிக் கூப்பிடினுங்காணாத
கருவேகுருவேமெய்யன் கண்ணே றகுமானே கூஅ

மருளாத்தவத்தான் மறப்புநினைப்பற்றவர்க்குக்
கருணைக்குணங்குடியாங் கண்ணே றகுமானே கூகூ

உதிக்குமுணர்வன்றி யுணர்வோடுணர்வொன்றிற்
கதிக்குங்குணங்குடியென் கண்ணே றகுமானே க00

றகுமான்கண்ணி-முற்றுப்பெற்றது.

ஆக பாடல் எசுரு.

---

# புலம்பற்கண்ணி யென்னும்

## எக்காலக்கண்ணி.

---

முத்திதரும்வித்தை முனையில்வைத்துச்சீராட்டி
நித்தமறவாம னினைப்பதினியெக்காலம் க

ஆதியின்மேலாசை யடர்ந்தெடுத்தவக்கினியின்
சோதியினால்வெந்து சுகம்பெறுவதெக்காலம் உ

காமக்கடல்கடக்க சற்குருவியக்கப்பல்வைத்து
நேமநிஷ்டைத்தம்ப நிறுத்துவதுமெக்காலம் ங

பங்கப்பழிப்பேநிறைந்த பையன்யான்றையலர்கள்
கொங்கையைநான்பாராக் குருடாவதெக்காலம் ச

கொங்கைதனைப்பாராக் குருடாயிருப்பதுடன்
அங்கமுமிழ்மோக மழிவதினியெக்காலம் ரு

அங்கமுமிழ்மோக மழிந்தேயறமெலிந்து
ஞ்கிழுடுபோல வறண்டுணர்வதெக்காலம் சு

வாசியினாலேறி வலைமிட்டுந்தான்றிரும்பாமற்
றேசிநடைபோலத் திடப்படுவதெக்காலம் ௭

தேசிநடைபோலத் தியங்காச்சுழிமுனையை
நாசிநுனியிலே நான்மறிப்பதெக்காலம் ௮

நாசிநுனிகடந்து நாசமாய்ப்போகாமல்
வாசியுமென்னுயிர்க்கு வசப்படுவதெக்காலம் ௯

மையலெனுமாயை மார்புநிறையப்பூண்ட
தையலர்களெல்லாமென் றாயாவதெக்காலம் ௧௦

கஞ்சாவபினுக்குங் கற்பமெனவுண்ணாமல்
எண்சாண்பனிக்கு மிறகியுண்பதெக்காலம் ௧௧

பொய்யேமிகுக்கப் புகர்ப்பாவிப்பையல்யான்
அய்யோவென்றேயழுதுன் னடிபடுவதெக்காலம் ௧௨

அய்யோகூவென்றே யறைவடியுண்டேனது
பொய்யானமெய்யின் பிழையறுவதெக்காலம் ௧௩

மருவிதகைமறந்து மனமுமதமிறந்து
இருகையுமேந்தி யிரந்துண்பதெக்காலம் ௧௪

இருகையுமேந்தி யிரந்துதுடித்தேநான்
சருகாயுலர்ந்து சலிப்பறுவதெக்காலம் ௧௫

ஆசானக்காலை யணைத்திறுத்துமோந்துலந்
தாசாடிப்பேசி யுணர்வருள்வதெக்காலம் ௧௬

வாசிவாவென்று வாருங்கெள்ளமுதமுண்டு
பேசிநான்வாழ்க்கைப் பிழைதீர்வதெக்காலம் ௧௭

எக்காலக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் ௭௮௦.

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

## கண்மணிமாலைக்கண்ணி.

அத்துவிதமே யறிவகண்டிதாகாரக்
கர்த்தவியமேயென் கண்ணேபராபரமே க

தற்பரமேசிற்பரமே தானென்றுநின்றுதவுங்
கற்பகமேயற்புதமே கண்ணேபராபரமே உ

உடலேயுயிரே யுளங்குளிர்ந்தசெந்தேனின்
கடலேநிறையமுதே கண்ணேபராபரமே ங

சொட்டிவைத்தமுத்தே குவித்தநவரத்தினமே
கட்டிப்பசும்பொன்னேயென் கண்ணேபராபரமே ச

சட்டாசவர்க்கமே சார்ந்தோர்க்குச்சந்தனமே
கட்டழகுப்பெண்ணேயென் கண்ணேபராபரமே ரு

செல்வப்பெருக்கே திரண்டமணிப்பொக்கிஷமே
கல்விக்களஞ்சியமே கண்ணேபராபரமே சு

இன்னமுதேகண்டே யெனக்கேற்றமுக்கனியே
கன்னலரும்பாகேயென் கண்ணேபராபரமே எ

பிச்சாத்திரண்டமுதே பிரியாப்பெருவாழ்வே
காய்ச்சாச்செம்பொன்னேயென் கண்ணேபராபரமே அ

நற்பவளக்கொம்பே நவின்றமணிப்பெட்டகமே
கைப்பொருட்குமெய்ப்பொருளே கண்ணேபராபரமே

பட்டைக்கரும்புவட்டே பாகினைகொண்டசர்க்கரையே
கட்டிக்கரும்பேயென் கண்ணேபராபரமே ய

துன்பக்கடலைத் தொலைத்தோர்திகைதீர்க்குங்
கம்பமற்றபாற்கடலே கண்ணேபராபரமே கக

பொய்ப்பொருள்களெல்லாம் புறக்கணித்தபுண்ணியர்தங்
கைப்பொருள்சித்தேயென் கண்ணேபராபரமே கஉ

பவக்கடலைநீக்கிப் பரிவாய்க்கரையேற்றுங்
கவிழாமரக்கலமே கண்ணேபராபரமே ௧௩

தம்பனங்கொண்டே தரித்துநின்றவேகாங்காரக்
கம்பத்தடியானையென் கண்ணேபராபரமே ௧௪

மலிகாதல்கொண்டகையான் மண்ணிற்கவிழ்ப்பதற்கோ
கலகம்விளைத்துவிட்டாய் கண்ணேபராபரமே ௧௫

தெள்ளியவான்சோதி தெளிந்துமெல்லவந்தனையுங்
கள்ளப்படுத்திவிட்டாய் கண்ணேபராபரமே ௧௬

புண்ணீரொழுகிப் புழுங்குமனத்தினர்போற்
கண்ணீர்கலங்கவிட்டாய் கண்ணேபராபரமே ௧௭

பித்தர்கள்போலும் பிதற்றிக்காகம்போலுங்
கத்திக்கத்திச்சாகவிட்டாய் கண்ணேபராபரமே ௧௮

போற்றாமற்சிந்தை பொதுசமர்க்காற்றாமற்
காற்றாய்ப்பறக்கவிட்டாய் கண்ணேபராபரமே ௧௯

நெற்புதற்கேயொப்பாக நிற்பதற்கோவவன்றலையில்
தற்பித்துவிட்டுவிட்டாய் கண்ணேபராபரமே ௨௦

சொல்லாச்சுயஞ்சோதிச் சுடர்கொழித்தநெஞ்சுகருங்
கல்லாகச்செய்துவிட்டாய் கண்ணேபராபரமே ௨௧

அவிழ்க்கவிழ்ந்துசிந்தையுன்மீ தாசைவைத்தத்தனையுங்
கவிழ்த்துப்பாழாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே ௨௨

ஓசைமணிமண்டபத்தி னுட்புகாவண்ணமெனைக்
காசினியிற்சுற்றிவிட்டாம் கண்ணேபராபரமே ௨௩

வீண்காதறந்ததல்லரல் வேற்றிலுனைக்கண்ணுறலுங்
காண்கவரிதாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே ௨௪

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

சேத்துமத்தினிற்போலென் சிந்தைதனைக்கலங்கவுனைக்
காட்டிமறைத்துவிட்டாய் கண்ணேபராபரமே உரு

துட்டமாமாயையினிற் சுட்டெரித்தகொள்ளிக்
கட்டைவிறகாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே உசு

வேல்விழியார்காம வேட்டையனாற்றிலெனைக்
கால்மாற்றவிட்டுவிட்டாய் கண்ணேபராபரமே உஎ

வீடுகாடென்று விதித்ததுவுமல்லாமற்
காடுவீடாகவிட்டாய் கண்ணேபராபரமே உஅ

ஓடாமலோடி யுலகைவலஞ்சுற்றுதற்கோ
காடோடவாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே உகூ

ஈடோயானுன்றனக்கு மென்மீதிலேனுவிச்
காடியஞ்செய்துவிட்டாய் கண்ணேபராபரமே ௩0

அச்சமிலாப்புல்வேடவருக்குமென்னறிவைக்
கைச்சூறையாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே ௩க

வில்லங்கமற்று விளக்கொளிபோனின்றநெஞ்சைக்
கல்லங்கமாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே ௩உ

மண்ணுதிழுவாசை மாமாயைமுக்கூட்டுக்
கண்ணியுட்சிட்டாக்கிவிட்டாய் கண்ணேபராபரமே ௩௩

கொண்டணைத்துக்கொள்ளுங் குணங்குடியான்சீரடியைக்
கண்டணைக்கநீயருளாய் கண்ணேபராபரமே ௩௪

எட்டிலெழுதொன்று விறையோயுன்றன் வடிவைக்
காட்டிக்கொடுத்தருளாய் கண்ணேபராபரமே ௩ரு

மைச்சினிச்சிபோலு மணக்கோலப்பெண்போலுங்
கைச்சரசஞ்செய்தருளாய் கண்ணேபராபரமே ௩சு

கிரியாசையற்று நிரஞ்சனமாய்நின்றிடநற்
சரியாசைதந்தருளாய் கண்ணேபராபரமே ௩௭

நாதவிந்தால்நின்றதுவு நானென்றுபதேசங்
காதிலுரைத்தருளாய் கண்ணேபராபரமே ௩௮

மாதவசியாகி மலூழையிற்புக்குன்மேற்
காதலொன்றுதந்தருளாய் கண்ணேபராபரமே ௩௯

நிர்க்குணத்தைக்கொண்டு நிருவிகற்பஞ்சாதிக்கச்
சற்குணத்தைத்தீர்த்தருளாய் கண்ணேபராபரமே ௪௦

சென்மந்தொலைத்தடிமை சின்மயமாய்நின்றிடவுங்
கன்மந்தொலைத்தருளாய் கண்ணேபராபரமே ௪௧

சிந்தையொளிபரப்பிச் சிதறுவனகண்டாயோ
கந்தனையுந்தந்தருளாய் கண்ணேபராபரமே ௪௨

அஷ்டாங்கயோகமதி லாசையறவேயெனது
கட்டைவெட்டுமுன்னருளாய் கண்ணேபராபரமே ௪௩

விற்புருவத்தூடு விளங்குமொளிபந்தாடக்
கற்பித்தருளாய் கண்ணேபராபரமே ௪௪

ஒப்பிலருளாழி யோடவடியேற்கொரு
கப்பலாய்வந்தருளாய் கண்ணேபராபரமே ௪௫

உனையாள்வோமென்றடிமை யுள்ளங்குளிர்ந்திடநின்
கனிவாய்திறந்தருளாய் கண்ணேபராமயமே ௪௬

பொய்சோத்தமெய்யதனைப் போட்டுவிடுமுன்னமெனைக்
கைகோத்தணைத்தருளாய் கணணேபராபரமே ௪௭

வாய்ச்சதெனக்கென்று மகிழ்ச்சிகொண்டுநின்றிடநின்
காட்சியளித்தருளாய் கண்ணேபராபரமே ௪௮

மலைக்குமலைதிரிந்து மனுவாகவேழைமனக்
கலக்கந்தவிர்த்தருளாய் கண்ணேபராபரமே ௪௯

நாணாமடவாரை நான்கைதழுவக்கனவுங்
காணாதுகாத்தருளாய் கண்ணேபராபரமே ௫௦

தொண்டரிடஞ்சென்றிடவுந் தொண்டுசெய்துநின்றிடவுங்
கண்டித்துவைத்தருளாய் கண்ணேபராபரமே ௫௧

மூலவர்க்கமாக முழுமதிப்பாலுங்கொடுத்துக்
காலபயந்தீர்த்தருளாய் கண்ணேபராபுரமே ௫௨

சோற்றாலெடுத்த சுவரிடியாமற்பாது
காத்துமுகம்பார்த்தருளாய் கண்ணேபராபரமே ௫௩

மூலக்கனன்மூட்டி மூட்டிவருகாலரையுங்
காலாலுதைத்தருளாய் கண்ணேபராபரமே ௫௪

சிட்டனெனவும்பூசை செய்தேனுமிப்பாவிக்
கட்டைகடத்தேறவைத்தாள் கண்ணேபராபரமே ௫௫

எட்டுமோரெட்டையுமெட் டெட்டுக்கயிறதனாற்
கட்டவுநல்லிஷ்டம்வைத்தாள் கண்ணேபராபரமே ௫௬

ஆதாரமாறு மடுக்கடுக்காகக்கடத்திக்
காதுக்குமேலேற்றிவைத்தாள் கண்ணேபராபரமே ௫௭

கும்பித்திரேசித்துட் கொள்ளும்படிக்குதவிக்
கம்பமுனைக்காட்டிவைத்தாள் கண்ணேபராபரமே ௫௮

பட்டிப்பசுப்பாலைப் பக்குவத்துடன்காலைக்
கட்டிக்கறந்தடித்தாள் கண்ணேபராபரமே ௫௯

நில்லாகூட்டிற்கு நிலையுங்கொடுக்குமொரு
கல்லாவின்பாலளித்தாள் கண்ணேபராபரமே ௬௦

சோமப்பாலூட்டிச் சுரந்தவாமப்பாலுங்
காமப்பாலுங்கொடுத்தாள் கண்ணேபராபரமே ௬௧

மண்டைநடுமண்டலத்துண் மண்டியமுதுண்டிடவுங்
கண்டங்கடத்திவைத்தாள் கண்ணேபராபரமே ௬௨

மூலாதாரத்துண் மூளாகொலாடுயர்ந்தெழுந்த
காலாற்கனலெறித்தாள் கண்ணேபராபரமே ௬௩

ஆயுங்கலையிரண்டு மாயாதடக்கியென்றன்
காயநிலைக்கவைத்தாள் கண்ணேபராபரமே ௬௪

அற்புடலா லருந்தவமேபுரிந்திடவுங்
கற்பமுறைகைக்களித்தாள் கண்ணேபராபரமே ௬௫

அண்டபிண்டமென்றுநின் றுடுந்திருக்கூத்தைக்
கண்டுகளிகூரவைத்தாள் கண்ணேபராபரமே ௬௬

எண்ணுதவெண்ணமெல்லா மெண்ணுமலென்றன்மனக்
கண்ணுடிக்குள்ளளித்தாள் கண்ணேபராபரமே ௬௭

எவ்வுலகுந்தானு யிருந்தவனையானொருழுவுங்
கவ்வுமலக்கட்டறுத்தாள் கண்ணேபராபரமே ௬௮

அற்பவுடல மழிந்திடுமுன் றீபமிட்ட
கர்ப்பூரமாக்கிவைத்தாள் கண்ணேபராபரமே ௬௯

விலங்கினங்களோடு வீறிடவுமேழைநெஞ்சு
துலங்காதவண்ணம்வைத்தாள் கண்ணேபராபரமே ௭௰

அடுத்துக்கெடுக்கு மரிவையர்க்காளாகாமற்
கடக்கக்கடத்திவைத்தாள் கண்ணேபராபரமே ௭௧

நாற்றந்தொலைய நறவனையுநாரியர்தங்
காற்றும்படாதுவைத்தாள் கண்ணேபராபரமே. ௭௨

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

ஆணிப்பொன்மேரு வாமுனையுமுன்னருமை
காணுங்கருணைவைத்தாள் கண்ணேபராபரமே ௭௩

வனவாசயோக வரமளித்துன்பொற்பதத்தை
கனமாயிறைஞ்சவைத்தாள் கண்ணேபராபரமே ௭௪

எட்டிப்பிடித்தாலு மெட்டாதநின்றவனைக்
கட்டிப்பிடிக்கவைத்தாள் கண்ணேபராபரமே ௭௫

மதபேதமோதி மறைக்குமறைசொல்வதெல்லாங்
கதையாய்முடித்துவைத்தாள் கண்ணேபராபரமே ௭௬

அண்டபிண்டமாயு மதற்கப்பாலுநின்றவெளி
கண்டவனைக்காட்டிவைத்தாள் கண்ணேபராபரமே ௭௭

உலையிலிடுமெழுகா யுள்ளம்பதைத்துருகி
கசங்கியதுங்கண்டிலையோ கண்ணேபராபரமே ௭௮

வெம்பிமிகநொந்தேன் மெலிந்தேனென்கண்ணீருங்
கம்பலையுங்கண்டிலையோ கண்ணேபராபரமே ௭௯

மெத்தமயலுற்று விருப்பமொடுபன்னாலுங்
கற்றும்பாழாக்கிவிட்டேன் கண்ணேபராபரமே ௮௦

பாலங்கடந்துபெரும் பாதைநடவாமலும்வீண்
காலங்கடத்திவிட்டேன் கண்ணேபராபரமே ௮௧

பூத்தமலரெடுத்துன் பொன்னடியையானுமென்றுங்
காத்திருந்துபூசைசெய்வேன் கண்ணேபராபரமே ௮௨

விண்கொண்டுநின்று விளங்குமுனையெக்காலங்
கண்கொண்டுகண்டேனென் கண்ணேபராபரமே ௮௩

ஐயோவென்செய்கிற்பே னொருமற்றபாவியைநீ
கையைவிடலாமோவென் கண்ணேபராபரமே ௮௪

நட்டநடுவீடுசென்று நாளெனித்திருந்தனையுங்
கட்டித்தழுவேனோ கண்ணேபராபரமே அ௫

அல்லும்பகலு மடியேன்படுந்துயர்க்குக்
கல்லுங்கரைந்திடுமென் கண்ணேபராபரமே அசு

பொன்னைப்புதைத்துவைத்துப் போவாருளந்தோறுங்
கன்னங்கறுத்திடுங்காண் கண்ணேபராபரமே அஎ

புணர்த்தைநப்பமனைவியும்பார்த்ததுண்டோவுன்றனுக்கெ
ன், கணக்குந்தெரியாதோ கண்ணேபராபரமே அஅ

நிற்கும்பொழுதாடை நெகிழ்ந்தாலுபசாரங்
கைக்குஞ்சொலுவதுண்டோ கண்ணேபராபரமே அகூ

தடையிலுலகனைத்துந் தானாயிருந்துமொரு
கடுகிடையுமாறோவென் கண்ணேபராபரமே கூ0

உனக்குளெனைமறந்தோ ருள்ளக்கருத்தினுண்மாங்
கனிக்குளொருநயமுண்டாறாய் கண்ணேபராபரமே கூக

நெக்குருகிநின்ற நிலைதோன்றுநிர்க்குணத்தார்
கைக்குட்பந்தாடிநின்றாய் கண்ணேபராபரமே கூஉ

பத்தித்தமனம்வாழி பரமார்த்தமும்வாழி
கதித்தநிலைவாழி கண்ணேபராபரமே கூங

அத்துவிதம்வாழி யறிவகண்டிதம்வாழி
கர்த்தனேநீவாழி கண்ணேபராபரமே கூச

தற்பரமேவாழி தாராதுந்தந்துதவுங்
கற்பகமேவாழியென் கண்ணேபராபரமே கூரு

சிற்பரமேவாழி சிவயோகியவர்வாழி
கற்பனையெல்லாமவாழி கண்ணேபராபரமே கூசு

நற்பதவியும்வாழி நவின்றன்மறைவாழி
கற்பதாரிகள்வாழி கண்ணேபராபரமே ௯௭

சித்தர்கணம்வாழி சின்மயர்தானும்வாழி
கர்த்தவ்வியம்வாழியென் கண்ணேபராபரமே ௯௮

மாதவத்தோரும்வாழி மவுனமுத்திரையும்வாழி
காதலித்தோரும்வாழி கண்ணேபராமுகமே ௯௯

குவலயத்தோரும்வாழி குணங்குடியாரும்வாழி
கவலையற்றோரும்வாழி கண்ணேபராபரமே ௧௦௦

கண்மணிமாலைக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௧௦௦.

---

## மனோன்மணிக் கண்ணி



மெய்தொழுவுமேனு மேனுநந்தீசுவரனைக்
கைதொழவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௧
கோப்பாகவுமுனையான் கொண்டாடிப்பாடவுநீ
காப்பாகவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௨
பெண்கணிர்த்தத்தீதாடுனையான் பிரியாமணம்புணரக்
கண்களுறங்காக்கனவு கண்டேன்மனோன்மணியே ௩
மலர்ந்திருக்கும்பொற்கமல மணவரையிலிருவருங்கை
கலந்திருக்கவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௪
மெய்மஞ்சட்குளிர்ப்புங்கண் விழிப்புமெக்களிப்புமெனைக்
கைமிஞ்சவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௫
மைதீட்டவுங்கயற்கண் மலரின்மலர்முலையிற்
கைபூட்டவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௬

மெய்கழுவவும்மிருவர் மெய்யோடுமெய்நெருங்கக்
கைகழுவவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௭

வாமப்பாலைப்பெருக மறுவாலிபம்வருக
காமப்பாலுண்ணக்கனவு கண்டேன்மனோன்மணியே ௮

பாலனாகவுங்கான்ற பாலுணவுமென்னைவிட்டுங்
காலனேகவுங்கனவு கண்டேன்மனோன்மணியே ௯

வடியாவருளமிர்தம் வடியவடியக்குணங்
குடியாரொடுகனவிற் குடித்தேன்மனோன்மணியே ௧௦

கோடிபெருமதிகள் கூடுமொருமதிபோல்
வாடியெம்மானேயெம் மானேமனோன்மணியே ௧௧

கண்ணேயென்கண்மணியே கண்குளிர்ந்தகட்டமுதப்
பெண்ணேயமிர்தப் பிழம்பேமனோன்மணியே ௧௨

பெண்ணேமயிலினமே பேரனமேயென்றுனையென்
கண்ணிற்கிடக்கவென்றுகாண்பேன்மனோன்மணியே ௧௩

வன்னவுடைக்குமுன்றன் வாலவயதினுக்கு
அன்னநடைக்குமென்றாசைமனோன்மணியே ௧௪

கூந்தலிலங்கக் குரும்பைத்தனங்குலுங்க
நேர்ந்துநடம்புரிந்து நிற்பாய்மனோன்மணியே ௧௫

துவளுந்துடியிடையுந் தோகைமயினடையும்
பவளவிதழுமென்று பார்ப்பேன்மனோன்மணியே ௧௬

மலர்மாலைகள்கிடந்து மார்பிற்பின்னலாடுமுன்றன்
அலர்முலையும்யானென் றணைவேன்மனோன்மணியே ௧௭

வெய்யிற்பட்டாலும் வெதும்புமுடலாயுனது
மெய்யிற்றொட்டாலுங்கந்தம் வீசும்மனோன்மணியே ௧௮

காற்றுப்பட்டாலுங் கலங்குமென் றன்மேனியினி
பார்த்துகலெதாடவின்பம் படைப்பேன் மனோன்மணியே

பிடியானைப்போலும் பிடிப்பேன் முலையைக்குனைங்
குடியானைப்போலுங் குடிப்பேன் மனோன்மணியே உ௦

கூந்தலுக்குநெய்தோய்த்துக் குளிர்மஞ்சனீராட்டி
வார்ந்துசிங்காரித்து வைப்பேன் மனோன்மணியே உக

காலிற்பனிநீர்விட்டுக் கழுவிமடிமீதுவைப்பேன்
மேலினத்தருப்பூசி விடுவேன் மனோன்மணியே உஉ

காதம்பரிமளிக்குங் கத்தூரிப்பொட்டிடுவேன்
போதிஞ்சவாதணிந்து புணர்வேன் மனோன்மணியே உ௩

தலைக்குமினுக்கெண்ணெய் தடவிச்சடைபின்னிவைப்பே
முலைக்குவன்னக்கச்சிறுக்கி மூடிப்பேன் மனோன்மணியே

கட்டாடைவர்க்கமெல்லாங் கண்டுசளித்துயர்ந்த
பட்டாடைவர்க்கம்வைத்துபடைப்பேன் மனோன்மணியே

மூக்குகுத்திக்காதுகுத்தி முழுவயிரந்தூக்கிவைப்பேன்
கோக்குமுத்துந்தூக்குமுததுங்குவிப்பே மனோன்மணியே

கைக்குஞ்சரிகடகங் கல்லுமிழைத்துக்கொடுப்பேன்
பட்டாடைவர்க்கம்வைத்துபடைப்பேன் மனோன்மணியே

தங்கக்கொலுசுஞ்சிலம்புந் தண்டைபாதகடகமுங்
கொங்கைக்குமோகனமாலை கொடுப்பேன் மனோன்மணி

காலாழிபீலிழூதற் கன்னகையும்பொன்னகையும்
காலாட்சமைவேண்டி னடக்குமனோன்மணியே உ௯

முடிபீதினுமகுட முடிசூட்டுவேனற்குணங்
குடிமாதவர்கள்குணக் கொழுந்தேமனோன்மணியே ௩௦

சன்னிதானத்திற் சரணஞ்சரணமென்று
சொன்னமலர் தூவித் தொழுவேன் மனோன்மணியே ௩௧

கர்ப்பூரமேற்றிக் காத்தீபவாலாத்தி
எப்பாரும்போற்ற வெடுப்பேன் மனோன்மணியே ௩௨

முக்காலமும்பூசை முடிப்பேன்முக்காலமல்லால்
எக்காலமும்பொங்க லிடுவேன் மனோன்மணியே ௩௩

சாதந்தளிகைசமைத்துச் சாம்பிராணித்தூபமிட்டுப்
பாதந்தொழுதிட்டுப் படைப்பேன் மனோன்மணியே ௩௪

பச்சைப்பருப்புமுதற் பருப்பிற்பக்குவகைகடைவேன்
வச்சநறுநெய்யுருக்கி வார்ப்பேன் மனோன்மணியே ௩௫

முட்டைபொரிப்பேன் முழுக்கோழியும்பொரிப்பேன்
றட்டைப்பிங்காணிற் றருவேன் மனோன்மணியே ௩௬

ஆட்டுக்கறியுங்கொள்வேன திலனந்தம்வகைசமைப்பேன்
கூட்டுக்கறியும்பண்ணிக் கொடுப்பேன் மனோன்மணியே

குட்டிக்கறிதானுங் குழம்புபண்ணித்தாளித்தோர்
சட்டிக்கறியேனுந் தருவேன் மனோன்மணியே ௩௮

பால்பழமுந்தேனும் பலகாரவர்க்கங்களும்
மேலுமேலும்நான்பரப்பி விடுவேன் மனோன்மணியே ௩௯

அடிக்காயிரம்பொன்னில்லை யானாலுமீக்குதனாய்
குடிக்குண்மாளிகைகட்டிக்கொடுப்பேன் மனோன்மணியே

ஆணிப்பொன்மதிலுயர்ந்த வாண்மனையுந்தீர்ப்பாக
மாணிக்கமேவிளக்கா வைப்பேன் மனோன்மணியே ௪௧

துலங்குமணிமண்டபமுஞ் சொர்க்கமெனவுமிலங்க.
இலங்குமலங்காரஞ்செய் திடுவேன் மனோன்மணியே ௪௨

ரத்தினங்கள்வைத்திழைத் திராவைப்பகலாக்குஞ்
சித்திரங்கள்வகைவகையாய்ச் செய்வேன்மனோன்மணி

மண்ணையமுந்தாமன் மனமேமுழுவதிலுங்
கண்ணாடியாயிருக்கக் காண்பேன்மனோன்மணியே ௪௪

மங்காதொளிபரப்பும் மவுனமணியாலுமொரு
சிங்காசனமேடை செய்வேன்மனோன்மணியே ௪௫

நாற்காலிகட்டில்பல நற்பவளவாசனங்கள்
நீக்காமற்சுற்றும் நிறைப்பேன்மனோன்மணியே ௪௬

பாதம்பூசித்துப் பணிவிடைகள்செய்துநிற்க
மாதர்களோவனந்தம் வைப்பேன்மனோன்மணியே ௪௭

புவனத்தரசரெல்லாம் போற்றிப்பணியவென்றன்
மவுனமலரணைமேல் வாழ்வாய்மனோன்மணியே ௪௮

கட்டிலினுங்கூடி களிகூர்ந்துகொண்டிருப்போம்
தொட்டிலினுமாடிச் சுகிப்போமனோன்மணியே ௪௯

முடிமன்னர்தம்வாழ்வு முதலெல்லையுமெங்கள்குணங்
குடிமன்னர்தமவாழ்வுங் கொடுப்பேன்மனோன்மணியே

சொன்னமலைமலையாய்த் தொகைவகையிலாதளிக்குங்
கன்னனெனவுமெனைக் காண்பாய்மனோன்மணியே ௫௧

போதத்தனங்குவித்த பொக்கிஷமுங்கைகுவிப்பேன்
பாதத்திலும்வீழ்ந்து பணிவேன்மனோன்மணியே ௫௨

கிடையாப்பொருள்களெல்லாங் கிடைக்குமுன்னநீயுமென்றாற்
படையாப்பொருள்களெல்லாம் படைப்பாய்மனோன்மணியே ௫௩

தானசமுத்திரப்போற் சான்றோர்க்கெல்லாமளிப்பாய்
சேனைச்சமுத்திரமுஞ் சேர்ப்பாய்மனோன்மணியே ௫௪

முடிதாக்குமன்னர் முதலெவருமுன்வாயிற்
படிகாக்கும்வாழ்க்கை படைப்பாய்மனோன்மணியே ௫௫

கவிராஜரும்விருது கட்டியங்கள்கூறிநிற்பார்
தவராஜரும்போற்றத் தவறார்மனோன்மணியே ௫௬

உன்மீதிலாசிக் குயிர்பொருளுன்றாட்களிப்ப
என்மீதிலாசையுனக் கில்லையென்மனோன்மணியே ௫௭

உள்ளதிரியதெல்லா மொப்புகொண்டபின்னலவோ
கள்ளமனப்படைக்கக் கற்றாய்மனோன்மணியே ௫௮

வேசைக்குணத்தை விரும்புவாரொன்றறிந்தாற்
காசைப்பணத்தைநான் காட்டேன்மனோன்மணியே ௫௯

படையாகெல்லாமென்றைற் படைத்தப்பாதேசிகுணங்
குடியாரையோதேடிக் கொண்டாய்மனோன்மணியே ௬0

உத்தமிப்பெண்ணென் றுவந்தேனிப்போதான்றன்
பத்தினித்தனத்தைநன் றாய்ப்பார்த்தேன்மனோன்மணியே

என்பத்தினைக்கிருந்த விராஜராஜேஸ்பரியாய்
ஐம்பத்தாறுதேசமுநீ யாள்வாய்மனோன்மணியே ௬௨

உள்ளமணவாள னுனக்கெவனோவென்னைவிடக்
கள்ளமணவாளனிச்சை கடிதோமனோன்மணியே ௬௩

வேசியென்றபேர்படைத்து வெளியிற்புறப்பட்டவனைத்
தாசியென்றுசொல்லத் தகாதோமனோன்மணியே ௬௪

ஆடாதுமாடி யவிசாரியானவளைப்
பாடாதும்பாடிலென்ன பயமோமனோன்மணியே ௬௫

மூக்குமுனக்குமுழும் மூன்றேறோபத்தினிபோல்
நாக்குமுனக்குமுழ நாலேன்மனோன்மணியே ௬௬.

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

பானைச்சோறெல்லாம் பதம்பார்த்துத்தின்றதினி
யானைமழியிலுயிர் பயிர்தான்மனோன்மணியே ௬௭

இனிக்கண்டறிந்துகொள்ள விவனுண்பிளையானு
றனிக்கண்டபோதுபுத்தி தருவான்மனோன்மணியே ௬௮

பல்லையிதழ்க்கடிக்கப் பானைதடியொடிக்கக்
கல்லைத்தேங்காயொடிக்கக் காண்பாய்மனோன்மணியே

தடிபோலிருந்தனையால் சாதிகெட்டபாழுங்குணங்
குடியார்க்கெப்படிகூட்டிக்கொடுப்பேன்மனோன்மணியே

போனதெல்லாம்போச்சு பொழுதும்விடிந்ததினி
யானசெல்லாமனத்திலுடேன்மனோன்மணியே ௭௧

மல்லாந்துநான்படித்து மார்பிற்றுப்பிச்சொண்டுபினும்
பல்லைக்குத்தியுமுகர்ந்தே பார்ப்பேன்மனோன்மணியே

என்னைவிட்டால்மாப்பிளைமா ரெத்தனையோவுன்றனுக்கே
உன்னைவிட்டாற்பெண்ணெனக்குமுண்டோமனோன்மணி

தடித்தனமேசெய்தாலுஞ் சமுசாரத்திற்படிந்து
குடித்தனஞ்செய்யாமலென்மனக்குறையோமனோன்மணி

தொடுத்தணைத்துக்கொண்டே துயில்வன்மற்றநேரமெல்லா
மெடுத்தணைத்துக்கொண்டே யிருப்பேன்மனோன்மணியே ௭௫

படுத்தப்படுத்தநெஞ்சிற் பளிச்சபளிச்சென்றழுத்தங்
கொடுத்துக்கொடுத்துநான் கொள்வேன்மனோன்மணியே

வன்னச்செழும்பவள வாயிதழூறல்சுவைத்துன்
கன்னத்தில்வீழ்ந்து கடிப்பேன்மனோன்மணியே ௭௭

கச்சிறுக்குமாதரின்பங் கைச்சிறுக்குப்போதனின்பம்
வைச்சிறுக்குங்கொங்கையிற்கைவைப்பேன்மனோன்மணி

தித்தித்தொழுகுகாமதேனமிர்தவூறலுண்பேன்
முத்திதழுவித்தழுவி முகட்பேன்மனோன்மணியே ௭௯

படியோர்க்கெல்லாமுயன்ற படியோர்களானருணங்
குடியோர்கள்போதுமின்பங் கொள்வேன்மனோன்மணி
சேயாயுமென்மடியிற் செங்கீரையாடியருட்
டாயாயுமங்கை தருவாய்மனோன்மணியே ௪௧

அங்கைதந்துதந்தே யணைத்தாருளமிர்தங்
கொங்கைதந்துதந்தே கொடுப்பாய்மனோன்மணியே ௪௨

தாவியணைத்தணைத்தென் றாயேயுனையென்றிப்
பாவிமடியில்வைத்துப் பார்ப்பேன்மனோன்மணியே ௪௩

ஏங்கியழுவேனோவுன் னிணையடியைக்காணாமற்
றூங்கிவிடுவேனோவென் றோழிமனோன்மணியே ௪௪

உலைபோலெறியுமென்ற னுளங்குளிரமேல்வளர்ந்த
மலைபோலெழுந்தருளி வருவாய்மனோன்மணியே ௪௫

கன்மமறவெந்தக் காலமோயானறியேன்
நன்மைதருவதெந்த நாளோமனோன்மணியே ௪௬

பன்னிமொழிந்துன்றன் பாதமலரையென்றன்
சென்னிமீதென் றமருள் செய்வாய்மனோன்மணியே ௪௭

தாயினுமிக்காய்கருணைத் தயாநிதியேயின்னுரையை
நாயினுமிக்காங்கடையே னவின்றேன்மனோன்மணியே

கால்பிடித்துக்கண்ணில்வைத்துக் கைக்குவித்துமெய்மயங்கி
மால்பிடித்துச்சொன்னதெல்லா மகிழ்வாய்மனோன்மணியே ௪௯

அடியானையுன்னடியார்க் கடியானுமாக்கித்துணைக்
குடியானெனப்பிரியங் கொடுப்பாய்மனோன்மணியே ௫௰

உச்சிதவச்சிரமலையே யொப்பன்றிலாமாணிக்கமே
கச்சிதப்பச்சை மரகதமேமனோன்மணியே ௫௧

செப்புருவாணிமுத்தே சிறந்தபவளக்கொடியே
புட்பராகக்கமலப் பூவேமனோன்மணியே. ௫௨

 மஸ்தான்சாகிப் அவர்கள்பாடல்

கோமேதகமே குளிர்ந்தவயிடூரியமே
மாமேருவேநீல மலையேமனோன்மணியே ௯௩

வற்றாமருட்செல்வ வாழ்வேகருணாநிதியே
பொற்றாமரைக்கமலப் பொருட்டேமனோன்மணியே ௯௪

அல்லிமலரே யலர்செங்கழுநீர்மலரே
மல்லிகைக்கொத்து மலரேமனோன்மணியே ௯௫

பொன்மலரேபன்மலரே புகழ்தருபன்னீர்மலரே
மன்மதபாணமா மலரேமனோன்மணியே ௯௬

குடலைநிறைந்ததொரு கொத்தலரிச்செம்மலரே
மடலவிழ்ந்தசெந்தாழை மலரேமனோன்மணியே ௯௭

பூக்குமருண்மலரே புளிக்காதமாமலரே
வாக்குமலரேகன் மலரேமனோன்மணியே ௯௮

வஞ்சியர்செய்மோகமுடன் மறலிசெயுநாசத்திற்
கஞ்சியுனக்கடிமை யானேன்மனோன்மணியே ௯௯

அடியாரும்வாழிபின்ன வடியேனும்வாழிதுணைக்
குடியாரும்வாழிதுணை குன்றேமனோன்மணியே ௧00

உமையாள்பாத முன்னிற்க.

ஆதியந்தங்கடந்த வுமையாடன்பாதம்
அகண்டபரிபூரணமா மையர்பாதஞ்
சோதியந்தங்கடந்த கணபதியின்பாதந்
தொழுதிறைஞ்சிக் கரங்குவித்துப்போற்றிசெய்து
வாதியந்தங்கடந்தகந்தி பாதமென்றும்
வாலைமனோன்மணியம்மை பாதமென்றும்
ஓதியந்தங்கடந்தகண்ட மிரண்டதாக
ஒன்றுமறியாவறிஞ னுரைசெய்தானே.

மனோன்மணிக்கண்ணி-முற்றுப்பெற்றது.

ஆக பாடல் ௧௮0.

---

## நந்தீஸ்வரக்கண்ணி.



ஆதியந்தங்கடந்தவுமை யாளருறைகாந்தச்
சோதியந்தங்கடந்த செழுஞ்சுடரேநந்தீஸ்வரனே ௧

முடியடியாய்நின்றநடு மூலமணிவிளக்கே
அடிமுடியாய்நின்ற நடுவணையேநந்தீஸ்வரனே ௨

கர்த்தனையானுன்கருணைத் திருவடிக்கே
எத்தனைதான்றெண்டனிடுவேனந்தீஸ்வரனே ௩

தீர்க்கதெண்டனிட்டுன் திருவடியைப்போற்றிசெய்தே
வாக்குநடக்கவருமருணந்தீஸ்வரனே ௪

மாசில்பரவெளியே மவுனமணிமாளிகையில்
வாயிற்பெருவழியே மகத்தேநந்தீஸ்வரனே ௫

மகத்தோனேஞான மழையேயருள்வெள்ள
முகத்தோனேமோன முகிலேநந்தீஸ்வரனே ௬

ஞானம்விளைவேற்று நல்லசமுசாரிகட்கு
மோனமழையூற்று முகிலேநந்தீஸ்வரனே ௭

மும்மூலயோக முழுதுஞ்சித்திசெய்துதர
உன்னலேயாகு முயிரேநந்தீஸ்வரனே ௮

சமர்தொடுத்துவென்றேங்கு சாம்பவியைக்கைபடுத்தித்
தமர்விடுத்துநீக்கித் தருவாய்நந்தீஸ்வனே ௯

நல்லோர்க்குநீகாட்ட நல்குங்குணக்குடிவாழ்
வெல்லோர்க்குநீகோட்ட வெளிதோநந்தீஸ்வரனே ௧௦

இல்லினிடங்கூட்டி யிதழ்விரியுஞ்செங்கமல
வல்லினிடங்கூட்டி வைப்பாய்நந்தீஸ்வரனே ௧௧

சாமிதனையுஞ்சுத்த சைதந்நியமானசிவ
காமிதனையும்மென்று காண்பேனந்தீஸ்வரனே ௧௨

உமையாளுமெய்யா யுவந்தடிமைகொள்ளும்வண்ணம்
எமையாளுமையா விறையேநந்தீஸ்வரனே ௧௩

கேசரத்தைக்காட்டிக் கிளரொளியாடன்னருட்பால்
ஆசரித்தேயூட்ட வருள்வாய்நந்தீஸ்வரனே ௧௪

சத்திசிவமுதலாக சாம்பவியம்பாளருளிற்
செத்தசிவமுதலாச் சித்தாம்நந்தீஸ்வரனே ௧௫

சித்தாளையின்ற சிறுபெண்ணுந்தானிரண்டு
பொற்றாளையென்றும் புணர்வேனந்தீஸ்வரனே ௧௬

பத்துவயதுடைய பாலையையன்றோநீ
சித்தர்க்கெல்லாந்தாயார் செய்தாய்நந்தீஸ்வரனே ௧௭

காமரூபியாநித்திய கல்யாணசுந்தரியை
ஓமரூபியையெற்று முதல்வநந்தீஸ்வரனே ௧௮

கேசரியாடன்கருணை கிட்டினன்றோவாசாம
கோசரவாழ்வெல்லாங் கொடுப்பாய்நந்தீஸ்வரனே ௧௯

மூலவொளிசூட்டி மோனக்குணங்குடிக்கும்
மேலைவழிகாட்டி விடுவாய்நந்தீஸ்வரனே ௨௦

கண்டப்பாலங்கடத்தி கமலாசனத்தேற்றி
அண்டப்பாலுங்கொடுத்தே யருள்வாய்நந்தீஸ்வரனே ௨௧

செங்கமலபீடச் செல்வியர்தாஞ்சித்தம்வைத்தாற்
றங்கமலைகூடத் தருவாணந்தீஸ்வரனே ௨௨

போதகத்தைப்பூட்டிப் புருவமைத்தாயெற்தும்
வாதவித்தைச்காட்டி வருவாய்நந்தீஸ்வரனே ௨௩

ரசயோகசித்து நயனருளிருலஷ்மை
நிசயோகமுற்று நிலைப்பேனந்தீஸ்வரனே ௨௪

மகாவித்தைகாய்ப்பதற்கு மதியாபிர்சஞறனுண்டே
லகிரியுற்றுகிற்பதற்கு லயிப்பாய்நந்தீஸ்வரனே ௨௫

குப்பைவழலையெனுங் கோவையெல்லாங்கக்கவைத்துக்
கற்பவழலைவரச் காட்டுநந்தீஸ்வரனே ௨௬

கற்பவழலைவரக்காட்டி கற்பமுண்டதற்பின்
பற்பவமுமுறை பகர்வாய்நந்தீஸ்வரனே ௨௭

சூதமுகவீற்றிச் சொன்னமதியபிர்தப்பிர
சாதமதிலூற்றித் தருவாய்நந்தீஸ்வரனே ௨௮

அற்பமாங்தேகமதா யடியேனெடுத்தவுடல்
கற்பதேகமாகக் கணிப்பாய்நந்தீஸ்வரனே ௨௯

உம்மைநம்பினேர்வாழ மோங்குருணப்புருயார்க்
கெமனும்பினையாரு மெதிரோநந்தீஸ்வரனே ௩0

முநீஸ்வரரிலொன்றாய் முடித்தருள்வாயாகிலெனைச்
சநீஸ்வரர்கூடச் சாட்டாய்நந்தீஸ்வரனே ௩௧

காலனும்போய்விடுவான் காலங்கடந்துசிறு
பாலனும்மாய்விடுவேன் பரமேநந்தீஸ்வரனே ௩௨

கவனமணிமுதலாய்க் கட்டியென்னைக்களிக்க
மவுனமணித்தாய்க்கு வகுப்பாய்நந்தீஸ்வரனே. ௩௩

மாயைவலைவீசி மயக்காமலென்றன்மேல்
நேயவலைவீச நிகழ்த்துநந்தீஸ்வரனே ௩௪

தோகையிளமின்னார் சுகபோகமும்பசியும்
போகவழிச்சொன்னாற் போதும்நந்தீஸ்வரனே ௩௫

பெண்ணுலகமெல்லாம் பிணக்காடாக்கியையோ
மண்ணாய்மடிவதென்ன மாயம்நந்தீஸ்வரனே ௩௬

சையோகப்பிந்தைகவெல்லச் சமர்த்தோடிச்சைகட்டு
மெய்யோகபுத்திசொல்ல வேண்டும்நந்தீஸ்வரனே ௩௭

பாஷாண்டிகடோறு பலனொன்றுமின்றிவெறும்
வேஷாண்டியாக்கி விடுகாணாந்தீஸ்வரனே ௩௮

பிணம்பிடுங்கித்தின்னும் பேய்போற்சிலநாளையர்
பணம்பிடுங்கித்தின்பதென்ன பாவம்நந்தீஸ்வரனே ௩௯

பணமுடியானென்றும் பவப்பிடியானென்றுமெனைக்
குணக்குடியானென்றுங் குறிப்பாய்நந்தீஸ்வரனே ௪௦

உன்னையன்றியேழை யோரேனொருவரையும்
அன்னையென்றுமாள வருள்வாய்நந்தீஸ்வரனே ௪௧

ஆத்தானைத்தேடி யலைந்தலைந்துவிண்பறக்குங்
காற்றாடியானேனென் கண்ணேநந்தீஸ்வரனே ௪௨

மான்பிரிந்தகன்றாய் மயங்குதற்கென்றாய்வயிற்றி
லேன்பிறந்தகன்றே யிருந்தேனந்தீஸ்வரனே ௪௩

ஏனைவினையின்றா ளெந்தாயிவ்வாறுசெயத்
தானேவினுமென்செயத் தானேநந்தீஸ்வரனே ௪௪

தாய்தாயென்றே தலைப்புறட்டக்கொண்டுலைவு
வாய்வாயையென்றே மடிவேனந்தீஸ்வரனே ௪௫

தாயைவிட்டுப்பிள்ளை தவிப்பதறிந்தவுடனே
சேயையிட்டம்வைத்தணைகச் செய்வாய்நந்தீஸ்வரனே

கன்றினுக்கேயிரங்கும் காலியெனவென்னனைத்தான்
என்றுமெனக்கிரங்க விசைப்பாய்நந்தீஸ்வரனே ௪௭

மாயைமணமுடித்து மயக்காதேதன்னைவின்ற
தாயைமணமுடித்துத் தருவாய்நந்தீஸ்வரனே ௪௮

தற்பாத்தினல்வெளியே சர்வபரிபூரணமே
சிற்பாத்தினேயொளியே சிவமேநந்தீஸ்வரனே ௪௯

முத்தரெலாம்வாழியெங்கள் மோனமணித்தாயருளுஞ்
சித்தரெல்லாம்வாழி சுத்தசிவமேநந்தீஸ்வரனே ௫0

குற்றம்பலநீக்கிக் குணக்குடியென்றேமேவுஞ்
சிற்றம்பலவாழி சிவமேநந்தீஸ்வரனே ௫௧

கட்டளைக்கலித்துறை.

மடக்கிமடக்கிவரு மாயினுஞ்சொல்லுமாண்பொருளும்
அடக்கியடக்கிக்கிடக்குங் கண்டோர்பலனுய்ந்துகொள்வார்
நடக்கினுமாமனவுண்மையினுள்ளிநடையொழிந்து
கிடக்கினுமாமென்றறிதர நாடிக்கிளத்தியதே.

நந்தீஸ்வரக்கண்ணி-முற்றுப்பெற்றது.

ஆக பாடல் - ௫0௨.

---

## மஸ்தான்சாகிபு அவர்கள் பாடிய கீர்த்தனைகள்.

இராகம்-புன்னாகவராளி-அடதாளசாப்பு.

பல்லவி.

பரமுத்தனூணங்குடி தெருவில்வரும் பவனி
பார்த்துவருவோம் வாருங்கள்

அநுபல்லவி.

வரமுத்தர்சார்கணந் தாமுற்றவர்களிரு
பரமொய்த்தினியதுதி கரமுத்தியருளுநம் (பரமு)

சரணங்கள்.

௧. சாத்திரவேதஞ் சலாம்-சலாம் சலாமென்ன
ஜகஜோதிமின்னல் பளீர்-பளீர் பளீரென்ன
பேர்த்தளம்போற்றும் றகீம்-றகீம் றகீமென்ன
பிசுமில்லாகிற்றகு மானிற்றகீமென்றுள்
அசையாமலொருநிலை விசுவாசமருளும்நம் (பாமு)

௨. கருமமத்தளதாளந் திடீல்-திடீல் திடீலென்ன
கைம்மணியோசை கணீல்-கணீல் கணீலென்ன
திருவருளாட்டந் திடும் திடும் திடுமென்ன
தினத்தந்தோந் தினத்தந்தோம்மனத்தொந்தோ மனத்தொந்
தோம், உனத்தாளனைத்தையு நினைத்தபடியாகநம் (பாமு)

௩. நாசச்சரீரம் நரேல்-நரேல் நரேலென்ன
நஞ்சவினைகள் சரேல்-சரேல் சரேலென்ன
விசுமருட்கள் வீறீல்-வீறீல் வீறீலென்ன
தேவதலாளெடுத்தேந்தி சோதிவாசியிலேறி
ஆதிபிசுமிலு ஞோதிக்களிமாவைநம் (பாமு)

ச. நாடாதபேர்கள் பயம்-பயம் பயமென்ன
நம்பியபேர்கள் ஐயம்-ஐயம் ஐயமென்ன
தேடியபேர்கள் நயம்-நயம் நயமென்ன
திக்குத்திசைகளெங்கு மிக்கவொளிபரப்பி
ஒக்கவுலகமொரு கைக்குள்ளடக்கும்நம் (பாமு)

இராகம்-ஸௌராஷ்டிரம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

இல்லல்லாகூவென் றென்னைமறந்துகொண்
டிருப்பாயென்னெஞ்சமே.

அநுபல்லவி.

அல்லாகூவென்ற வகண்டிதகண்டமா
நல்லாயிருக்குது காணும்-ஒரு
சொல்லாலே இப்படி தோணும்-வெகு
உல்லாசமாயிலாகா (இல்லல்லா)

சரணங்கள்.

க. அண்டபுவனங்களென் றுமிருப்பதை
யாதென்றறியாது தானே-எங்கும்
நின்றுநிறைந்து மறைந்துசிறந்த
நெடியநிராமயந் தானேமுதல்
பண்டுபழகிய நாட்டத்துக்கேயது
பாவைக்கூத்தானது தானே-நீ
கண்டுகளித்துச் சகலமும்விட்டுக்
கரையேறினல்கலங் தானே-தான்
சென்றவிடஞ்செயத் தானே-தன்னைக்
கண்டுகொண்டுலாயிலாக (இல்லல்லா)

௨. கெட்டமனத்தை யுடையவெருமைக்
கிடாவினைப்போலவு முண்டோ-காசைக்
கட்டிப்புதைத்துக் கடைசியிற்சாகின்ற
கழுதைகட்குப்பல னுண்டோ-வெகு
மட்டிப்பயல்கள் மனத்தைக்கரைக்க
மருந்துகள்மாத்திரை யுண்டோ-வெகு
சட்டமதாகிய நிஷ்டையிராத
சண்டாளர்க்குச்சாஸ்திர முண்டோ-இந்தத்
துஷ்டரைப்போலவு முண்டோ-நீ
கெட்டியுடன்லாயிலாக (இல்லல்லா)

௩. இல்லல்லாகூவென் றேநானிராமல்
இணைபடவுமிருந் தேனே-மெத்த
நல்லமேனான்புடன் றொழுகையும்விட்டு
நலங்களையுமறந் தேனே-தன்னை
வெல்லுங்குருபான் சொல்லியதீக்ஷை
வினவாமலவிட்டிருந் தேனே-அதை
அல்லும்பகலு மறியாமலென் னுள்ளே
ஆபாசமாக்குவித் தேனே-இது
எல்லாமறிந்திடுந் தானே-சொல்லுஞ்
சொல்லும்சொல்லும் லாயிலாக (இல்லல்லா)

௪. பூசைகள்செய்கிறே னென்றுதிரிந்து
புலம்பியபாபமும் போக்கி-பெண்கள்
ஆசையினாலே யனேகந்தரங்கள்
அடிபட்டதும்லகு வாக்கி-எங்கள்
ஈசன்திருவடி யாசையுள்ளானபின்
என்னைக்கையாலவர் தூக்கி-அந்தத்

தோஷித்தனங்க டொலையத்தொழுநற்
றுறைகளைப்போதனை யாக்கி-கெட்ட
பாசங்களைவிட்டு நீக்கி-தந்த
வாசியுடன்லாயிலாக (இல்லல்லா)

ரு. எண்சாணுயரத் திருக்கும்பனங்க
ளிறக்கியுண்ணேன் மனக் கண்ணே-கெட்ட
கஞ்சாவுங்களரு மரக்குமபினும்
கலப்பதைவிடுவெறு மண்ணே-நீ
தஞ்சாவூராரு மகாராஜன்பாதந்
தணிந்துநமஸ்காரம் பண்ணே-என்றன்
கொஞ்சப்பெலனுள்ள காயாபுரியென்ற
கோட்டையிடித்திடு மெண்ணே-அவர்
அஞ்சாதிடிப்பரென் றெண்ணே-இனிக்
கொஞ்சிக்கொஞ்சி லாயிலாக (இல்லல்லா)

. என்னவிதமென்று சொல்வேன் முழக்க
முழங்குவதென்னுக்குள் ளாலே-ஒரு
அன்னமிருந்தேயழகுபிறக்க
அசைந்தசைந்தாடுவ தாலே-அதன்
முன்னாலே யான்செய்த பாக்கியங்கண்டு
மூன்றாசையில்லாத தாலே-அது
தன்னாலேயானந்த வெள்ளம்பெருகித்
தடையறப்பாய்வத னாலே-பயிர்
அன்னபிடிப்பத னாலே-உனக்
கென்னகுறைலாயிலாக (இல்லல்லா)

வாசனையாகிய மாசற்றவஸ்தவும்
வாக்குமனத்துக் கெட்டாதே-அதில்

ஆசைக்கடல்பொங்கியோசையுடனலை
ஆடிடுமொன்றுங் கட்டாதே-இந்த
நாசச்சரீரத்தை வாசியிற்றீட்டிடில்
நாசத்தையண்ட வொட்டாதே-நல்ல
யோசனைசெய்யுங் குணங்குடி வந்திடில்
போகமுனக்குக் குன்றுதே-ஒரு
மாசறயாகூவென் றோதே-ஊசில்
ஆசைவிட்டேரையிலாக (இல்லல்லா)

இராகம்-பந்துவராளி, தாளம்-சாப்பு.

பல்லவி.

பெண்கொண்டபேர்பட்ட பாட்டையுங்கேட்டையும்
பேசுவோமே நெஞ்சமே

அநுபல்லவி.

சங்கையும்போக்கிச் சதிமானமாகச்
சகசண்டியாக்குவித் திடுவாள்-வெகு
பங்கப்படுத்தி விட்டிடுவாள்-அந்த
மங்கையராசைவைத் தையையோவையத்தில் (பெ)

சரணங்கள்.

க. தங்கநகையு முகப்பணிச்சேலையுந்
தாவெனவேகுரங் காட்டுவாள்-என்றன்
செங்கைவளையுந் தலைக்கெண்ணெய்சீப்புஞ்
சிறப்பொடுதாவென மாட்டுவாள்-வன்னக்
கொங்கைக்கிசைந்த ரவிக்கையுங்கோலப்
பணியுங்கொடுவென மூட்டுவாள்-வா

வெங்கப்பயனீயெ ளுமக்கலேஞெவென்று
வீட்டில்வராதேயென் றேட்டுவாள்-அந்த
மங்கையரர்சைவைத் தையையோவையத்தில் (பெண்)

உ. ஆதியைத்தேடி யருள்பெறநாடில்
அழுதழுதுமடி பிடிப்பாள்-நீதான்
ஏதென்னைவிட்டுப் பிரிவதுமென்றவள்
ஏங்கிஏங்கிதுடி துடிப்பாள்-செட்ட
வாதாநீசெய்யுந் தவம்பலியாதெனை
வாழ்த்திவஞ்செகாடை கொடுப்பாள்-கெட்ட
மூதேவிபுத்தி படைத்தவளாகி
முரணுக்கு யாரடி துடிப்பாள்-வெகு
வேதனையாய்மட மடப்பாள்-அந்த
வாதிகளாசைவைத் தையையோ வையத்தில் (பெண்)

ங. நாடிக்குருவடி தேடிநடக்கின்ற
நற்செயலைக்கசப் பாக்குவாள்-எங்கும்
ஓடித்திரிந்தே யலைந்துபணங்கள்
ஒருக்காலேதேடென்று தாக்குவாள்-அவன்
தேடும்பொருடனைக் காணினுமக்கெதிர்
தேசத்திலாரென்று தூக்குவாள்-இன்னும்
ஆடென்றும்மாடென்றும் வீடென்றுந்தேடென்றும்
நீண்டவனைவறப் பாக்குவாள்-பின்பு
ஈடொன்றிலாதினை வாக்குவாள்-அந்த
கேடிகளாசைவைத் தையையோவையத்தில் (பெண்)

௪. நீராட்டமாடி மையிட்டுப் பொட்டிட்டு
நிரம்பவுடைமைக ளிடுவாள்-வந்து

போராட்டமாகவே சீராட்டஞ்செய்துன்றன்
புத்தியைப்போக்கடித் திடுவாள்-பின்பு
பாராட்டம்பண்ணியுன் றன்னையும்விட்டுப்
பலர்முகம்பார்த்தவள் கெடுவாள்-சுத்த
மாராட்டமாகு மனந்தெளியார்க்கு
மருண்மமையூயேயொழிந் திடுவாள்-கெட்ட
சீராட்டியாய்வந்து முடிவாள்—அந்த
நாரிகளாசைவைத்தையையோவையத்தில் (பெண்)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பாடையிலேதுறவடைந்து பரமடைந்தகுணங்குடியார் பகர்ந்தஞானம், பாடையிலேதுறவடைந்து பரமடைந்தானந்தசுகம்படைத்திடாரைப், பாடையிலேபோட்டுமிடுக்காட்டிலிடப்பிறமுனையும் பலருமந்தப்,பாடையிலேபோட்டெடுக்க நாள்வருமென்றறிந்திலையே பாவிநெஞ்சே.

---

இராகம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

பல்லவி.

எத்தனையாட்டமீ யாடினும்பதைப்பற்
றிருந்திடுவாய் நெஞ்சமே (எத்தனை)

அநுபல்லவி.

புத்திசற்றேனும் படைத்தாயெனிலந்தப்
போதனையேயுனைத் தேற்றும்-மூன்று
வாதனையும்மற மாற்றும்-யோக
சாதனைமீதினு மேற்றும் (எத்தனை)

சரணங்கள்.

க. நற்றவஞ்சித்திக்கு முத்திதருந்தச
'நீர்த்தத்தையுஞ்சுத்தி யாக்கும்-கட்டிச்

சுற்றுமறுதலக் கட்டுமவிழ்ந்திடச்
சோடசப்பின்னலை நீக்கும்-பாயும்
பத்தோடிரண்டு கலையுமெட்டாகப்
பராபரமும்முகம் பார்க்கும்-நல்ல
சுத்தமயப்படி கச்சுயஞ்சோதிச்
சுழிமுனையுந்தலை காக்கும்-எமன்
உத்தியோகந்தனைப் போக்கும்-வந்து
வெற்றிக்குணங்குடி வாய்க்கும் (எத்தனை)

உ. சாற்பசுதன்னை வெளியில்விடாமலுங்
கட்டிதொழுவினின் மாட்டும்-விட்டிற்
பாற்பசுவைப்பக்கு வத்துடன்வைத்ததன்
பாலைக்கறந்துனக் கூட்டும் ஏழை
போற்பசிதன்னையும் போக்கித்தபசுக்குப்
போவென்னநேர்வழி காட்டும்-அதன்
மேற்படைக்காலா லுதைத்தவுதைத்தின்னும்
விட்டேனோவென்றுகை நீட்டும்-உன்றன்
மாற்படியாவையுஞ் சாட்டும்-மாட்டை
மேய்ப்பக்குணங்குடி யோட்டும் (எத்தனை)

௩. வஞ்சமறவி வரவிடுதாதான
வஞ்சியராசைவிட் டோடும்-மெத்தப்
பிஞ்சபழுங்கந்தை யானபுன்மாயையைப்
பேயர்தலையினிற் போடும்-நாளும்
தஞ்சமென்றென்குரு நாதன்றிருவடி
தன்னைத்தொழுதிட நாளும்-இனி

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

என்செயலேது மில்லையென்றவரிடம்
ஏங்கியேங்கிரையப் பாடும்-நின்று
அஞ்சாமலஞ்சியே வாடும்-மிக்க
கெஞ்சிக்குணங்குடி தேடும் (எத்தனை)

௪. இடைபிங்கலைக்கிடை யில்லடையுஞ்சுழி
எளிதிற்றடையற மீறும்-பாயும்
மடைகண்டுவருமதி யமுதமுட்கொண்டு
வாவராக்காயமுந் தேறும்-இந்த
உடலோடிருந்து தபஞ்செய்யவுங்கற்பம்
கொட்டுண்டுமண்மீது சாறும்-முன்னைத்
தொடரிருவினைவொத்து நீருபட-அருள்
படருங்குணங்குடி யேறும் (எத்தனை)

௫. ஆதாரமாறினுஞ் சேதாரம்வாரா
தடுக்கடுக்ககவே விடுக்கும்-எமன்
பாதைகார்த்துநிற்குங் கண்டமெனுமயிர்ப்
பாலத்தையுமெள்ளக் கடக்கும்-பின்பு
காதுகண்ணுக்கொடு மூக்குமொன்றாகக்
கவிந்துமங்நாளந்தை யடக்கும்-என்றுஞ்
சூதானமாகிய வெட்டவெளிசென்று
சொக்கிபயக்குண்டு படுக்கும்-குரு
நாதனருளடை கிடைக்கும்-பஞ்
சோதிகுணங்குடி யடுக்கும் (எத்தனை)

௬. உந்தியின்கீழ்நின்றுதித்தசுழுமுனை
ஓங்காரக்கோதண்டம் பிடிக்கும்-வருஞ்
சந்திரன்சூரியன் மேல்வைத்துத் தாக்கிச்
சமர்பொருதுஜெயம் படைக்கும்-சற்றே

குந்தியிருந்திலைப் பாறித்தெளிந்து
குசாலாகச்சாய்ந்தங்கே படுக்கும்-அதற்
கந்தியுஞ்சந்தியு முச்சிமுக்காலமும்
ஆசரித்துப்பூசை நடக்கும்-தேவ
இந்திரன்போனின்று நடிக்கும்-இங்கே
வந்துகுணங்குடி கொடுக்கும் (எத்தனை)

எ. சொல்லித்திரிதற் கறிவுகற்றதோஷ
தோஷத்தைநாசத்தி லாக்கும்-கற்றும்
நல்லவறிவற்ற புலையரைக்காண்கி
னடுங்கியுடலெங்கும் வேர்க்கும்-மலை
கெல்லியெலிபிடித்த கதைபோற்காநக்
கேயலையாதனைக் காக்கும்-பாயும்
வல்லயம்போல்வரு மாயையாஞ்சண்டி
மாட்டுக்கும்மாசண்டி யாக்கும்-கரு
நெல்லிக்கனிகைக்குள் வாய்க்கும்-அருள்
முல்லைக்குணங்குடி பூக்கும் (எத்தனை)

அ. காமக்குரோதக் கனையைக்களைந்து
கடுஞ்சுழிக்காற்றிலே தூற்றும்-யோக
பூமிக்குளமோன வித்தைப்பதித்துப்பரி
பூரணமாய்ப்பயி ரேற்றும்-மேற்
சோமன்மதிவட்ட மீதுசுழுமுனைச்
சொக்கித்தெளிந்திடத் தேற்றும்-தாயை
வாமம்வைத்துப்பூசை பண்ணிப்பணிந்திட
வாரியமிர்தத்தை யூற்றும்-நல்ல
நேமத்துடனுனைப் போற்றும்-தாயுய
சேமக்குணங்குடி யேற்றும் (எத்தனை)

௯. இல்லறந்துறந்து வரும்பலதொல்லைகள்
எல்லாமெடுத்தெடுத் தெரியும்-மூடும்
வல்லிருளாகிய மாமாயைதந்த
மயக்கும்விட்டுவிட்டுப் புரியும்-ஒரு
எல்லையில்பேரின்ப வெள்ளப்பெருக்கில்
எடுத்துண்டுந்தன்வயி னிறையுப்-பின்பு
அல்லும்பகலுஞ் சுகானந்தநிஷ்டையில்
அண்டமும்பிண்டமுந் தெரியும்-யெங்கும்
சொல்லுமருண்மழை சொரியும்-மெத்த
நல்லகுணங்குடி புரியும் (எத்தனை)

௧0. கூசிகுலாவு மடவாரைக்கொஞ்சிக்
குலாவாமலுங்கையை விடுக்கும்-வன
வாசத்துக்கேகித் தவம்புரிதற்கிச்சை
வைத்துவைத்துத்துடி துடிக்கும்-கெட்ட
ஆசைப்பசாசத் துரத்திதுரத்திவந்
தண்டவொட்டாமலே யடிக்கும்-ஞான
தேசிகன்பர்தார விந்தத்தையேமோனச்
சின்முத்திரையாகப் பிடிக்கும்-உப
தேசத்துக்காரையந் தடிக்கும்-நமக்
கீசன்குணங்குடி கிடைக்கும் (எத்தனை)

௧௧, செத்தாலும்வைத்தடி வாங்காமனிற்கின்ற
தீரத்தையேதிர மாக்கும்-சற்றும்
மெத்தாதிபுத்திவந் தெற்றாமலுன்றனை
மேவியிருந்துகை தாங்கும்-எங்கள்
சித்தாதிசட்கருள் செய்தான்முத்தியுஞ்
சித்தியும்வெற்றியும் வாய்க்கும்-நின்று

எத்தா லினிப்பிழைப் போமெனவெண்ணாமல்
எங்கோனருட்பாது காக்கும்-ஒரு
மித்தபவங்களைப் போக்கும்-மோன
வித்தைக்குணங்குடி வாய்க்கும் (எத்தனை)

௧௨. எண்ணாதவெண்ணத்தி லாடேபடர்ந்தெழும்
இன்பவினைதத்தை வீட்டும்-கெட்ட
மண்ணான மூவாசை மண்ணாகவுநல்ல
மானாபிமானத்தை யோட்டும்-என்றன்
கண்ணேமணியேயென் கண்ணூடிலேயெனக்
கண்ணீருமுண்ணீரு மூட்டும்-பின்பு
தண்ணீருமண்ணுங் கலந்ததுபோற்சிந்தை
தத்தளிக்கவிலை நாட்டும்-நடம்
பண்ணும்பரவெளி சூட்டும்-உய்யும்
வண்ணக்குணங்குடி காட்டும் (எத்தனை)

௧௩. வித்தகனார்சொன்ன புத்திபுன்மாயையை
வேங்கைப்புலியெனச் சாடும்-நம்மை
வெற்றிகொண்மாதர் முயக்களற்கேணி
விரிவோடவுங்காயப் போடும்-உன்னைப்
பெற்றார்பிறந்தார் சுற்றத்தார்முதலான
பித்தர்க்கெல்லாமுகம் வாடும்-நல்ல
பத்தரைமாற்றுப் பசும்பொன்னையொத்த
பரவெளிபம்பர மாடும்-மேலுங்
கத்தனருளுங்கை கூடும்-நாளும்
சித்தக்குணங்குடி யாடும் (எத்தனை)

௧௪. எங்குநிறைந்த பெருப்பொருளென்னுள்
இருந்துகொண்டேவிளை யாடும்-ஒரு

## உகூஅ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கங்குகரையறப் பொங்கிப்பரவிக்
  கருணைக்கடல்வந்து மூடும்-அருள்
வங்கமுந்தங்காம லிங்குவந்தென்னை
  மகிழ்ந்தடுத்தேற்றிக்கொண்டோடும்-நாளும்
மங்காததங்க மவுனப்பொருளு
  மலைமலையாகக்கை கூடும்-இன்னும்
பங்குகொடுக்கவு நாடும்-யோகந்
  தங்குங்குணங்குடி சூடும் (எத்தனை)

கரு. வாசாமகோசர வான்பொருளென்றன்
  மடிமீதுசெங்கீரை யாடும்-மோன
தேசிகன்பாதார விந்தத்தெய்தத்தத்
  தெய்யெனக்கூத்துகள் போடும்-எங்கள்
ஈசன்றிருவரு டாணைகொட்டிப்பேர்
  இன்பக்கோலாகலம் பாடும்-எம
பாசமறுத்துக்கொண்டு டென்னச்சு மட்டமும்
  பாய்ந்துமடமடென் றோடும்-கோட்டை
வாயிற்கடந்துட்சென் றாடும்-மேலே
  பேசுங்குணங்குடி கூடும் (எத்தனை)

---

கொச்சகம்.

ஐயையோ வென்விதியை யாரிடத்திற் சொன்னாலும்
ஐயையோ வென்றே யழுங்கவலை கொள்வார்தாம்
ஐயையோ வையகத்தி லாருமிலை யுன்னையன்றி
ஐயையோ வடிமையைக்கை யணைப்பாய் குருபரனே.

இராகம்-பைரவி-சாப்புதாளம்.

பல்லவி.

ஐயையோநானென்ன செய்வேன்-என்விதிவசம்
ஆருடனேசொல்லி யழுவேன்.

அநுபல்லவி.

மெய்யெடுத் ததும்பொய்யாய் வீணாள்கழிந்து போச்சுப்
பொய்யிலாதவென் னையருளது
கையுமெய்யுமாய்க் கண்ணிற்காணேனே (ஐயை)

சரணங்கள்.

க. பார்க்கப்பலவித மறைவாய் சமையலான
பதினாலுலோகமு நிறைவாய்
வாக்குமனமுமதி னேக்கமதுவாய்நின்றுந்
தீர்க்கமா யறியாமற் றேடியே
பார்க்குள்ளே யலைந் தலைந்துங்கா ணேனே (ஐயை)

உ. முன்னோர்செய்திடுபாவ லாபமோ பாதகமோவென்
மூதேவித்தனங்கொள்பிர தாபமோ
என்னகொடுமைகளோ வென்றலைவிதிதானோ
இன்னபேதமில் லாதசோதியை
இன்னுமென்னுட் கண்ணிற்காணேனே

ந. ஆசாபாசங்களெல் லாத்தையும்விட்டும் அநுதினமும்
ஆனந்தவெள்ளத்தா ளகப்பட்டும்
ஓசைமணிபூரகத் தாள்ளெங்குந்தேடியும்
வாசமெய்த்த குணங்குடிப்பா
தேசியெய்த்து மினைத்துங்காணேனே.

## கoஉ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

சரணங்கள்.

க. உடல்பொருளாவியோ டெவையுங்கைக்கொள்ளவும்
உவந்தென்னையு முய்யக் கொள்ளவும்
நொடிக்குமுன் மனவாசி மேலேறிக் கொள்ளவும்
நூலேணிமேலேறிக் கொள்ளவும்
படுமுடிச் சானவா ருதாரம் விள்ளவும்
படிக்குப் படிகடந்து கொள்ளவும்
கடினத் துடன்கண் கண்டதையுங்கீழே தள்ளவும்
காதளவுக்குமேற் கொள்ளவும்
நடன மிடும்பரி துள்ளாட்ட மெடுக்கவும்
நடித்து நடித்துக்கொண் டாட்டங்கொடுக்கவும்
இலைபிங் கலைகண்டந் தாட்ட மொடுக்கவும்
எனக்குப் பயந்தெம னோட்டம்பிடிக்கவும் (வங்கெ)

உ. கம்பமற்றவருட் கடலுள்வாய்மடுக்கவும்
களகளென் றேசும்பா குடிக்கவும்
செம்பொற் கமலா சனமீதிற் படுக்கவும்
செங்கிரை யாடித் துடிக்கவு
வம்பரைப் போல்விளை யாட்டுப் படிக்கவும்
வாசியி லேறி நடக்கவும்
ஒன்பது வாயிலி னிலையைப் பிடிக்கவும்
ஒளியிலோடு காலை மடிக்கவும்
தம்பிரா னெனுமெல்லை கூட்டவும்
தாக்குச் சுழிமுனை பில்லைப் பூட்டவும்
எம்பிரா னென்னுங் கல்லை யோட்டவும்
எனக்குப் பயந்தெமன் பல்லைக்காட்டவும் (வங்கெ)

௩. தொட்டுப தேசித்த வுடன்சோதி தட்டவுந்
தொடுமுன்னே சிவயோகங் கிட்டவும்

எட்டுக் கயிற்றிலென் கால்ரெண்டுங் கட்டவும்
எட்டிய வன்காலைக் கட்டவும்
கட்டைப்பனைதனி லுங்கள்ளுக் கட்டவும்
கள்ளுக் கள்ளாய்ச் சும்மா கொட்டவும்
கொட்டிய கள்ளுண்ட பின்போதை முட்டவும்
குதிகொண்டு கெக்கலி கொட்டவும்
நிஷ்டை படைத்தனுபூதி மிஞ்சவும்
நிருவி கற்பச மாதி அஞ்சவும்
இஷ்டப் படிக்கரு ணின்று கொஞ்சவும்
எனக்குப் பயங்கெதம னின்றுகெஞ்சவும் (வங்கெ)

௪. கத்தன் திருவடி பெற்றவ னாகவும்
கட்டை கடைத்தேற லாகவும்
நற்றவ முற்றவஞ் சித்தனு மாகவும்
நாவு மங்களத்து ளேகவும்
பத்து வகைநாத முஞ்சுத்த மாகவும்
பத்தோ டிருகலை சாகவும்
ஒற்றைக் காலன்மயிர்ப் பாலத்தி லேகவும்
ஒருபாய்ச் சலிற்றாண்டிப் போகவும்
வைத்த தீக்ஷையுந் திருத்தமாகவும்
வாலையம் பிகை பொருத்த மாகவும்
எய்த்த வெருத்த மெருத்த மாகவும்
எனக்குப் பயங்கெதம னொருத்தன் சாகவும் (வங்கெ)

---

இராகம்-புந்நாகவராளி-ஆதிதாளம்.

பல்லவி

பானே யுனைநம்பினேன் - குணங்குடி
பானே யென்னாண் டவனே

அநுபல்லவி.

யானே யுனைநம்பி னேன் சாகச் செய்வையோ
யானாக நின்றென்னை நான்சாகச் செய்வையோ
பேய்நாய் கண்டசிறு மானாகச் செய்வையோ
பெருமானு மெய்பெரு மானாகச் செய்வையோ (யா)

சரணங்கள்,

௧, பாவைய ரைப்பாவி கூடிடச் செய்வையோ
பாவையர்க் குப்பயந் தோடிடச் செய்வையோ
பாவங்கள் வந்தெனை மூடிடச் செய்வையோ
பாவமெல் லாம்விட்டுச் சாடிடச் செய்வையோ
பாவிகள் போன்முகம் வாடிடச் செய்வையோ
பரஞ்சோதி யம்பர மாடிடச் செய்வையோ
பாவாணர் போல்வீணிற் பாடிடச் செய்வையோ
பரிபூர ணானந்தம் பாடிடச் செய்வையோ (யா)

௨, சண்டாள ரைவாழ்த்திக் கொண்டாடச் செய்வையோ
சற்குருவைப்போற்றிக் கொண்டாடச்செய்வையோ
தொண்டாசை யென்னையுந் தண்டாடச் செய்வையோ
தொண்டாசைதன்னையுந் தண்டாடச் செய்வையோ
முண்டரைப் போற்றிண்டு முண்டாடச் செய்வையோ
முத்தி தந்துதுதி கொண்டாடச் செய்வையோ
வண்டாய்த் துவண்டு துவண்டாடச் செய்வையோ
வந்தரு டந்தெனைப் பந்தாடச் செய்வையோ (யா)

௩, வெட்டவெளியிலென்னை விட்டிடச்செய்வையோ
வித்தகன்பாதத்தைக் கட்டிடச்செய்வையோ
வித்தகன் பாதத்தைக் கட்டிடச்செய்வையோ
பட்டதற்கும்பலன் கிட்டிடச்செய்வையோ

கட்டை மரம்போலப் பட்டிடச் செய்வையோ
நீசனுக் குமருளொட்டிடச் செய்வையோ
மட்டியென் றென்னை விட்டிடச் செய்வையோ
வாசியும் பாவிக்குக் கிட்டிடச் செய்வையோ (யா)

மதபேத மோதப் படித்திடச் செய்வையோ
மதமற்ற ஞானம் படித்திடச் செய்வையோ
விதியற்றுப் பிசாசை யடுத்திடச் செய்வையோ
வேதாந்த தீதையு மெடுத்திடச் செய்வையோ
விதிவந்தென் னுயிரைப் பிடித்திடச் செய்வையோ
விதியென்று காலைப் பிடித்திடச் செய்வையோ
மதுவென்று கள்ளைக் குடித்திடச் செய்வையோ
மதியமிர் தத்தைக் குடித்திடச் செய்வையோ (யா)

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

எல்லாருமாளுடரோ வெங்கள் குணங்குடியானை யிறை
ஞ்சினோர்கள், எல்லாரு மாளுடரா மெங்கள் குணங் குடி
யானை யிறைஞ்சவேண்டும், எல்லாருமாளுடரோ வெங்கள்
குணங்குடியானை யிறையே யென்றே, எல்லாரு மிறைஞ்சு
மெங்கள் குணங்குடியான் பொற்பதமெற்றெய்திடாதோ.

இராகம்-அசாவேரி-சாப்புதாளம்.

பல்லவி.

எங்கள் குணங்குடி யாண்டவன் பாதத்தை
என்றிந்தப் பாவிகண் கண்டிடுமோ.

அநுபல்லவி

பொங்குந் திருவருளுந் தங்கும் படிக்கருளும்
பூரண மயமாய் நின்ற காரணக் கடவுளான (எங்கள்)

 மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

சரணங்கள்.

௧. கூட்டிக் கருணைவிழி காட்டிக் காட்டிக் கையைக்
கொடுத்துக்கொடுத்தணைத்துப் பிடித்துப்பிடித்துமெய்யைப்
பூட்டிப் பூட்டியருள் சூட்டித் சூட்டித் தரும்
பூரணமயமாய்நின்ற காரணக் கடவுளான (எங்கள்)

௨. முத்திவித்தாய்ப்பதிந்தும் மொய்த்தபயி ராயெழுந்தும்
மூன்றுமண் டலத்தைமூட்டி மூடியொளியால் விளைந்தும்
புத்தியு மெற்றுது பூத்த பொற்பையற் புதத்தருளும்
பூரண மயமாய்நின்ற காரணக் கடவுளான (எங்கள்)

௩. வாதனை மாற்றியோக சாதனை யேற்றி யேற்றி
வாக்கு மனமணுகா வாழ்வினை வாழ்த்தியேத்தப்
போதும் போதுமெனப் போதித் தருள்புரியப்
பூரண மயமாய்நின்ற காரணக் கடவுளான (எங்கள்)

௪. சிற்பரத் துக்குட் சிறந்த தற்பரத் துக்குட் பிறந்த
சிற்பரத்துக்குட் பிறந்து சொற்படிகம்போற் சிறந்து
பொற்பிர பைக்கொப்பளிக்கும் அற்புத கர்ப்பூர மாகிப்
பூரண மயமாய்நின்ற காரணக் கடவுளான (எங்கள்)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அன்றெழுதி னவனெவர்க்கு மெங்கள்குணங் குடியானு மவன்கையாலே, அன்றெழுது மெழுத்தையழித் தெழுதிடவல் லபமெவர்க்குண் டார்க்குமில்லை, அன்றெழு மவனேதா னழித்தெழுத வல்லவன்கா ணுதலாலே, அன்றெழுதுமெழுத்தழித்தென் மண்டையிற்று னல்லெழுத்தொன்றெழுத்திடாயே,

இராகம்-பியாகடை-அடதாளசாப்பு.

பல்லவி,

ஆண்டவ னென்செய்வனோ-குணங்குடி
ஆண்டவ னென்செய்வனோ.

அநுபல்லவி.

ஆண்டவ னணைத்தென்னை யருகில்வைத் திடுவனோ
நீண்டியும் பார்க்காமற் றெருவில்விட் டிடுவனோ (ஆண்)

சரணங்கள்.

தேனைப் பழித்தவே ரின்பங் கொடுப்பனோ
தேவடி யார்கள்சிற் றின்பங் கொடுப்பனோ
மோனவ ருட்பரி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆ)

உச்சிக்குள் வைத்த பொருளைக் கொடுப்பனோ
உச்சந் தலையில்ரண்டு குட்டுக் கொடுப்பனோ
மூச்சட ரோடுசோம வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆ)

வற்றா வருட்செல்வங் கொள்ளை கொடுப்பனோ
மண்ணைத்தா னள்ளிக்கை கொள்ளக் கொடுப்பனோ
முத்தி தருமோன வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆ)

நாக்கந் நாளவாயிற் காக்கக் கொடுப்பனோ
நாய்போல வாயில்தோறுங் காக்கக் கொடுப்பனோ
மூக்கு முனையில்வன்னி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆ)

## ௧௦௮ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

௫. சிட்டணு கவும்வாசி சட்டிக் கொடுப்பனே
செட்டையிற் றுனிரண்டு கட்டுக் கொடுப்பனே
முட்டமுட்டச் சட்ட திட்டங் கொடுப்பனே
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனே (ஆ)

௬. சண்டங் கடக்கத்தான் சாட்டிக் கொடுப்பனே
காலனுக் கென்னைத்தான் காட்டிக் கொடுப்பனே
மூண்டம் படாமலே விட்டுக் கொடுப்பனே
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனே (ஆ)

௭. செத்துப் போமுன்காய சித்தி கொடுப்பனே
செத்துப்போ வென்றுசா பத்தைக் கொடுப்பனே
முத்தமிட் டிட்டுநல் லிஷ்டங் கொடுப்பனே
முற்றுமுட் டாளெனும் பட்டங் கொடுப்பனே (ஆ)

இராகம்-செஞ்சுருட்டி-சாப்புதாளம்,

பல்லவி.

ஐயையோ வென்விதிவசம் ஆருடன் சொல்வேன்

அநுபல்லவி

கையுமுடல் மெய்யென் றெண்ணிப் பொய்ய னாகினேன்( )

சரணங்கள்.

பெண்பிள்ளையென்று மனம்பித்துக்கொள்ளுதே-நாம்
என்றுமிருப் போமெனவுஞ் சண்டை துள்ளுதே ஐயை
பழிக்கோ வென்னுடலைப் படைத்து வளர்ப்பேன்-இதை
புழுக்கோ நாய்நரிக்கோ பிடுங்கக்கொடுப்பேன்(ஐயை)

கையில்வெண்ணெய் தனைவிட்டுநெய்யைத்தேடுறேன்-எங்கள்
ஐயன்பாதந்தனைவிட்டுப் பொய்யைக்கூடுறேன் (ஐ)

மாதுமக்களொன்று மென்னாதி மயங்குதே-இது
சூதுசெய்வாரோடு கூடி யாதுபோகுதே (ஐயை)

வாக்குமன மறுகாது வான்பொருளான்-அதை
நோக்கிநோக்கிப்பார்ப்பார்க்குவாய்க்குமேகொள்ளை

புந்திமகிழுண் டுடுக்கச் சிந்தை கொள்ளுதே-நாடியோ
அந்தகா ரந்தன்னை யகமாக்கிக் கொள்ளுதே (ஐயை)

காயிலே யுதிர்ந்த சருகு கனிதின்று-நாம்
ஆயுமறை முடிவைத் தேடிப்போவது மென்று (ஐயை)

தேகத்தினன்பு வெளியாக வாடினோர்-அவர்
ஆகமச் சொற்படிக்கே யருளைக் கூடினோர் (ஐயை)

ஆழிகரையின்றி நிலைநிற்க வில்லையே-யான்
பாழிலலையாதெனைக் கோர்பாதை யில்லையோ (ஐயை)

ஆசை பாசமற்றவ ரருளைப் படைப்பார்-அவர்
தேசிகன் குணங்குடித் தெருவி லிருப்பார் (ஐயை)

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்றலைவி விட்டபொல்லா விதிபானற் குணங்குடிவாழ்
விணங்குதில்லை, என்றலையி விட்டபொல்லா விதிங்கெண்
ணெ யிட்டாலு மேகுதில்லை, என்றலையி விட்டவிதிக் கினி
யெவர்பட் டுத்தொலைப்பா ரனகின் றேங்கி, என்றலையி
விட்டவிதி தனைநினைந்து பாவியா னிடைகின்றேனே.

இராகம்-ஆகிரி-அடதாளசாப்பு.

பல்லவி.

ஏதேது செய்திடுமோ பாவிவிதி-ஏதேது செய்திடுமோ.

அநுபல்லவி.

ஏதேது செய்த பெண்ணைமோசஞ் செய்யுமோ
மாதவஞ் செய்த மனுவாகச் செய்யுமோ (ஏதே)

சரணங்கள்.

௧. சற்றுநல் லறிவற்ற மாடாகச் செய்யுமோ
சாகா வரப்பெற்றுக் காடேகச் செய்யுமோ
கற்றறி மூடர்சட் கிடாகச் செய்யுமோ
கர்த்தன் குணங்குடி வீடாகச் செய்யுமோ (ஏதே)

௨. சத்திக்கத் திப்பாவி செத்திடச் செய்யுமோ
கர்த்தன் றிருவருள் பெற்றிடச் செய்யுமோ
கொத்துப்பெண் ணாசையைக் கொத்திடச் செய்யுமோ
குணங்குடி வாழ்க்கைவந் தெய்திடச் செய்யுமோ

௩. செத்த பிணத்தோடு சேர்ந்திடச்செய்யுமோ
சித்தர் கணத்தோடு சார்ந்திடச் செய்யுமோ
மெத்தப் பணந்தேடி மாய்ந்திடச் செய்யுமோ
மேலைக் குணங்குடி வாழ்ந்திடச் செய்யுமோ (ஏதே)

௪, பாழான காயத்தைப் பாழாகச் செய்யுமோ
மாழாகப் போமுன்புப் பாழாகச் செய்யுமோ
தேளான பெண்களுக் காளாகச் செய்யுமோ
தேறிக் குணங்குடிக் காளாகச் செய்யுமோ (ஏதே)

௫, தேவடி யாள்வீட்டு நாயாகச் செய்யுமோ
தேவடி யாளுமென் றூயாகச் செய்யுமோ

நாவுருசிகொண்டு பேயாகச் செய்யுமோ
நாதன் குணங்குடிக் கேயாகச் செய்யுமோ (ஏதே)

இராகம்-பரிசு, சாப்புதாளம்.

பல்லவி.

அல்லாகூ வென்னுங்கள்-சதாகாலம்
அல்லாகூ வென்னுங்கள்

அநுபல்லவி.

அல்லாகூ வென்னுங்கள் அஞ்ஞானத்தைவிட்டு
எல்லாரும்வெளிப்பட்டு இப்போதெதிர்ப்பட்டு (அ)

சரணங்கள்,

க, வகுத்தசோதி மெய்ஞ்ஞானவாரிமை மனாமுன்ன
வஞ்சமில் பரமார்த்த குருசருவியதென்ன
செகஜால வல்லதன்னுட் சிக்கிப்பலவுமின்ன
சிற்சொரூபந்தெரியாமற் செத்திறந்துபோமுன்னம்

உ, அல்லாகூவென்ற வரும்பொருளாமென்ன
அனந்த மறைகளு மப்படியே பன்ன
நல்லறிவாளருநாளுமெடுத்துச்சொன்ன
நன்மையெல்லாநமக் குண்மையிலேமன்ன (அல்)

௩, ஆசாபாசமென்னும் அழிபுத்திகளுமற்று
அள்ளிவிட்டறியவொண்ணாத ருண்ஞானத்தைபெற்று
மாசற்றொளிருமுன் மனமிருவினையற்று
மாதாபிதாவெனு மயமுழுவதுமற்று (அல்)

ச, மும்மலக் காட்டினை முழுவதையுமரிந்து
மூலநெருப்பினை மூட்டமூட்டவிரிந்து. (அல்)

## ௱௪௨ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

சின்மய ஜெகஜோதித் தெளிதர வேதெரிந்து
தேசிகன் குணங்குடி தெருவீதியிலிருந்து (அல்)

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

புனிதகுணங் குடிவாழ்க்கை போகாமற் பொங்குமி
ச்சைப் பொங்கிப்பொங்கிப், புனிதகுணங் குடிபடைத்து
ப்போகபரிபூரணபோ தகமும்பூண்டு,புனிதகுணங்குடியா
னைப் போற்றுதுபோற்றுவார்போலுமந்தப்,புனிதகுணங்
குடியானைப் போற்றிநிந்தப் புல்லனும்வாய்புலம்புவானே

இராகம்-ஆனந்தபைரவி, அடதாளசாப்பு.

பல்லவி.

கத்திக் கத்தித் தொண்டையுங் கட்டிச் செத்தேனே
காணு மெங்கள் குணங் குடிச்சித்தனே

அநுபல்லவி.

முத்தனே முத்தனே முத்தனே யென்றும்
கர்த்தனே கர்த்தனே யென்று முனைத்தேடி (கத்தி)

சரணங்கள்.

௧, நாயனே நாயனே நாயனே யென்றும்
மாயனே மாயனே மாயனே யென்றும்
தூயனே தூயனே தூயனே யென்றும்
நேயனே நேயனே யென்று முனைத்தேடி (கத்தி)

௨, ஏகனே யேகனே யேகனே யென்றும்
யோகனே யோகனே யோகனே யென்றும்
மோகனே மோகனே மோகனே யென்றும்
வாகனே வாகனே யென்று முனைத்தேடி (கத்தி)

௩, நாதனே நாதனே நாதனே யென்றும்
நீதனே நீதனே நீதனே யென்றும்
போதனே போதனே போதனே யென்றும்
தூதனே தூதனே யென்று முனைத்தேடிக் (கத்தி)
௪, சித்தனே சித்தனே சித்தனே யென்றும்
சுத்தனே சுத்தனே சுத்தனே யென்றும்
பத்தனே பத்தனே பத்தனே யென்றும்
அத்தனே அத்தனே யென்று முனைத்தேடிக் (கத்தி)
௫, ராஜனே ராஜனே ராஜனே யென்றும்
போஜனே போஜனே போஜனே யென்றும்
தேசனே தேசனே தேசனே யென்றும்
வாசனே வாசனே யென்று முனைத்தேடிக் (கத்தி)

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கண்டதெல்லாங் கனவாகக் கண்டருணாங் குடியார்கற்கருணை காட்டில், கண்டதெல்லாங் கனவாகக் கண்டருள்கொண் டவராக கருணைகாட்டின், கண்டதெல்லாங் கனவாகக் கண்டருள்கொண் டவர்போலக் கன்மியாலே, கண்டதெல்லாம் கனவாகக் கண்டிடவோர் கனவேனுங் கண்டிலேனே,

இராகம்-காம்போதி-ரூபகம்-தாளம்

பல்லவி.

கனவுங்கண் டிலனே-பாவியொரு
நினைவுங்கண் டிலனே

அநுபல்லவி.

கனவுங் கண்டிலன் காட்சி கொடுக்கவுங்
கர்த்தனருளடை காத்துக் கிடக்கவும்

## ௧௧௪ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்

மனமுந் தேறிப்போய் வாழ்வை விடுக்கவும்
மாகுணங் குடிமெய் வாழ்வைப் படைக்கவும் (கன)

சரணங்கள்.

௧. மாறுபி மான மடமையைப் போக்கவும்
மாதர்க் கடிமைப் படாதெனைக் காக்கவும்
வாறுதிபூத லயம்வந்து வாய்க்கவும்
வாசாம கோசர வாழ்க்கையுஞ் சாய்க்கவும்
மோன மவுனமணிமாலை கோக்கவும்
மூக்கு நுனியைச் சுழுமுனை யாக்கவும்
ஞானத் திருநட நாதமுங் கேட்கவும்
நாதன் குணங்குடிப் பாதையும் பார்க்கவும் (கனவு)

௨. நாதாந்த மோன குருபதம் போற்றவும்
நாவை மடக்கியந் நாளத்து ளேற்றவும்
வேதாந்த வீட்டின் வெளிவாயில் சாத்தவும்
வித்தகன் வந்து விளக்கெடுத் தேற்றவும்
சீத மதிதன் னமிர்தத்தை யூற்றவும்
சின்முத்தி ரையைத் தென்பனைத் தேற்றவும்
பூத லயத்திட் பொறிகளைத் தாழ்த்தவும்
புண்ணியன் குணங்குடி பொங்கிட வாழ்த்தவும் (க)

௩. பாங்கா யுதயமெங் கோன்வந் தடுக்கவும்
பஞ்சகோச மென்னுங் கோட்டை பிடிக்கவும்
ஓங்கார வீட்டினுக் குள்ளே யடுக்கவும்
ஒன்றுக்கு ளொன்றா யொடுங்கிப் படுக்கவும்
தேங்காய் மரத்தினிற் கள்ளு வடிக்கவும்
தேறற் றெளித்துத் தெளித்துக் குடிக்கவும்
மாங்காயுள் வண்டாய் மயங்கிக் கிடக்கவும்
வாசி குணங்குடி வாயி லடைக்கவும் (கனவு)

௪. கள்ளச் சுருத்துகள் கட்டோடே வேகவும்
கன்மந் தொலைந்து கடந்தேறிப் போகவும்
கொள்ளித் தேளான மனமாயை சாகவும்
கூர்விழி யாரிஷ்டங் கொட்டுண்டு போகவும்
உள்ளத் திருக்குமற் றுற்றமுறைகவும்
ஒப்புற வந்தப்பி யுமைவிட் டேகவும்
வெள்ளத் திருக்கரு ணையூடு சேரவும்
மெய்யன் குணங்குடிப் பையலு மாகவும் (கனவு)

௫. வேசைய ராசையை வேரோ டறுக்கவும்
வெற்றிக் கொடிகட்டி விசை முறுக்கவும்
பேசறி யாவூமர் போலெ னிருக்கவும்
பேயரைப் போலும் பிதற்றிச் சிரிக்கவும்
வாசி நடத்தி வழியைக் குறுக்கவும்
வாசற் படிகிட்ட வந்து நெருக்கவும்
ஓசை மணிமண்ட பத்தைத் திறக்கவும்
உச்சங் குணங்குடிக் குட்சற் றிருக்கவும் (கனவு)

௬. என்னைக் கெடுக்குமென் றன்னைக் கெடுக்கவும்
என்குரு பாதத்தை யெட்டிப் பிடிக்கவும்
பின்னிய பாசந்தன் பின்னல் விடுக்கவும்
பித்தம் பிடித்த மனத்தை யொடுக்கவும்
மன்னும் பரவொளி யும்பந் தடுக்கவும்
மாயைப் பசாசினை மண்ணின் மடிக்கவும்
கன்னலை யொத்தபே ரின்பம் படைக்கவும்
கர்த்தன் குணங்குடிச் சித்தங் கிடைக்கவும் (கனவு)

௭. அஞ்ச மறலிக்கு மஞ்சா திருக்கவும்
வஞ்சி யரைமுத்தங் கொஞ்சா திருக்கவும்

## ௧௬ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கஞ்சா வபின்வர்க்கங் கசப்பா யிருக்கவும்
காசாசை கொண்டு கலங்கா திருக்கவும்
நஞ்சாப்ர வஞ்சர்க்கு நஞ்சா யிருக்கவும்
நவகண்ட யோகநா லஞ்சா யிருக்கவும்
நெஞ்சம் பூதப்பற்ற நெஞ்கா யிருக்கவும்
நித்தன் குணங்குடி நித்த மிருக்கவும் (கனவு)

. பட்டிப் பசுவையுங் கட்டியே போடவும்
பாற்பசு வுங்கட் டவிழ்த்துக்கொண் டோடவும்
மட்டங் குதித்துக் குதித்துக்கொண் டோடவும்
மதிமண்ட லஞ்சென்று வருவியூ டாடவும்
கட்டமு தாண்டு கனைதீர நாடவும்
காலனை யுங்காலக் கொண்டுதை போடவும்
பட்டப் பகற்போ லருள்வந்து மூடவும்
பாக்ய குணங்குடிப் பாக்யனைக் கூடவும் (கனவு)

மண்ணான மூவாசை மாட்டேனென் றோடவும்
மாறு வனுபூதி வந்தெனை மூடவும்
எண்ணாத வெண்ணமெல் லாம்விட்டுப் போடவும்
என்றன் பிரான நளென்றனைத் தேடவும்
புண்ணாளர் போலும் புலம்பிநான் வாடவும்
போதப் பரவொளி பம்பர மாடவும்
விண்ணாடர் போற்றி செயவினை யாடவும்
மேலைக் குணங்குடி சாலையைக் கூடவும் (கனவு)

, அத்துவி தப்பிர ணவம்வந் தெற்றவும்
ஆனந்த மான பரமும்வந் தெற்றவும்
கர்த்தவி யத்தின் கடாக்ஷம்வந் தெற்றவும்
நீங்கற்ற பேரருள் கங்கைவந் தெற்றவும்

முத்திக்கு வித்தான மோனம்வந் தெற்றவும்
முப்பாழ் முடிவான மோக்ஷங்வந் தெற்றவும்
சத்துச்சித் தானந்தஞ் சற்றுமந் தெற்றவும்
சாந்தக் குணங்குடி தானுட்வந் தெற்றவும் (கஎ)

கஅ. கண்டன வெல்லாம் எனவாகக் காணவும்
கண்ணொளிக் குள்ளொளி போல்முகங் காணவும்
தொண்டரசை மூன்றுந் தொலைத்திடக் காணவும்
சுத்தம யப்படி கச்சுடர் காணவும்
எண்டிசை யுந்தொழு மெங்கோனைக் காணவும்
ஏகப ராபர வாகனைக் காணவும்
கண்டங் கடந்தநா தாக்கனைக் காணவும்
கடவு ளெனுங்குணங் குடியானைக் காணவும் (கஎ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நம்பினபேர்க் கருடருநற் குணங்குடி யானை குரு நாதன் பாதம், நம்பினபேர்க் கும்பர்களும் பணிசெய்வ ரெனமறைக ளாவில்லை யாலே, நம்புமன்பர் போலுமிந் தப்பாவியே னெக்காளு நாடி நாடி, நம்பினதற் கந்தகுண ங்குணங் குடியான்செய் ததுவுமென்ன ஞாயந்தானே.

இராகம்-செஞ்சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

நம்பின தற்குக் குணங் குடியான் செய்த
ஞாயத்தை யென்ன சொல்வேன்

அநுபல்லவி.

பம்பரம் போற்சுற்றி யயராம லுமழியாப்
பதிந்து தெனைப்பதித் திடவும்-பா

## கஅ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

கதிவந் தெனக்கெதிர்த் திடவும்-ஞான
மதியிந் தெனக்குதித் திடவும் (நம்பி)

சரணங்கள்.

க. உள்ளதெல்லாங்கொள்ளை கொண்டுகொண்டேயொரு
ஒட்டையோ டென்கையிற் கொடுத்தான்-கேளுங்
கள்ளரைப் போற்கொள்ளை கொண்டதும் பற்றமற்
காவற் கிடங்கினு மடைத்தான்-அந்தக்
கொள்ளிக்-கண்ணனென்னை யுள்ளுக்குள் ளேவிட்டுக்
கொள்ளாமலேகொன்று மடித்தான்-ஒரு
எள்ளள வேனு மிரக்கமில் லாமலே
என்காலுக் கும்விலங் கடித்தான்-சொந்தத்
தொள்ளியைப் போல்வைத்தும் படைத்தான்-காய
முள்ளு முள்ளாகவும் வடித்தான் (நம்பினே)

உ. பஞ்சைகள் போலென்றன் பாட்டிற் றிரிந்தேன்
பிடாரியைப் போல்வந்து பிடித்தான்-யார்க்கும்
அஞ்சாத கண்டனோ டாவென் றெனைப்பார்த்
ததட்டிப் பல்லைப் பல்லைக் கடித்தான்-யானுங்
கெஞ்சக் கெஞ்சவாயை மூடிமூ டென்றென்னைக்
கீழேகா லைவாரி யடித்தான்-கள்ளுங்
கஞ்சா வபின்வகை கொள்வார்க் கேயான் றேடின
கன்மமெல் லாம்வாரிக் கொடுத்தான்-என்னைக்
கஞ்சிக்குச் சாம்படிக் கடித்தான்-அவன்
நெஞ்சி லிருந்ததை முடித்தான் (நம்பினே)

ங. பெற்ற தகப்ப னமக்கிவன் றனென்றும்
பெற்றோர் பிறந்தாரை மறந்தேன்-கொஞ்சப்
புத்தியி னுலவன் பின்னலே யேகான்
புழுக்கப் பயல்போலுந் திரிந்தேன்-என்னை

முற்றிலுங் காப்பாற்று வானென்று நம்பி
முடிமேலு மேற்றிக்கொண் டிருந்தான்-அதைச்
சற்றேனு மெண்ணாம லென்முக நோக்கிச்
சாவக் கடவதென் றறைந்தான்-இன்னும்
மெத்த மெத்தவெல்லாம் பறைந்தான்-ஒரு
மித்து நின்றிப்படிக் கிறைந்தான் (நம்பின)

௪. உண்டுடுத் துப்பூண்டு சையோகித் துச்செல்வத்
தோடுறு நாளில்வந் தடுத்தான்-எந்தச்
சண்டாள னென்னத்தைக் காதிலு ரைத்தானோ
சடுதியில் வந்தெனைக் கடுத்தான்-உள்ள
பண்டம் படுதலை யெல்லாங்கைக் கொண்டுமென்
பண்டக சாலையுங் கெடுத்தான்-தன்னை
அண்டின பேரெல்லா மாளாக வம்வாரி
அளவற்ற பாக்யத்தைக் கொடுத்தான்-பின்னுங்
தொண்டு செய்யென்றெனைத் தடுத்தான்-யானுங்
கொண்ட மூவாசையை விடுத்தான் (நம்பின)

---

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

எங்கள் குணங்குடி யானே தனக்கேதா னெவனோ பின்னங் கேளீர், எங்கள் குணங்குடி யானே யெனக்குமவன் றனக்குமிடையில்லை யென்றான், எங்கள்குணங்குடியானே தனக்கு மற்றை யெவர்க்குமா யெங்கு மானால், எங்கள் குணங் குடியானை யென்றைக்கோ காண்பேனென் றிரங்கினேனே,

## ௨0 மஸ்தான்சாகிப்பு அவர்கள்பாடல்.

இராகம்-தன்னியாசி-சாப்புதாளம்.

பல்லவி

எங்கள் குணங்குடி யானை என்றைக்கோ காண்பேன்

அநுபல்லவி.

தங்குபே ரின்பந்தருமென் றன்பிரானை (எங்கள்)

சரணங்கள்.

௧. அங்கிங்கென் றெங்கும் பிரகாச மாய்நின்ற
செங்கமல பீடமிசை செங்கிரை யாடும் (எங்)

௨. சாசுவத வானந்த சகசநிஷ் டையில்
ஓசைமணித் தீபமதி லொன்றிக் கொண்டுநான் (எ)

௩. பொற்ப்ரபைக் கொப்பான கர்ப்பூர தீபம்போல்
விற்புருவ மையமணி விளக்காய் நின்ற (எங்)

௪. உனக்குள்நா னாகவும் என்றனக்குள்நீ யாகவும்
எனக்குள் நானுனக்குள்நீ யென்றதாய்நின்ற (எங்)

௫. அவனன்றி யணுவொன்று மசையாதெனுமொழிக்
கிவனென்று சொல்லவும் வல்லவ னாகியே நின்ற (எ)

௬. அண்டபிண் டமதற்கு மப்புறத் தக்கப்பு றமுங்
கொண்டபெரும்பெருமையுங் கொண்டபெரும்பொ

௭. ஆர்க்கு மரிதாகிய பேராசை மிகவுங்கொண்டு [ளான
பார்க்கக் கண்ணுயிர மும்படைத்துக்கொண்டுநான்

௮. நோக்கினுநோக்கொண்ணாத நோக்கு நோக்காய்நின்று
வாக்கு மனமற்ற பெருமா னவனாய் நின்ற (எங்)

௯. பொன்னில மாதராசையும் பூமிதனக் கேயளித்து
மன்னுமுனி வர்க்குதவு மன்னவன் றனை (எங்)

௧0. வஞ்சகம னைவஞ்சி யருமஞ்சி யொஞ்சவும்
அஞ்சுபுல வேடருமென றனைக்கெஞ்சி யஞ்சவும்(எ)

௧௧. பெண்கொண்டபேர்போலெனையு மண்கொண்டேபோ
முன் கண்கொண்ட மணியாய்நின்று காட்சியேதரவும்.

கொச்சகக்கலிப்பா.

என்னை யறிந்தே யிருந்தேன் வெகுகாலம்
என்னை மறந்திப்போ திறந்தா யிதாலமோ
என்னை யறிவா ரறிய வெளியில்மகிழ்
என்னையறி வித்தாளா யெந்தாய் குருபரமே.

இராகம்-ஆனந்தபைரவி, ஏகதாளம்,

பல்லவி

என்னை யறிந்தேனே-இனி
ஏகாந்த மானேனே

அநுபல்லவி

தன்னை மறந்து தலைகீழாய் நில்லாமல்
என்னைமறந்து முனைநினைந் திட்டபோ (தென்னை)

சரணங்கள்

௧, பார்க்கும் தினந்தோறும், பரிபூரணங் கண்டேனே
நோக்குமிடந்தோறும், நல்ல நாலினிற்சென்றேனே
ஏற்கை யுடனே யிருள்வெளி யாயிட
வாக்கு மனமறந் தாக்கிய போதினில் (என்னை)

௨, உப்புக் குறித்தான, உடலுக்கு விருந்தேனே
செப்ப முடனழகா, யெற்கது சிங்காசனந்தானே
சப்பிரம் போலதைத் தப்பாமற் சோதித்தும்
இப்புற மப்புற மொப்புற வாக்கும்போ (தென்னை)

௯, காடுமலைக ளெங்கும், பெருங் கானல் பிறந்ததுபோல்
ஆடிய சக்கரமா, யகண் டாதியஞ்சந் ததினால்
பாடிய நூலினைப் பார்த்தலை யாமலவ்
வேடிக்கைவீட்டில் விளையாடும் போதினில் (என்னை)

௧0, கன்ன மிடுங்கருவி, கரணங்களைச் சுட்டேனே
சின்னப்படுஞ்சடத்தைச் சிறைச்சாலையி லிட்டேனே
நின்னைய மான குணங்குடி நாதனை
உன்னியெல்லாம்புற மோட்டியபோதினில் (என்னை)

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்,

பெண்களுக்குப் பேயுமன மிரங்கிடுமென் றெவ்வுலகும் பேசக்கேட்டேன், பெண்களுக்குப் பேயுமனமிரங்கியொரு பேச்சேனும் பேசக்கேளேன், பெண்களுக்கு மண்களிக்கப் பெற்றபிள்ளை யாகியென்மேற் பிரியம்வைத்த, பெண்களுக்குக் குணங்குடிவாழ் வெய்தும்படிக் குபதேசம் பேசுவேனே.

இ-ம்-சௌராஷ்டிரம்-மூகாரி-சாப்புதாளம்.

பல்லவி

தாய்மார்களேபாவி சொல்வதைத்தான்சற்றுந்
தள்ளாமற் கேட்டுக் கொள்வீர்

அநுபல்லவி

பூமா தேவியானை யநேக நரகத்திற்
போகாம லும்பாது காக்கும்-நீயில்
வேகாம லும்பாது காக்கும்-நீயில்
ஆகாம லும்நம் பார்க்கும் (தாய்)

சரணங்கள்

௧, பொன்னாசை காட்டிப் புருட ருமையொரு
புண்யமும் செய்யாமற் கெடுப்பார்-பின்பு
சொன்னத்தை வாரி யிறைப்பார்-கடைசியில்
தோட்டி கையிலுமை விடுப்பார்-உங்கட்
கென்னசொன் னாலும் தெரியவில்லையினி
எதுபதே சத்தைப் படிப்பேன்-ஐயோ
தன்னாலே தாங்கெட்டா லண்ணாவி யென்செய்வான்
தண்ணீரைக் கண்ணினால் வடிப்பன்-அவன்
சொன்னதைக் கேட்டிற்கை பிடிப்பன்-உன்ன
முன்னை குணங்குடி கொடுப்பன் (தாய்)

௨, பெண்ணாலே கெட்டோமென் றுங்களைத்திட்டாக
பேரை யுலகத்திற் கண்டிலேன்-என்றன்
கண்ணனை யுங்களுக் கொத்தாசை சொல்லிக்
கருத்தி லுவப்பாரைக் கண்டிலேன்-நாளு
மண்ணான வாசை மயக்கங்கொண் டேபாவ
மண்ணை வாயிற்போட்டுக் கொள்ளுறீர்-இன்னும்
நண்ணருஞ் சொர்க்கப் பதத்தையும் விட்டு
நரகக் கனல்மூட்டிக் கொள்ளுறீர்-அதை
எண்ணாமற் றான்விட்டு நீக்கினால்-உமக்
கண்ணால் குணங்குடி வாய்க்குமே (தாய்)

௩, புதுப்பாலை தன்னையுங் கரிப்பாலை யாக்குவார்
பொன்னான மேனியும் போக்குவார்-சோதி
மதிப்போ லிவர்முகம் வரிவோடு போலாக
வாலைப் பருவத்தைப் போக்குவார்-இன்னும்
மூதுகிற் கூனுமாக்கிக் கோலுங்கை கொடுத்துங்கள்
மூர்க்கமெல் லாமறப் போக்குவார்-இவர்

கதிகெட்ட விபூசாரி யென்று புறந்திண்ணையிற்
கடத்திவைத் துயிரையும் போக்குவார்-அந்தச்
சதிகேட ருறவைத்தா ளிக்கிலை-பர
சதிதருங் குணங்குடி வாய்க்குமே (தாய்)

௭, தாங்காத் தையலுந் தருகுவர்-பின்புர்மைத்
தளரு நடைமெலு முமை யாசகுவார்-தூங்கித்
தூங்கி விழுந்தொரு தலைசுகரம் பெய்புந்
தோலூர தருதியு பாசகுவார்-முகம்
வீங்கித் தலைநடுங்கிக் கையுங்கா லுமுடங்கி
வேடிக்கை யாங்கிபுளி யாக்குவார்-மூச்சை
வாங்கிக் கொள்ளுக்கொளெனத் திரும்பித் திரிகொண்டு
வலிக்குங் கிடைபிணமு மாக்குவார்-அந்த
திக்கற்க ளுறவைத்தா ளிக்கிலை-அருள்
ஓங்குங் குணங்குடி வாய்க்குமே (தாய்)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கமாவார்களோ முகத்தின் மயிர் விரித்தோரெல்லா, மீசையுள்ளாண்பிள்ளைச் சிங்கமெவனவன்காண் குணங்குடி பாலவிரைந்து கொண்டோன், மீசையுள் ளாண்பிள்ளைச சிங்கமாகாதா னெவைக்காவான் விசையோடென்போல், மீசையுள்ளாண்பிள்ளைச் சிங்கமென் கூட மூலைவிட்டு வெளிவாரானே.

கண்டனம்.

இராகப்-அடாணா-சாப்புதாளம்,

பல்லவி,

மீசையுள் ளாண்பிள்ளைச் சிங்கங்க ளென்கூட
வெளியினில் வாருங்கள் காணும்

அநுபல்லவி.

காசி கிறைப்பயு மிரித்தா-லிரண்டுகால்
நடுவிலு மொரு கடை மயிர்தான்
ரோசங் கெடுவார்க ளென்கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை).

சரணங்கள்.

௧. படிக்கும்படி நடக்கப் படிக்கா லோபிகள்மோசுகூடப்
பதமற்றுப் போனாலும் போகட்டும்-அவர்
முடிக்கு முடிதரிக்கு முடியுமுடைய வாழ்ந்து
முடிந்து முடி போனாலும் போகட்டும்-இன்னுங்
குடிக்கக் கஞ்சியு மற்றுத் தண்டிக்குந் தனியகற்றுக்
குருடாய்ப் போனாலும் போகட்டும்-என்னை [ன்
அடித்தாலுமெலும்பெல்லாமொடித்தாலுமவர்க்கஞ்சே
அடித்தா லடித்துக்கொண்டு போகட்டும்-அந்த
கெடுவார்க ளென்கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டா லென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

௨. மடையமிரல் லாக்கூடிக் கூத்தாடிக் கூத்தாடி
வையாளி போட்டாலும் போட்டும்-இன்னும்
விடிய விடியவும் பாதகையர் மடிகளில்
விளையாடி னாலும் விளையாடட்டுக்-கள்ளுக்
குடியமிரல் லாக்கள்ளைக் குடித்துக் குடித்தவர்கள்
குடிகெட்டுப் போனாலும் போகட்டும்-ஞானம்
படியாரெல்லாமென்னைப் பழித்துப்பழித்துக்கொண்டு
பகைத்தாற் பகைத்துக்கொண்டு சாகட்டும்-அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டா லென்னுயிர்க்குயிர்தான் (மீசை)

## ௩௨௩ மஸ்தான்சாகிபு அவர்கள்பாடல்.

௧. நெடுமரம் போலோங்கி வளர்ந்து மறிவற்றவர்
நெருப்புண்ணைப் போனாலும் போகட்டும்-அவர்
இடுகுட்டிச் சுவரைப்போ லிருந்தென்ன விருந்தென்ன
எப்படிப் போனாலும் போகட்டும்-இன்னுங்
கொடும்பு மிடும்பும வப்புங் குடிகேடுங் குடிகொண்டு
கூத்தாடி னாலுங்கூத் தாடட்டும்-என்னை
மடியிற்கை போட்டிழுத் தகினுடிபோட்டு
மல்லாடி னாலுமல் லாடட்டும்-அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டா னென்னுயிர்க்குயிர்தான் (மீசை)

௨. கடுநாய்க் குட்டிகளான படுசுட்டிகண் மாமாயைக்
கதவிடுக் கிளிற்பட்டே சாகட்டும்-புலிக்
கடுநாய்க்குங் கொடிதான படுபோக் கிலிகள் சும்மா
கடுநாகில் விழுந்தே வேகட்டும்-சுற்றக்
கெடுபூண்டாக புளித்த சொடுமாடு பிடுங்கிகள்
கெடுபூண்டு களாய்த்தானே போகட்டும்-இன்னும்
நெடுமரம் போற்கொழுத்த மடவேசப்பாக் குடிக்கிகள்
நெடுமரம் போற்றுனே யாகட்டும்-அந்தக்
கெடுவார்க ளென்கடை மயிர்தான்-குணங்
குடிகொண்டா னென்னுயிர்க் குயிர்தான் (மீசை)

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சாகாமற் செத்திருக்குஞ் சற்குருவின் குணங்குடியைச்
சார்ந்தோ மாகிற், சாகாமற் செத்திருக்குஞ்சாயுச்யபதந்
தருஞ்சாட்சாதியாக்குன், சாகாமற் செத்திருக்குந் தன்ம
பத்தோர்க் குற்றடெருக்கையுங் காட்டுன், சாகாமற்செ
த்திருக்கு முத்திபுஞ் சித்தித்திடுங்காண் டக்குத்தானே.

இராகம்-பரசு-ஆதிதாளம்.

பல்லவி.

போவோங் குணங்குடிக்கெல்லோரும்-புறப்படுங்கள்
போவோங் குணங்குடிக்கெல்லோரும் (போ)

அநுபல்லவி

பாவங்கள் சோர்ந்திடுங் காய்ந்திடு நீந்திடுமே
மாய்ந்திடு மோய்ந்திடுந் தீய்ந்திடு மிக்ஷணம் (போ)

சரணங்கள்.

௧. அண்டம் புவனங்கொண்ட நிஷ்டை-சாதிக்கவறியா
மூண்டம் முழுதும்பட்ட கட்டை-மணித்தேரோடு
தண்டிகை யானைகுதிரை யொட்டை-வைத்தேறிவாழுஞ்
சண்டி யுடலுமெல்லோட லொட்டை-பின்னார்களின்பங்
கொண்டு மயங்கிக்காம வெட்டை-நஞ்சுண்டுசாமி
ரண்டுங் கெட்டவனேபேய் மட்டை அகஞுக்கந்தத்
தொண்டாசை கால்ரண்டுந்தான் குட்டை-விழிகுருடர்
நண்டளந்த நாழியவர் நமக்கேன்கா ணந்தசெஷ்டை

௨. கோத்திர லாசையான பொய்க்கூடு-ஒருவருக்குஞ்
சாற்றுக் காகா நாற்றக் கருவாடு-சொறியலமு
மூத்திரமூற்றிவைத்த வோடு-இடுபடையர்
போற்றுதற் கேற்றசண்டி மாடு-உயிர்விடுக்குங்
கூற்றுவன்கை யாயுதத்திற் கிடு-எங்கெங்குந்திரிகிற்
பூர்த்தாலும் பிறனுள்ள வீடு-சமைத்தெடுத்த
சோற்றுக் குவித்துவைத்த மேடு-இவையறியார்.
ஏற்றபடி தெட்டவே ரேனமக்கு மந்தக்கேடு. (போ)

## கஉஅ மஸ்தான்சாகிப் அவர்கள்பாடல்.

க. செட்டுசெய்ய வேண்டிய தில்லை-பாதேசிகாள்
சட்டி யெடுப்பதாலுந் தொல்லை-பிச்சைச்சஞ்சிக்குத்
திட்டமுடன் வேறுமோ கல்லை உறங்குதற்குக்
குட்டிச் சுவர்களிலுண் டெல்லை-சடுதமக்குப்
பட்டணத்தி லெவரு மில்லை அறிவுகெட்ட
மட்டி யறியானிந்தச் சொல்லை-மனக்குரங்கைக்
கட்டு வைத்தாலுங்காட்டும் பல்லை-அதைப்பிடித்த
திட்டமாமாயைப் பசாசைத்தாக்கித் துரத்திக்கொல்லப்

௨. சோம லூகயம் பாடு சாயும்-எழுஞ்சூரியன்
நாம மில்லாமலறத் தேயுட-பரவெளியில்
நேம முடன் சுழினை யாயும்-மதியமிர்த
வாம மடைதிறந்து பாயும்-தத்வாதியோடு
காமக் குரோதங்களை தீயும்-தியாகயோக
பூமி விளையுமருந் ணையம்-விளைந்தயோகம்
நாமே நைக்கொள்ளும்படி ஞாயம்-கிடைப்பதற்குச்
சாமுன்செத்த சற்குருபாதம் சார்ந்திருப்பதுவேயுபாயம்

௩. நொங்கும் நுரையுமாகப் பொங்கும்-காமக்கடலுள்
முங்கும் பாவியுடலைச் சொங்குஞ்-சொறிசிரங்கும்
வங்கும் நகநமென்று திங்கும்-நரம்புந்தோலுந்
தொங்கு மிலூமிலுப்பு மங்கும்-இல்லந்துறந்த
சிங்கசட்கிலை காணும்-பங்கம்-மேனியுயர்ந்த
தங்க மயமாய்மின் னிலங்கும்-அவர்சட்கன்றோ
தங்குஞ் சாயுச்யபதந் தங்கும்-நமக்குமதிற்
பங்குந் தந்தவிப் பராபர மருளிரங்கும் (போவோ)

---

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஐயுஞ்சுணங்குடி பானையன்றிவே றுண்டென்றுளாய்ந்
துபார்த்தேன், ஐயன்குணங்குடியானை யன்றிவேறொன்று

ன்னுளாய்க்கர்னேன், ஐயன் குணங்குடியானே யானேயெ
ன்றறிந்தபின் னென்னறிவாய்நின்ற, ஐயன் குணங்குடியா
னே யதிமோகத்திருநடன மாடுவானே.

இராகம்-தோடி-சாப்புதாளம்.

பல்லவி.

அதிமோகத்திருநடனம் புரிந்தானெங்கள்
ஐயன் குணங்குடியான்.

அநுபல்லவி.

அதிமோகத்திரு நடனம்புரிந்தானெங்கள்
ஆர்க்குந்தெரியாதென்றன் மூக்குநுனிக்குமேனின்ற (அ)

சரணங்கள்.

௧. கஞ்சினிகளைப்போலுங் காவிற்சதங்கை தொட்டுக்
 கானன்மயில்போனின்று களித்து நடனமிட்டு
 வஞ்சியர்க்காளாக்க வருமூவாசையை விட்டு
 வஞ்சகமனக்காலா லுதைத்தொருகான் மட்டு
மடித்துக்கொண்டெனக்கையிற் பிடித்துக்கொண்டரு
ண்முறை, கடித்துக்கொண்டுளத்தன்பு துடித்துக்கொண்ட

௨. முத்துக்கெதிர்நின்று முச்சுடரும்பம்பர மாட
 மோகமணிமாலைபொன் முலைமேற்பின்னலு மாட
 வகுத்தபஞ்சசோதியின் றருகிற்பாய்ந்து பந்தாட
 வாலைபம்பிகைகாலை மடித்து நடனமாட
வடித்துக்கொண்டமிர்தத்தைக் குடித்துக்கொண்டானந்தம்
படித்துக்கொண்டடிக்கடி நடித்துக்கொண்ட (அதி)

௩. பஞ்சரிக்கும்பல மறைகடாளங்கள் போட்டப்
 பரிபூரணானந்தம் படித்துமத்தளம் போடக்

கொஞ்சமனவாசியுங் கொஞ்சிலைவபாளிகள் போடக்
கோலாகலங்கள்பாடிக்கூத்துமேற்கூத்துகள்போடக்
குதித்துக்கொண்டவன்றன்னை மதித்துக்கொண்டருடன்
னை, பதித்துக்கொண்டேனைவாழ்த்திதுதித்துக்கொண்ட

௭. கவசமின்றயமிர்த கதிருமிழ்மதிப் பாலை
கலைபோலெழுந்துவந்து மகிழ்ந்திந்தப்பயன் மேலே
மாறுக்கருணைவைத்து வைத்துத்தலைமேற் காலை
மடித்துக்கொண்டவன் பல்லைக் கடித்துக்கொண்டேமன்
கையை,ஒடித்துக்கொண்டுமெய்த்தவம்முடித்துக்கொண்ட

கீர்த்தனைகள்-முற்றுப்பெற்றது.

---

## ஆனந்தக்களிப்பு.



அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

எங்கள்குணங் குடியானே யெண்ணரும் பேரருளாய் நின்றிலங்கையாலே, எங்கள்குணங்குடியானே யெண்ணரும்பே ரருளேயென்றிறைஞ்சவேண்டும், எங்கள்குணங் குடியானே யெண்ணரும்பே ரருளேயென் றிறைஞ்சிநின் றால், எங்கள்குணங்குடியானே யெண்ணரும்பே ரருளாய்நி ன் றிரங்குவானே.

எங்கள்குணங்குடி யானே-நமம்
இன்னுமருள்புரிவானடிமானே (எங்கள்)

அத்துவிதப்பொருள்காப்பாம்-எனக்-கானந்தமான பராபரங்காப்பாம், கர்த்தனியத் தருள்காப்பாம்-என்று-காட்டத்தன்காரணங்காப்பருளித்தான்—எங்கள் குணங் குடியானே." (க)

முத்தரெல்லாரையும்போற்றும்-தவ-மோன நிலைக்குரு நாதனைப்போற்றும், சித்தரெல்லாரையும்போற்றும்-என்று-சிறக்குந்தன்போற்றுத லேயருளித்தான்—எங்கள் குணங்குடியானே. (உ)

கட்டுப்படா வச்சுமட்டங்-காலைக்-கட்டறியாரைக் காலினால்வெட்டும், வெட்டியகால்களை வெட்டும்-என்று-வேகத்துடனே விதித்தருளித்தான்—எங்கள் குணங்குடியானே (௩)

மூலப்பிராணனைநோக்கும், நோக்கின்-முத்திவீடும மக்கேவந்துசாய்க்கும், வாலப்பிராயமும்வாய்க்கும்-என்று வாசியினேற்ற மகிழ்ந்தருளித்தான்-எங்கள்குணங்குடியா.

பன்னிருகால் வெளிமானே-வெளி-பாயாமலுள்ளே மடக்கிடத்தானே, சென்னியிலாறுஞ்செந்தேனே-என்று சிந்தைவைத்துக்கட்டித் தந்தருளித்தான்—எங்கள் குணங்குடியானே. (இ)

தேகாபிமானத்தைவெல்லும் - யோக - நிஷ்டைபெற்றோர்க்கு மனமதிற்செல்லும், மோகாதிபோகத்தைவெல்லும்-என்று முற்றச்செய்தேமுழு தும்மருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௬)

ஆயுங்கலையைக் குறைக்கும்-ஆறும்-அங்கணக்கோபுர வாயிற்றிறக்கும், பாயும்மதிப்பால்சுரக்கும்-என்று-படிக்கும்படிபேறும்படிக்கருளித்தான்-எங்கள்குணங்குடியானே

மூலக்கனலினைமூட்டும்-ஒளி-மூக்குமுனையிற்றிருநடங்காட்டும், பாலைக்கறந்துனக்கூட்டும்-என்று-பட்சம்வைத்தென்னைப்படைத்தருளித்தான்-எங்கள்குணங்குடியானே.

கண்டங்கடத்திவைத் தேற்றும்-இன்னும்-காரணமான கடவுளைப்போற்றும், மண்டியமிர்தத்தைத் தேற்றும்-என்று-மாசிலுபதேசம்வைத்தருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௯)

கற்பமுறைகையிற்காட்டும்-வருங்-காலனைக்காலாலுதைத்துவிட்டோட்டும், அற்பவுடற்கமுதூட்டும்-என்று-ஆசை பூட்டிபூட்டி யாண்டருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௰)

ஒங்காரசிகைக்ஷயஞ்சொல்லும்-நாளும்-உன்றனைக்கொல்லுமனத்தனைக்கொல்லும், ஆங்காரந்தன்னையும் வெல்லும்-என்று-ஆதரித்தாதரித்தாண்டருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௧)

ரீங்காரயோகமும் வாய்க்கும்-தீபு-நெற்றிக்கண்மத்தியில் வைத்தொளியாக்கும், தூங்காததூக்கமுந்தூக்கும்-என்று-தூண்டித்தூண்டிமுச்சுடரருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௨)

பாங்காகஞானம்படைக்கும்-ஐந்து-பாழ்ம்புலவேடரைப் பல்லையுடைக்கும், தாங்காதமையல்கிடைக்கும்-என்று-சாதுரியமாய்த் தடுத்தருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௩)

மேருநவெட்டியைக்கூடும்-கூடி-மேலைமுச்சந்தியில் வையாளிபோடும், காலாரிக்கொள்ளவுநாடும்-என்று-காட்டாமற்காட்டிக் களித்தருளித்தான்-எங்கள்குணங்குடியானே (௧௪)

வஞ்சியராசையை விள்ளும்-விழி-மாயாமயக்கத்தை விலென்றுதள்ளும், கொஞ்சிக்குதிரைமேற் கொள்ளும்-என்று-கோபாரத்தைக்காட்டிக்குணமருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௫)

பாலைப்புசித்திடவேண்டும்-என்-பராபரமுன்றன் பார்வைக்குத்தோன்றும், காலைப்பிடித்திடவேண்டும்-என்று-கள்ளாத்தனமாய்க்கதியருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௧௬)

தூலத்தையுங்கெட்டியாக்கும்-பின்பு-சூக்ஷத்தைக்கா
ணமிகவெளிதாக்கும், ஞாலத்தையுமவிட்டுநீக்கும்-என்று-
ஞாயமொப்பித்துநவினையருளித்தான்—எங்கள்குணங்குடி
யானே. (௧௭)

மூண்டங்கென்றுமுபதேசம்-ஓதும்-மூன்றாவினைதங்
கவிரென்றுபேசும், கண்டங்கடக்கயுங்கூசும்-என்று-கண்ட
ங்கடக்குங் கணக்கருளித்தான்-எங்கள் குணங்குடியானே.

தங்குதல் தம்பித்தலாகும்-நின்று-தங்காது-தம்பித்த
ல்ரேசித்தலாகும், பொங்குதல்பூரித்தலாகும்-என்று-பூசை
முறையும் புகன்றருளித்தான்—எங்கள் குணங்குடியானே.

முப்பாழ்முடிந்ததுப்புத்தி-அந்த-மூன்றுக்குமுந்தி ந
டந்ததுசித்தி, அப்பாழ்விடிந்ததுவெற்றி-என்றே-யாரும
றியாவறிவருளித்தான்—எங்கள் குணங்குடியானே (௨௦)

பொற்பாவைபோலொளிரூறும்-அதிற்-பொல்லாத
காயமிறந்திடுங்காணும், செப்புதற்கும்மனதாறும்-என்
று-செப்பித்திரித்திச் சிரித்தருளித்தான்—எங்கள் குணங்
குடியானே. (௨௧)

சோம்பலுந்தூக்கமுநீக்கும்-போது - சுகமதுகொள்
ளவும்போகாமலார்க்கும், பாம்பான பெண்ணாசைபோ
க்கும்-என்று-பாவிமுகத்தையும் பார்த்தருளித்தான்—எ
ங்கள் குணங்குடியானே. (௨௨)

ஓங்காரவீடுகிடைக்கும்-அதன்-ஒன்பதுவாயிலுமொ
க்கவடைக்கும், தேங்காயுங்கல்லையுடைக்கும்-என்று-தே
ங்காய்சனோதினும் பாங்கருளித்தான்—எங்கள் குணங்
குடியானே. (௨௩)

கத்தனருளுங்கைகூடும்-முகக்-கண்முன்பரவொளிப
ம்பரமாகும், வித்தகனைத்தினந்தேடும்-என்று-வேதத்தினா
ல் விவரித்தருளித்தான்—எங்கள்குணங்குடியானே (௨௪)

பூட்டையுடைத்திடவேணும்-மனப்-பூட்டையுடைக்க வைராக்கியம்வேணும், ஓட்டையுடைத்துக்கொள் காணும்-என்றே-ஒருவர்க்குமாகாவுரையருளித்தான்—எங்கள் குணங்குடியானே. (௨௦)

மூடியமாயைவிடியு-முன்னே-மோசப்படுத்து மூவாவாசைமடியும், ஓடியபிர்தம்வடியும்-என்றே-ஒதாமலோதியுரைத்தருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௨௧)

எட்டெட்டையோரெட்டுகட்டுந்-தூக்கும்-எண்ணெண்ணையுமந்தவோரெட்டுகட்டும், மூட்டுமீரெட்டையுங் கட்டும் என்று முன்னான்கைக்கட்டி முடித்தருளித்தான்—எங்கள்குணங்குடியானே. (௨௭)

பொங்குந்திருவருள்வாழி-பரி-பூரணமானபரம்பொருள்வாழி, தங்குந்திருவருள்வாழி-என்று-தன்னருள்வாழியைத்தானருளித்தான்—எங்கள்குணங்குடியானே ௨௪

ஆனந்தக்களிப்பு-முற்றுப்பெற்றது.

---

வாழி விருத்தம்.

வாழிமேல்வாழிவாழு மருள்வாரிவாழிவாழி
வாழிமேல்வாழிவாழு மருணையம்வாழிவாழி
வாழிமேல்வாழிவாழுஞ் சிவஞானம்வாழிவாழி
வாழிமேல்வாழிவாழுங் குணங்குடிவாழிவாழி.

ஆக பாடல் ௧௦௧௧.

மஸ்தான்சாகிபு அவர்கள் பாடல்
முற்றிற்று.

---

பிசுமில்லாஹிர்.

# மஸ்தான்சாகிபு அவர்கள்

# திருப்பாடற்றிரட்டு.

# திருப்பாடலகராதி.

# திருப்பாடலகராதி.

முற்றிற்று.

ஸ்ரீ சுப்பிரமணியவிலாசம் பிரஸ், மதராஸ்.